வெளியீடு எண்: 573

# திருமூலர் திருமந்திரம்

# THIRUMANTHIRAM

## ஒன்பதாம் தந்திரம்

பஞ்சாக்ஷர தீபம் என்னும் உரையுடன்





திருவாவடுதுறை ஆதீனம்

2008

உ

மரத்தை மறைத்தது
மாமத யானை
மரத்தின் மறைந்தது
மாமத யானை
பரத்தை மறைத்தது
மார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது
பார்முதற் பூதமே

- திருமந்திரம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

## குருமுதல்வர்

# அருள்திரு நமசிவாயமூர்த்திகள்

## *மகரத் தலைநாள் குருபூசை விழாமலர்*

திருவள்ளுவர் ஆண்டு 2039
மெய்கண்டார் ஆண்டு 785

*சர்வசித்து - தை - அசுவதி*

***12.02.2008***

| | | |
|---|---|---|
| வெளியீடு எண் | : | *573* |
| உரிமை பதிவு | | |
| முதற் பதிப்பு | : | *1974, 1975* |
| இரண்டாம் பதிப்பு | : | *1993* |
| மூன்றாம் பதிப்பு | : | *2002* |
| நான்காம் பதிப்பு | : | *2008* |

*விலை ரூ. 90.00*



ஸ்ரீ நமசிவாய மூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

## ஒன்பதாம் தந்திரம்

பஞ்சாக்ஷர தீபம் என்னும் உரையுடன்

இது
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்து மூன்றாவது குரு மகாசன்னிதானம்
**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
அவர்கள் அருளாணையின் வண்ணம்
வெளியிடப் பெறுவது.

உரையாசிரியர்
ஆதீன வித்துவான் க. வச்சிரவேல் முதலியார்

திருவாவடுதுறை ஆதீனம்
2008

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணைப்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

– தவத்திரு மாதவச் சிவஞான யோகிகள்.



ஆதீனம் குருமுதல்வர்

# அருள்திரு நமசிவாயமூர்த்திகள்

உ
சிவமயம்

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | திருமந்திரம் 9-ஆம்தந்திரம் |
| நூலாசிரியர் | : | திருமூலர் |
| உரையாசிரியர் | : | க. வச்சிரவேல் முதலியார் |
| வெளியிடுபவர் | : | திருவாவடுதுறை ஆதீனம். |
| வெளியீட்டு எண் | : | 573 |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | சித்தாந்தச் செய்திகள் |
| பதிப்பு | : | நான்காம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 12.02.2008 ஆதீனம் குருமுதல்வர் குருபூசை விழா |
| தாள் | : | சேஷாயி 13.7 |
| நூல் அளவு | : | 1/8 கிரவுன் |
| பக்கங்கள் | : | XLVIII + 352 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 11 புள்ளி |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை. |
| புத்தகக்கட்டு | : | பகுதித் தையல், அட்டை பைண்டிங் |
| விலை | : | 90/- |

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

திருமந்திரம் என்னும் தமிழாகமம், மக்கள் உறுதி உணர்ந்து உய்வதற்காகத் திருமூலதேவ நாயனார் அருளிச் செய்த அருமைத் திருநூல். நவகோடி சித்தவாச புரமாகிய திருவாவடுதுறையில் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்தில் வீற்றிருந்து ஆண்டுக்கொரு மந்திரமாக அருளிய தமிழ் மூவாயிரம், உலகியலைச் சுருக்கமாக அருளி மெய்ந்நெறியினை விரித்துரைப்பது. இறைவன் பொருள்சேர் புகழும் ஒழுக்க நெறிமுறைகளும், சிவநெறி நின்றோர் வரலாறும் தத்துவக் கொள்கையும் எனும் நான்கனையும் தன்பாற் கொண்டு நன்னெறியில் நிற்பார் அனைவர்க்கும் வழித் துணையாய் நின்று சிறந்து திகழ்வது.

இத்தகைய சிவமுயன்றடையும் தெய்வ அருள் ஞான நூலை மக்கள் பலரும் பொருள் உணர்ந்து போற்றிக் கற்றுப் பெரும்பயன் எய்த வேண்டி ஆதீனத்தின் குரு மகாசன்னிதானங்களாக இருபத்தொன்று இருபத்திரண்டாவது பட்டங்களில் ஞான பீடத்தில் எழுந்தருளியிருந்த ஆசாரிய மூர்த்திகள் பஞ்சாட்சர தீபம் என்னும் விளக்க உரை நூல்களைத் தொடர்ந்து வெளிவரச் செய்து உபகரித்தருளினார்கள். 1974 மற்றும் 1975ஆம் ஆண்டுகளில் இரண்டு பகுதிகளாக திருமந்திரம் 9-ஆம் தந்திரம் உரையுடன் வெளிவந்தது.

ஆதீன மரபு பேணி, செந்தமிழ்ச் சிவநெறி, விளங்கி மேம்படவும், காலத் தேவைகளுக்கேற்ற அறப்பணிகள் சிறந்து அமையவும் வேண்டுவன எல்லாம் அருளிச் சிவஞானச் செங்கோல் செலுத்தி வரும் குரு மகாசன்னிதானம்

சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இத் திருமந்திர நூலிலுள்ள நுண்மாண் அரும் பொருள்களை விளக்கித் திகழும் ஆதீனத்துப் பஞ்சாட் சரதீப உரை நூல்கள் மறு பதிப்பு பெற்றுத் தமிழ் மக்களுக்குப் பயன் படவேண்டும் என்ற திருவுளங் கொண்டார்கள். குரு மகாசன்னிதானம் அவர்களின் திருவருளாணையின் வண்ணம் திருமந்திரத் திருநூலின் பாயிரம் முதலாகவுள்ள முதல் எட்டுத் தந்திரங்கள் பஞ்சாட்சர தீப உரையுடன் மறு பதிப்பு பெற்று, சென்ற பல ஆண்டுகளில் மகரத் தலைநாள் குருபூசை விழா மலர்களாக வெளியிடப் பெற்றன. 9-ஆம் தந்திரமாகிய இந்நூல் 1993-ஆம் ஆண்டு சீர்வளர்சீர் குரு மகாசன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் மகரத் தலைநாள் குருபூசை விழா மலராக இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பெற்றது. மூன்றாம் பதிப்பாக 2002ஆம் ஆண்டு வெளியிடப் பெற்றது.

சீர்வளர்சீர் குரு மகாசன்னிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியபடி, சித்தாந்த சாத்திரங்களில் உயர் புலமை கொண்டு சிறந்து விளங்கியவர்களும் இவ் ஆதீன வித்துவானுமாகிய சிவத்திரு.க. வச்சிரவேல் முதலியார் அவர்களால் உரைவரைந்து இயற்றப்பட திருமந்திரம் ஒன்பதாம் தந்திரம் பஞ்சாட்சர தீப உரை நூல் நான்காம் பதிப்பாக சர்வசித்து ஆண்டு தைத் திங்கள் 29ஆம் நாள் (12.02.2008) செவ்வாய்க்கிழமை ஆதீனம் குருமுதல்வர் அருள்திரு நமசிவாயமூர்த்திகள் மகரத் தலைநாட் குருபூசைப் பெருவிழா நாளில் விழா மலராக மலர்கின்றது.

அன்பர்கள் இந்நூலினை சீர்வளர்சீர் குரு மகாசன்னிதானம் அவர்களது அருளாசியுடன் பெற்று ஓதி உணர்ந்து ஒழுகிப் பயன் எய்தி மேம்படுதலை விரும்பியுள்ளோம்.

**- திருவாவடுதுறை ஆதீனம்.**

# ஒன்பதாம் தந்திரம்

*(399 பாடல்கள்)*

## அதிகார அட்டவணை

## ஒன்பதாம் தந்திரத்து மந்திரத் துளிகள்...

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே 2715

ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவதும்
நன்றுகண் டீரினி நமச்சிவா யப்பழம்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே. 2961

நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்
சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே. 2769

விளக்கைப் பிளந்து விளக்கினை ஏற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்க வல்லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலும் ஆமே. 2815

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்கனே.
2943

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முதற்பதிப்பின் முன்னுரை

எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை உன்னி உருகு மனத்தராயத்
தெளிய ஓதிச் சிவாய நமஎன்னும்
குளிகை யிட்டுப்பொன் னாக்குவன் கூட்டையே.

- திருமந்திரம் 2708.

திருமூல நாயனார் சிவபிரான் அருளாணையை உணர்ந்து அருளிச்செய்த ஆதித் தமிழாகமாகிய திருமந்திர மாலை என்னும் அருமந்த நூல் ஒன்பது தந்திரங்களையும், உபோற்காதப் பிரகரணம் எனப்படும் பாயிரவியலையும் கொண்டது. இது தொன்று தொட்டுச் சித்தர்களும் மோனிகளும் விரும்பித் தங்கி அருள்நலம் நுகரும் ஞான பூமியாகிய திருவாவடுதுறையில் மூவாயிரம் யாண்டு யோகிருந்து அருளியது; உலகியல், மெய்ந்நெறி என்னும் இரண்டனுள் முன்னையதைச் சுருக்கி அடிப்படையாக வைத்துப் பின்னையதைப் பரிந்துரைப்பது; இறைவன் பொருள்சேர் புகழும், பொதுவும் சிறப்புமாகிய ஒழுக்க நெறிமுறைகளும், தெய்வத் திருநெறி நின்றோர் வரலாறும், தத்துவக் கொள்கையும் என்னும் நான்கனையும் தன்னகத்தே எஞ்சாது கொண்டு, நன்னெறி நிற்பார் அனைவர்க்கும் வழித்துணையாய் நிலைபெறும் உயர்தனித் தமிழ் முதல்நூல்.

இத்தகைய சிவமுயன்றடையும் தெய்வ அருள் ஞான நூலை மக்கள் பலரும் பொருள் உணர்ந்து போற்றிக் கற்றுப் பெரும் பயன் எய்த வேண்டி, சைவத் தொன்மைத் தெய்வ ஆதீனமாகிய திருவாவடுதுறை ஆதீனத்தின் குரு முதல்வர்கள்

திருவுள்ளம் கருணை முகிழ்த்து இருபஃது ஆண்டுகளுக்கு மேல் திருமந்திர மாநாடுகள் நடைபெறச் செய்து ஆய்வுரைகளை நிகழ்த்தச் செய்தும், எழுதுவித்து அச்சிடுவித்தும், ஆதீனத்தின் ஞானக் கருவூலமாகிய சரசுவதி மகால் என்னும் நூலகத்தில் இருந்து வந்த ஓலைச் சுவடி உரைகளைப் புத்தகமாக்கியும் உபகரித்து வந்துள்ளனர் என்பது மறக்கப்படுவதொன்றன்று. மேலும் திருமந்திர மாலையாகிய நவமணி மண்டபத்தில் உள்ள நுண்மாண் அரும் பொருள்களைத் தமிழ் மக்கள் கண்டு இன்புறுமாறு பஞ்சாட்சர தீபம் என்னும் சூழ் ஒளி விளக்கத்தையும் ஏற்றிச் சுடர்ந்தொளிரச் செய்தருளுவார் ஆயினர்.

பாயிரவியலும், முன் உள்ள எட்டுத் தந்திரங்களும் மூலமும் உரையுமாக இதுவரை இவ்வாதீனத்தில் நடைபெற்றுவரும் திருமந்திர மாநாட்டு மலர்களாகவும், குருபூசை மலராகவும் வெளிவந்துள்ளன.

ஒன்பதாந் தந்திரம் திருமந்திரத்தின் முடிநிலையாக அமைந்துள்ளது. இதன் பொருள் நிலையைச் சுருங்கச் சொல்லின் சிவபோகம் எனக் கூறலாம். சிவபோகம் என்பது ஆன்மா மலவாதனை சிறிதும் இன்றிச் சிவானந்த வெள்ளத்துள் அழுந்திச் சிவமாயிருத்தல் ஆகும். சிவாகமங்களுட் கூறப்படும் ஞான நெறியின் படி நிலைகளாகிய தசகாரியங்களுள் இது முடிந்த நிலையாக உள்ளது. இஃது இன்புறு நிலை, ஆன்ம லாபம் எனவும் குறிக்கப்படுவது. முதல்வனுக்கே உள்ளனவாகிய தன் வயத்தனாதல் முதலிய இறைமைக் குணங்கள் எட்டும், அவனைச் சார்ந்து ஒன்றுதலால் ஆன்மாவின் மாட்டு விளங்கித் தோன்ற அவ்விளக்கத்தை அழுந்தி அறிதலாகிய சிவானுபூதியைப் பெற்று நிற்கும் நிலையே இது.

தசகாரியங்களுள் சிவபோகத்திற்கு முன் கூறப்படும் சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம் என்பவை முறையே ஆறு, ஏழு, எட்டாந் தந்திரங்களில் உணர்த்தப்பட்டன.

திருமந்திரத்தின் இறுதிப் படலமாகிய ஒன்பதாந் தந்திரத்தின் இவ்விளக்கவுரையில், கற்போர் எளிதிற் பொருள் விளக்கம் பெறும்படி, செய்யுள் தோறும் கருத்துரையும், பொழிப்புரையும், விசேடக் குறிப்பும் தரப்படுகின்றன. திருமந்திரங்களின் மூலம் இயன்ற அளவு சந்தி பிரித்து அச்சிடப்பட்டு உள்ளது. அதிகாரத் தலைப்புக்களின் பொருளும் ஆங்காங்கு விளக்கப்படுகின்றது.

இத்தந்திரம் குருமட தரிசனம் முதலாக வாழ்த்து ஈறாக இருபத்து மூன்று அதிகாரங்களில் முந்நூற்றுத் தொண்ணூற்றொன்பது திருமந்திரங்களைக் கொண்டது.

ஞானகுரவன் எழுந்தருளியுள்ள திருமடத்தில் அருமறை ஒலியும், நறுமணப் புகையும், ஒளியும், கண்ணுக்கினிய காட்சிகளும் நிறைந்து தெய்வ உணர்வைத் தோற்றுவிக்கும்; அதுவே சிவன் உறையும் இடம். ஆசாரியன் திருவுருவே சிவன் திருவுரு. ஞான குரவன் உபதேச மொழியால் உணரப்படுவதே மெய்யுணர்வு. பிரணவமும் அதனின் வேறல்லாத திருவைந்தெழுத்தின் பேதங்களும் அவன் தன்னை அடைந்தார்க்குப் பக்குவம் உணர்ந்து கூறும் உறுதி மொழிகள். அவ்வுறுதி மொழிகள் எல்லா நூற்பொருளும் திரண்டு கூடிய இணை நிலையாக அமைந்து அகவிருள் கடிந்து வினைகளை நீக்குவன.

திருவைந்தெழுத்தே முதல்வன் திருவுருவாகவும் அவன்றன் திருக்கூத்தின் இயல்பு உணர்த்துவனவாகவும் உள்ளவை.

ஆன்மா சிவன் உணர்த்த உணர்வது; சார்ந்ததன் வண்ணமாய் நின்று உலகவின்பமும் சிவானந்தவின்பமும் நுகர்வது. ஆன்மா தத்துவச் சார்பு நீங்கிச் சாதனங்களில் நின்று தன்னில் அதிசூக்கும சித்தாயுள்ள சிவ முதற்பொருளை உணர்ந்து சிவமாய் நிற்றலே முடிநிலைப் பேரின்ப நிலை.

**விளக்கைப் பிறந்து விளக்கினை ஏற்றி**
**விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி**
**விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு**
**விளக்குடை யான்கழல் மேவலு மாமே.**

- திருமந்திரம் 2815

முதல்வன் சத்தியம், ஞானம், அநநதம், ஆனந்தம் என்னும் நான்கையும் தன்னியல்பாக உடையன். அவனை அவன் அருளால் தலைப்பட்டு இந்நான்கியல்பும் தம் கண்தோன்ற நிற்போர் சிவமே ஆவர். அயன் அரி அரன் எனும் மூவருள் ஒருவனாக அரன் வைக்கப்படினும் அவன் ஏனை இரண்டு உருவிற்கும் முதல் உரு என வேதாகமங்களாற் சிறப்பிக்கப்படுதல் போல, முத்தன் அணுப்பரனென வேறு வைத்துத் தொழப்பெறுவன்.

அவனை மும்மை தரும் வினைகள் பற்றுவதில்லை. உலகத்தில் வரும் மாறுதல்களுக்கும் தன் உடலுக்கு நேரும் ஊறுகளுக்கும் அவன் அஞ்சுவதில்லை; அஞ்சு வருவதும் இல்லை - என்னும் இஃது ஒன்பதாந் தந்திரத்தின் தொகைப் பொருள் ஆகும்.

மேற்காட்டிய திருமந்திரத்தில் ' விளக்கில் விளக்கை விளக்க வல்லார் ' என்றதன் பொருள், கடோபநிடதத்தில் ஐந்தாம் வல்லி இறுதியில் வரும் மந்திரங்களோடு புடைபட வைத்து உணரத்தக்கது; எல்லாப் பூதங்களின் உள்ளுயிரும்,

எவற்றையும் தன்கண் வசீகரிப்பவனும் ஓர் உருவைப் பலவாகச் செய்பவனும் ஆகிய ஒருவனை ஆன்மாவிற் காணும் வீரர்களுக்கு நிலைத்த இன்பமுண்டு; பிறர்க்கு இல்லை. நித்தப் பொருள்களுள் வைத்து நித்தனும், அறிவுடைப் பொருள்களுள் வைத்து அறிவுடைப் பொருளும், ஒருவனாய் நின்றே அனைவர் விழைவுகளையும் அளிப்பவனும் ஆயவனை ஆன்மாவிற் காணுந் தீரர்க்கே அழிவிலாச் சாந்தி ( உண்டு ); பிறர்க்கு இல்லை. என்பவை *12,13*ம் மந்திரங்களின் பொருள்.

**தன்னிற் றன்னை அறியுந் தலைமகன்**
**தன்னிற் றன்னை அறியிற் றலைப்படும்**

என்னும் அப்பர் அருண்மொழியும் ஒப்பவைத்து நோக்கத் தக்கது. திருக்கூத்துத் தரிசனத்தில் வரும் 'திருந்து நற்சீ யென்று' எனத் தொடங்கும் மந்திரத்தின் இறுதியடியின் முதற்சீர் 'திருந்தத்தீ' எனவுள்ளது; திருந்நத்தீயும் என்பது அதன் உண்மை வடிவு எனத் தெளியப்படுதலின், அவ்வாறே பதிப்பிக்கப்பெற்றது.

பதின்மூன்றாம் அதிகாரமாக ஊழ் என்னும் தலைப்பின் கீழ் வரும் சில திருமந்திரங்களின் பொருள் நிலை.

**வானந் துளங்கிலென் மண்கம்ப**
**மாகிலென் மால்வரையும்**
**தானந் துளங்கித் தலைதடு**
**மாறிலென் தண்கடலும்**
**மீனம் படிலென் விரிசுடர்**
**வீழிலென் வேலைநஞ்சுண்(டு)**
**ஊனமொன் றில்லா ஒருவனுக்**
**காட்பட்ட உத்தமர்க்கே.**

என்னும் அப்பர் அருண்மொழியோடு ஒத்திருத்தல் இன்புறுதற்கு உரியது.

பதினான்காம் அதிகாரமாகிய சிவதரிசனம் என்பது சிவபிரான் இடங்கொள்ளும் (அதிட்டிக்கும்) பொருளையும் சிவனே எனக் கண்டு தொழுது உய்யுமாறு உணர்த்துகின்றது. இங்குச் சிவம் என்றது அதன் தடத்த நிலையை.

அடுத்துவரும் சிவசொரூப தரிசனம் என்பது அவன் அருளே கண்ணாகக் காணத்தக்க சிவனது உண்மையியல்பும், அதனைத் தலைப்பட்டு இன்புறுமாறும் உணர்த்துகின்றது.

முத்திபேதம் - கரும நிருவாணம் என்னும் அதிகாரம் சீவன் முத்தி பரமுத்தி என்னும் முத்திவகையும், அந்நிலையில் செயல் அறுதி ஆமாறும் உணர்த்துகின்றது.

பதினேழாவது சூனிய சம்பாஷனை எனும் மறை பொருட் கூற்று, குறிப்பு உருவகங்களால், முன்னர்ப் பல இடங்களில் வெளிப்படக் கூறிய உண்மைகளை மாணாக்கனுக்குக் குறிப்பின் மீள நினைவிக்கும் கிளவிகளாய், அறிவுத் திறனைச் சோதிப்பதாய் அமைந்துள்ளது. இப்பகுதி ஓர்ந்து பொருள் உணரத்தக்கது; இன்பம் பயப்பதும் ஆகும்.

பின்வரும் அதிகாரம் மோனசமாதி: இஃது ஆசா நிகளம் துகளாகியபின் பேசா அநுபூதி பிறக்குமாறு உணர்த்து கின்றது.

அடுத்துவரும் வரைவுரை மாட்சி என்பது முதற் பொருள் வரைவும் (எல்லையும்), உரையும் கடந்ததாதல் கூறுகின்றது.

பின்வரும் அணைந்தோர் தன்மை என்னும் அதிகாரம், சிவஞானபோதம் முதலிய பிற்காலத்து மெய்நூல்

களுட் கூறப்படுமாறுபோல, அரன்கழல் அணைந்த திருவருட் செல்வர் உலக முகப்படும்போது, அவர் தம் அறிவு இச்சை செயல் மூன்றும் முதல்வனது தடத்த உருவைத் தலைப்பட்டு வியாபரிக்குமாறு உணர்த்து கின்றது.

இருபத்தொன்றாம் அதிகாரம் அவ்வணைந்தோர் தாம் கண்டு உணர்ந்தவாறு இறைவன் பொருள்சேர் புகழை எடுத்து ஓதுதல் பற்றி எழும் தோத்திரம் ஆமாறு உணர்த்து கின்றது.

இதனை அடுத்துவரும் சருவ வியாபி என்னும் அதிகாரம் ஆன்மாப் பாசத்தின் நீங்கிய வழி முதல்வனது வியாபகத்தைத் தலைப்பட்டுத் தானும் வியாபகப் பொருளாய் நிற்குமாறு உணர்த்துகின்றது.

இறுதியில் உள்ள வாழ்த்து உருவ மங்கலத்துடன் ஒன்பதாந் தந்திரமும் நூலும் முற்றுப் பெறுகின்றன.

இப்பகுதிக்கும் முன்னுள்ள சில பகுதிகளுக்கும் பொருந்தும் உரை காணுதற்கு உதவியாய் இருந்தவை யாழ்ப்பாணம் அறிவியல் பட்டம் உடையோன் (A Science Graduate) என்னும் புனை பெயரில், தகுந்த பெரியார் ஒருவர், ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள திருமந்திரப் பொருட் கூறுபாடு (An analysis of the Tirumantiram with notes) என்னும் ஆய்வுரை நூலும், சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீட்டு உரையும் துணையாக இருந்தன. இவற்றின் உரை ஆசிரியர் களுக்கு என் கடப்பாட்டைத் தெரிவித்துக் கொள்ளு

2 கின்றேன்.

பொதுவாகத் திருமுறைகளின் பொருண்முடிபும், சைவ சித்தாந்த சாத்திர மரபும், உபநிடத வழக்கும் பொருந்துமாறும் கடைப்பிடிக்கப்பட்டே உரை எழுதப்பட்டது.

சிவாலயங்களைப் புதுப்பித்து மகா கும்பாபிஷேகம் நடத்துதல், திருமுறைக் கருத்தரங்கம் போன்ற மாநாடுகளை அமைத்துத் தமிழ் மறையாகிய திருமுறைகளை மக்கள் பலரும் போற்றி உணர்ந்து பயன்பெறுமாறு செய்தல் முதலிய பல வகையில் செந்தமிழ் வழ்க்கும் சிவநெறி வழக்கும் வேத வழக்கும் பாதுகாத்து, திருவருள் ஞானச் செங்கோல் ஓச்சிவரும், திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் இருபத்திரண்டாவது குரு மகாசந்நிதானம் ***ஸ்ரீ–ல–ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்*** அவர்கள் திருவருள் ஆணையின்படி இப்பதிப்பு, இவ்வாண்டு இவ்வாதீனத்தில் நடைபெறும் இவ்வாதீனப் பிரதம பரமாச்சாரியரது மகரத்தலைநாட் குருபூசைப் பெருவிழாவின் அங்கமாகிய இருபத் தொன்றாம் திருமந்திர மாநாட்டு மலராக வெளிவருகின்றது.

அன்பர்கள் இதனை ஸ்ரீ–ல–ஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்களின் அருள் ஆசியுடன் பெற்று நன்றிக்கடன் பூண்டவர்களாய் ஓதி உணர்ந்து பயன் எய்தி மேம்படுக.

எம்மனோரை இத்தகைய அருட்பணிகளில் ஊக்கிப் பரிபாலித்தருளும் ஸ்ரீ–ல–ஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்களுடைய செம்பொற் கழல்களை உளங்கொண்டு சிந்தித்து வந்தித்துப் போற்றுகின்றேன்.

**இங்ஙனம்**
**க. வச்சிரவேல் முதலியார்,**
ஆதீன வித்துவான்.

திருவாவடுதுறை
1–12–1973

உ

சிவமயம்

# திருமந்திரக் கருத்து

## ஒன்பதாம் தந்திரம்

### குருமட தரிசனம்:

பூஜை, நிவேத்தியம், ஜபதபங்கள் எல்லாம் இறைவனுக்கே என்று சிவந்த மனத்தோடு, குரு மடத்தைக் கண்டவர்களே சிவனைக் கண்டவர்கள். முப்பத்தாறு தத்துவங்களும் விலக, ஞானகுரு எதிர்ப்படுவார்; சிவானந்தம் அளிப்பார். அவருடைய நிலைமையைப் பற்றி நம்மால் பேச முடியாது. அவர் சிவனே. ஞான குருவைத் தியானிப்பவர்களே இன்ப வீட்டுக்கு உரியவர்கள். மரகத மணியில் விழுந்த மாணிக்க ரேகைபோல அஞ்ஞானம் நிறைந்த உள்ளத்திலே சத்குருவின் சன்மார்க்க உபதேசம் ஒளிவிடும்.

### பிரணவ சமாதி:

பிரணவத்துள்ளேயே உரு – அரு முதலிய பேதங்களொடு இறைவன் விளங்குகிறான். அத்தியானமே முத்தி, சித்தி எல்லாம் சேர்ப்பது. அறிவும், அறியப்படு பொருளும் கடந்து பிரணவ சமாதியில் இருக்க; அங்ஙனம் இருக்கின் ஒளி தோன்றும்; அவ்வொளியே ஈசன். அவனிடமிருந்தே எல்லா ஒளிகளும் தோன்றின, எல்லாம் ஒடுங்குகின்றன. பவளம்போலும் ஒளியுடைய பவளத் திருமேனி படைத்த பரமன் என் இருளை நீக்கி என்னுள் நின்றான்.

### தூல பஞ்சாக்கரம்:

வேதாகமங்கள் அனைத்தும் ஐம்பது எழுத்தே. இந்த ஐம்பது எழுத்துக்களே ஐந்தெழுத்தாயிற்று; இந்த ஐம்பது

எழுத்துக்களும் அகர – உகர – மகரங்களாகிய பிரணவப் படைப்பே. நகர முதலாக யகர இறுதியாக உச்சரிப்பதே ஸ்தூல பஞ்சாக்கரம்; இது, காலை, மாலை இருவேளையும் ஆராயத்தக்க மந்திரம். இதனை வாயால் சொல்லியும் தோத்திரிக்கலாம். கடல் சுழியில் அகப்பட்ட கலம் போல ஐந்தெழுத்தை எணணாதவர் அவதிப்படுவர். இது குரு வழியாகக் கேட்டுச் சிந்திக்கற் பாலது.

**சூக்கும பஞ்சாக்கரம்:**

'சிவாயநம' என்னும் குளிகையைப் போட்டால் உடல் பொன்னாகும். இந்த எழுத்துக்கள் ஐந்தும் முறையே, சிவன் – சத்தி – சீவன் – மலம் – மாயை இவற்றைக் குறிப்பன வாகும். இதில் இறுதியிலுள்ள மாயையும், மலமும் நீங்கி, சீவன் சிவசத்தியுடன் சேர்ந்தால் ஆன்மாவைப் பாசம் அணுகாது. மலமற்ற உண்மை மந்திரம் 'சிவாய' என்பதே. அதிலும் யகாரமாகிய ஆன்மா தனித்திருந்து தியானிக் கின்ற அந்த வினையும் நீங்க 'சிவ' என்னும் எழுத்தாம். 'சிவ– சிவ' என்று தியானிக்க வாயு உள்ளடங்கும். அதனால் ஒளி உண்டாகும். திருவருள் விளையும். இதைத்தான் சொல்ல மாட்டார் தீவினையாளர்கள். 'நம' என்பதை நாவில் ஒடுக்கி, 'சிவ' என்பதை மட்டும் சிந்தையில் ஏற்றினால், பிறவி அறும்.

**அதிசூக்கும பஞ்சாக்கரம்:**

'சிவாயநம' என்று மன ஒருமைப்பட்டு, அபாயமற, 'சிவாய–சிவசிவ' என்று இருந்தால் ஆனந்தம் விளையும். வேதம், ஆகமம், எல்லாவற்றையும் ஓதினாலும் சிவ எழுத் தாகிய சிகாரம் ஒன்றிலேயே அவை அனைத்தும் உள்ளன.

ஆதலால் அதனை மட்டும் சந்தேகமற இருந்து சாதித்தால், கரை சேர்ந்த கலம் போல, ஆன்மா ஈடேறும்.

**திருக்கூத்து தரிசனம்:**

எங்கும் இறைவன் மேனி; எங்கும் சிவசத்தி; எங்கும் ஞானாகாசம், எங்கும் சிவமாயிருத்தலால், எங்கும் காணப்படுவதும் அவன் நடனமே. இது அவன் விளை யாட்டு. இத் திருக்கூத்து சிவானந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, தில்லைக் கூத்து, அற்புதக் கூத்து என்று ஐந்து வகைப்படும். சிவானந்தக் கூத்து முடிவில்லாச் சிவசத்தியோடு ஒன்றியிருந்து சிவம், ஞானம் கடந்து செய்யும் நடனம். இந்தக் கூத்தால் ஐந்து தொழில் ஆகிறது. இவன் கூத்தால் வேதம், ஆகமம், கீதம், அண்டம், பூதம், புவனம், நாதம் எல்லாம் ஆடு கின்றன.

**சுந்தரக் கூத்து:**

ஏழு அண்டங்களுக்கும் அப்பாற்பட்ட சதாசிவத்தின் உச்சியின் மேல் கருணையே உருவாக, உமை காண ஆடும் கூத்து. அக்கூத்து, இங்கே தேவதாரு வனம், தில்லை, திருவாலங்காடு என்ற மூன்று இடங்களில், கொடுகொட்டி, பாண்டரங்கம், கபாலக்கூத்து, ஊழி நடனம், சம்ஹாரம் முதலிய ஐந்து வகைக் கூத்துகள். முனிதாண்டவம், அனவரத தாண்டவம், ஆனந்த தாண்டவம் எனும் எட்டோடு ஆடிக் கொண்டு அமர்ந்திருக்கிறான். சுந்தரக் கூத்து ஆடுமிடம், பரமாண்டம், ஆடுகின்ற காலத்து உண்டான உலக மெல்லாம், திரும்பவும் ஆட்டம் ஓய்ந்த காலத்து அவன் அடிக்கீழ் ஒடுங்கும்.

**பொற்பதிக் கூத்து:**

ஈசானம் முதலான ஐந்து முகத்தோடும், உரு, அரு, அருஉரு, என்ற மூன்று நிலையில் நின்று ஆடுவது. இக் கூத்தில் அன்பு வைப்பவர்களுக்கு விம்முதல், வெருமுதல், விழுதல், எழுதல், மெய்சோருதல், தன்னை மறத்தல், இப்பாடுகள் சரீரத்தில் உண்டாகும். இக்கூத்தை இறைவன் ஐம்பூதங்களிலும் தனித்தனியே நின்று ஆடுகிறான். மேருவாகிய திருவம்பலம் – சுழுமுனை; பூதலம் – இடைநாடி; இலங்கை – பிங்கல நாடி.

**தில்லைக் கூத்து:**

இது அண்டங்களையும், ஆகாசங்களையும் பதி யாகக் கொண்டு, சத்தியைத் திருவம்பலமாக்கி, பரஞ்சோதி ஆடும் கூத்து, மிகுந்த குணத்தோடு, மேலான, ஆனந்தத்தில் நிறைந்து, தென்திசை நோக்கி, இருதய புண்டரீகத்தில் ஆனந்த வடிவனாய், அம்மையும் தானும் ஆடுகின்றான். அவன் ஆட, கையில் உள்ள நெருப்பு, சடை, பாதிமதி, பார், அண்டங்கள் எல்லாம் ஆடுகின்றன. இந்தக்கூத்தை குரு உபதேசப்படி ஆன்மாவினிடமாகக் கண்டு அவனுடைய கால், அதில் எழுகின்ற சிலம்போசை, பாட்டு பலவகையான ஜதி பேதங்கள் இவைகளைத் தரிசித்துத் தீதற்றேன்.

**அற்புதக் கூத்து:**

உருவின்றி ஆடும் ஆட்டம். அதில் திரிபுரையாகி இமையவள் ஒன்றியிருக்கின்றாள். மாயை, மாமாயை கடந்து நின்ற மகான்கள் காணும்படியாக. எல்லாவற்றையும் கடந்து, அறிவிற்கும் அப்பாலாய் நாயகன் செய்யும் நடம் இது. இன்ப

மெல்லாம் உமையவள் உரு. அது வெளிப்பட்டு, பின்னர் இரண்டும் ஒன்றி அற்புதக் கூத்து ஆடுகிறது. புளியைப் பார்த்தவர்களுக்கு வாயில் நீர் ஊறுவது போல இத் திருக் கூத்தைத் தரிசித்தவர்களுக்கு அருட்கண்ணீர் சுரக்கும். அறிவில் ஆனந்த அமுது ஊறும். நெருப்பு, உடுக்கை, அக்ஷமாலை, பாசம், அங்குசம், சூலம், கபாலம் இவற்றோடு அம்மை காண மாநடம் ஆடுகிறாரென்று, இக்கூத்தின் உருவத் தியானம் உரைக்கப்படுகின்றது. இந்த நடனத் திருவுருவே திருவைந்தெழுத்தின் வடிவம்.

நடராஜரது திருவுருவ அமைப்பில், அவரது உடுக் கையிலிருந்து படைத்தலும், அபய ஹஸ்தத்திலிருந்து காத்தலும், அக்கினிக் கரத்திலிருந்து அழித்தலும், ஊன்றிய பாதத்திலிருந்து மறைத்தலும் தூக்கிய திருவடியிலிருந்து அனுக்கிரஹமும் நடைபெறுகின்றன.

**ஆகாசப்பேறு:**

ஓம் என்று இறைவனைத் தியானிக்க. உடலே சிதாகாசமாம்; புற ஆகாசம், புவனமும், உலகமும்; அக ஆகாசம், சிவஞானம்; சிவாகாசம். பேரொளி. இந்த ஆகாச தரிசனமே திருநடன தரிசனத்தின் முடிந்த பேறு – தத்துவ ஞானத்தின் தன்மை அறிந்த பிற்பாடு உண்மைப் பொரு ளாகிய கடவுள் வெளிப்படும்.

திருமூலர்: 'நான் தான்' என்று பொருளை இரண்டாக எண்ணி எங்கும் அலைந்தேன். முடிவில் நான் – தான் என்ற இரண்டையும் கண்டேனில்லை. நான் என்ற ஞானத்தையும் கடவுள்தான் கொடுத்தான், அந்த அனுபவம் முதிர, 'நான்' என்றது நழுவிப் போயிற்று.

**சத்திய ஞானாநந்தம்:**

எல்லாம் பாழாய் இப்படி இருந்தது என்று சொல்ல முடியாத இன்பத்தில் ஈடுபடுவது சத்திய ஞானாநந்தம். இந்த ஆநந்த அனுபவம் பாலுள் சுவையும், பழத்துள் ரசமும், அமுதுள் இனிமையும் போல மயிர்க்கால் தோறும் நிறைந்து இனிக்கும். சமயச்சுவடுகளும் அறியாதபடி, காமாதி காரணங் களெல்லாம் கழன்று, மூன்று வகையான ஆசைகள் அற்று, இருளற்ற நெறியில் நிற்பவர்களே சொரூப உதயம் பெற்றவர். இப்படிச் சொரூப உதயம் பெற்றவர், துன்பம், இன்பம் எல்லா வற்றையும் ஒன்றாக எண்ணுவர். இறைவன் காட்டிய வழியி லன்றி, வேறெதிலும் மனத்தை ஈடுபடுத்தார்கள். அவர்களுக்கு வானம் இடிந்தால் என்ன? கடல் பொங்கினால் என்ன? கனல் எரிந்தால் என்ன? அவர்கள் நாதனை நாடி அவன் திருவடியிலேயே ஒன்றியிருப்பார்கள். சிவதரிசனம் கண்டவர்களுக்கு, போக்கு – வரவு, கேடு – ஆக்கம் ஒன்று மில்லை. உணர்வு, உயிர், புணர்ச்சி, புலவி எல்லாம் அவனே, மலரில் மணம்போலப் பிரியாதிருக்கின்ற அனுபவம் தோன்றும்.

உயிரும் சிவமும் அபேதமாக ஒன்றியிருக்கும் துரியத் தில் இறைவன் சொரூபமாயிருக்கும் தன்மை முற்றி, அந்தப் பரமுத்தியை, கற்றலும் பற்றலும் ஆகிய தொழிலற்றவர்களே அடைய முடியும்.

**சூனிய சம்பாக்ஷணை:**

ஆறு தெருக்கள். அவற்றின் முதல் சந்தி. அச் சந்தியில் நான்கு பனைமரங்கள் இருக்கின்றன. ஏறமுடியாத ஏணியைச் சாத்தி, அப்பனைகளின் மீது ஏறி, கடல் ஏழையும் கண்டேன்.

கத்தரி விதை போட்டேன்; பாகல் செடி முளைத்தது. புழுதியைத் தோண்டினேன்; பூசணி முளைத்தது. தோட்டத்திலிருந்த குடிகளெல்லாம், இதென்ன ஆச்சரியமாக இருக்கிறதே என்று என்னைக் கும்பிட்டு ஓடிப்போயினர். ஆனால் பழுத்தது வாழைப்பழம்.

* * *

ஐந்து விதையில் பசுவை விளையவைக்கிற ஒரு வயல் உண்டு. அந்த வயலுடைய தூய்மை யாருக்கும் தெரியாது. சிவனருள் இருந்தால், அந்த வயலுக்குள் புகுவது எளிது.

* * *

பள்ளிவயல் ஒன்று, பாழ்வயல் இரண்டு; ஆக மூன்று வயல்கள். அந்த மூன்றுக்குள் திருட்டு வயலும் கலந்து கிடக்கிறது. உள்ள வயலில் உழவு செய்தால், வெள்ளம் சூழ்ந்த வயலில் விளைச்சல் நன்றாக விளையும்.

* * *

மூவணை ஏர்: உழுவது மூன்று காணி. அணைகட்டி, தடி பொருந்தும்படி, நாவை அணைகோலி நடுவயலை உழ மாட்டார்கள்! காலில் விலங்கிட்டு களர் நிலத்தை உழுவார்கள்! என்ன அறியாமை!

* * *

ஏழு கிணறு; ஏற்றம் இரண்டு; மூத்தவன் இறைக்க, இளையவன் பாய்ச்சுகின்றான். பாத்தியில் பாயாமல், பாழுக்குப் பாய்ந்தால், கூத்தியாள் வளர்த்த கோழி போலாகும்.

* * *

பட்டிப்பசு இருபத்து நான்கு, குட்டிப்பசு பன்னிரண்டு (ஏழும், ஐந்தும்), குட்டிப்பசு குடம்பால் கறக்கும். ஆனால் பார்ப்பானுக்குக் கிடைத்தது பட்டிப்பசுதான்!

* * *

ஈற்றுப்பசு இருபத்து நான்கு, ஊற்றுப் பசு கறக்கிற ஒரு குடம்பால் போதும், காற்றுப் பசுவைக் கறந்து நாம் சாப்பிடும் பொழுது, மாற்றுப் பசு வந்தது தெரியாது.

* * *

தட்டான் வீட்டில் மச்சு; அதில் ஒரு செம்பாலான மொட்டு மலர்ந்திருக்கிறது; அதில் ஒரு வட்டம்; வட்டத்துள் அமுதம் ஊறிற்று. தட்டான் அதை விடாமல் தடுத்து வைத்திருக்கிறான்.

* * *

அரிப்போடுகிற நாத்தங்கால்; சேற்று வயல்; அதற்கு ஒப்பந்தமாகக் கொடுப்பதைச் செட்டாகக் கட்டி, நல்ல பசுவைப் பூட்டி, வெள்ளரி விதையை விதைத்தால், அது மேலும் மேலும் விதைகளை உண்டாக்கும்.

* * *

உழுது, எருப்போட்டு, விதைத்து, அதைக் கிளறி விட்டு, முளையை வெளியில் வரும்படிச் செய்து சோறாகவே அறுத்து உண்ணமாட்டாதவர்கள் கஷ்டப்பட்டு நெல்லை அறுக்கிறார்கள்.

* * *

மக்கள் வீணாகக் களர் நிலத்தை உழுகிறார்கள். அதில் முளைத்த கொடியும் பட்டுப்போம். இது அவர்களுக்குத் தெரிவதில்லையே!

கூப்பிட்டாலும் கொள்ளாத குள்ளநரிக் குகையோ டுள்ள ஒரு கொட்டாரம். அதில் பாசத்தை நெருப்பில் வைத்து எரித்துவிட்டு நெடுநாள் தவம் செய்தால், பெண் வந்து சேருவாள்; அவளுடைய அருளாலே அவள் வீட்டில் சுகமாக வாழலாம்.

* * *

ஒருநாள் மாலையில் மழை பெய்தது; மான் கன்று துள்ளிற்று; குலைமேல் இருந்த பழம் விழுந்தது. அப்போது கொல்லன் உலையில் வைத்த இரும்பைப் போல, சூடும் செம்மையும் ஏறவைத்து அமுதம் பொழியவைத்தான்!

* * *

ஒரு பார்ப்பான் வீட்டில் ஐந்து பால் பசுக்கள். அவற்றை மேய்ப்பவன் கிடையாது. எங்கும் வெறித்துத் திரியும். மேய்ப்பவனும் கிடைத்து, அவற்றின் வெறிப்பும் அடங்கினால், அது பாலாகச் சொரியும்.

* * *

காட்டுப்பசு ஐந்து; சிங்கம் பதின்மூன்று; தேமா இரண்டு; திப்பிலி ஒன்பது. இவை தாமாக வசப்படுமானால், மனத்திலுள்ள பகைவர்கள் வலுக்கமாட்டார்கள். அவை களை வெல்லக்கூடிய உபாயங்கள் உண்டாகும்.

* * *

எழுதாத ஏட்டிலுள்ள விஷயத்தைத் தெளியாத சிறுமி தெளிந்து சொல்ல, மலராத பூவிலுள்ள மணமுள்ள தேனை, பிறவாத வண்டு உண்டது போல்வது நம் ஆனந்த நிலை.

* * *

போகின்றன பொய்; புகுகின்றன பொய் விதை. நாவல்பழத்தையும் மேலும் மேலும் வளர்கிற பயிரையும் ஐந்து பேரும் உண்டு, எரிந்தொழிகின்ற கூறையிலிருந்து வளர்ந்தவர்கள், உய்ந்தார்கள்;

* * *

மூங்கிலில் ஒரு வேப்பமரம், வேம்பைச் சேர ஒரு பனைமரம். அப்பனையில் பாம்பு இருக்கிறது. பாம்பைத் துரத்திவிட்டு வேம்பைத் தின்பவர் இல்லை. அதனால் வேம்பு வீணாய் வெடித்துப் போகிறது.

* * *

ஒரு காட்டில் பெரும்புலி பத்து; யானை பதினைந்து; விளையாடுகிறவர்கள் பத்துப்பேர்; சாமர்த்தியசாலிகள் ஐந்து பேர்; இன்னும் மூவர், அறுவர், ஐவர்; இவர்களும் இங்கே கூட இருக்கிறார்கள். என்னே வியப்பு!

* * *

இந்த ஊரில் இரண்டு கடா இருக்கிறது. அவற்றிற்கு ஒரு இடையன். அந்த இரண்டு கடாவையும் இருத்திப் பிடித்தால் ஒரு கடாவாக மாறிவிடும்.

* * *

துணி, சோறு, எண்ணெய், ஆபரணம், அரைஞாண் கயிறு, வளையல் இவற்றையே பெரிதென்று எண்ணு பவர்கள், பாறைமீது பறக்கும் ஆடையைப் போல் பாழுங் கிணற்றில் விழுவர்.

* * *

கொட்டியும், ஆம்பலும் பூத்த குளத்திடை எட்டி, வேம்பு, வாழை, தேன், கற்கண்டு, இவையெல்லாம் கலந்து

உண்ணமாட்டாதவர்கள்; ஐயோ! பாவம்! ஏங்கி நிற்கின்றார்களே!

* * *

பொழுது விடிந்ததென்று பறவைகள் ஒலிக்கவும், பெண் விடாது கட்டித் தழுவ, போகத்தை அனுபவிக்கும் அவனுக்கு மயக்கம் நீங்காது. எவன் இந்நிலை மாறிச் சிவநிலை சேருகிறானோ, அவனுக்கு என்றும் நீங்காத இன்பம் உண்டாம்.

**மோன சமாதி:**

மோன சமாதியில் இருப்பவருக்கு இருந்த நிலையிலேயே உலகம் முழுதும் தோன்றும்; அவருக்குத் துன்பம் இல்லை. இறைவன் இவரிடத்தில் என்றும் கலந்திருக்கிறான்.

ஆநந்தம் என்பது முகத்துக் கண்ணைக் கொண்டு பார்ப்பதல்ல; அகக் கண்ணைக் கொண்டு பார்ப்பதே, எங்காவது மகள், 'அம்மா! அம்மா அப்பாவோடு என்னவோ செய்தாயே! அந்தச் சுகத்தைச் சொல்' என்று கேட்டால் சொல்வது எப்படி? பார்ப்பவர்களுக்கு, காஞ்சிரம்பழம் அழகாய்த்தான் இருக்கிறது. தின்றவரே அதன் சுவையை அறிவார்கள். ஒரு பெண்ணின் அழகையும் குணத்தையும் கொண்டவனே அறிவான். மற்றவர் எப்படி அறிவர்? ''ஆதலால் நான், கொஞ்சங்கூடச் சோராதபடி, தனித்திருந்து ஆராய்ந்து, பதறாமல் கதறாமல், கற்பனைகளெல்லாம் கடந்து, சுத்த சூனியத்திலே சிவத்தினுடைய திருவடியில் ஒதுங்குகிறேன்; சிவகதியை உணர்ந்தேன். பலயுக முடிவைக் கண்டு கொண்டிருக்கிறேன்''

அலையில்லாத ஆழ்கடல்போல, சிந்தை தெளிந்த வருக்கே சிவன் வெளிப்படுவான். இறைவன் திருவடி அடைந்த சிவஞானியருக்கு மனம் என்ற கருவி இல்லை. ஆதலால் குற்றமில்லை; நற்றமில்லை; மானம் இல்லை; அபிமானமில்லை; குணமில்லை; குலமில்லை, நல மில்லை; எல்லாம் இறைவனே. ஆதலால் கடவுளும் நானும் ஒன்றினேன். எந்த மார்க்கங்களும் எனக்கு வேண்டாம்.

ஆதலால் என்னை யாரும் அமட்ட முடியாது. சீருடன் திரிந்து கொண்டே இருப்பேன்; நமசிவாய என்ற பழத்தைத் தின்று விட்டேன். மிகமிக இனித்துக் கொண்டே இருக்கிறது; தாயுண்டு; தந்தை உண்டு; நானுண்டு; மூவரும் ஒருவ ரானோம். ஆதலால், எமன் வந்தால் ஞான வாளை எடுத்து வெட்டுவேன். சிவன் வந்தால் கூடவே போய்விடுவேன், சிவன் என்னுடைய பிணக்கைத் தீர்த்தான். அந்த நிலையில் அவனோடு அடைந்த அனுபவம் கரும்பும் தேனும் கலந்த ஒரு காயத்தில், அரும்பும் கந்தமும் போல, ஆநந்தம் உண்டாயது. அதனை விரும்பிக் கண்டேன். கண்டபிறகு கரும்பு கைத்தது! தேன் புளித்தது! பிரிந்த மனம் குவிந்தது! தவம் குவிந்தது! வாயு குவிந்தது! மனங்கடந்த முத்தி விளைந்தது! பேச்சற்ற நிலை பிறந்தது! எண், எழுத்து, பண், திறன், கண், காட்சி எல்லாம் அவனே. அவனைச் சித்தத் துள்ளே சிந்தித்தால், நமக்கு ஒரு ஊதியப் பொருளாக நம்மை அவன் ஆட்கொள்வான்.

*வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி*
*வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்*
*வாழ்கவே வாழ்கமெய்ஞ் ஞானத் தவன்தாள்*
*வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே.*

---

# NINTH TANTRAM

## GURUS MUTT:

You will meet the Gnana-Guru when you have got over the thirty-six tattvas. He will let you enjoy Sivananda. He defies description, and we can only content ourselves with stating that he himself is Siva. Those who follow the guidance of the Guru will live in the heavenly abode.

## PRANAVA SAMADHI:

In the Pranava (Om, the articulate equivalent of the primal Sound), God enlightens the soul about what is seen and what is hiden. Lift the veil dividing the instrument of intelligence from the object of intelligence and enter into Pranava Samadhi. You will see the Light that is God. All the lights emanate from Him, and it is into Him that they finally dissolve.

## MULA PANCHAKKARA:

The Vedas and the Agamas are contained in the fifty letters of the alphabet. And the sounds of these letters spring from the Pranavam, namely Om Namasivaya (Na-ma-si-va-ya) is the Mula Panchakkara which should be pondered over daily morning and evening: it should be recited. It is well that it is learnt through a Guru.

## SUTSUMA PANCHAKKARA:

The five letters in Sivayanama (Si-va-ya-na-ma) signify repectively Siva, Sakthi, Jeeva, Mala and Maya. When the last two letters "na" and "ma" Signifying respectively Mala and Maya are removed the remaining three letters Si-va-ya signify the state when the soul is freed from Mala and Maya. Sivaya therefore, is the Mantra which points to the position when the soul is rid of its impurities and ignorance. When the soul signified by "ya" loses itself in Siva and Sakthi there remain only Siova (si-va) signifying Siva and Sakthi. The soul has now ceased to exist as a separate entity and has coalesced with Siva and Sakthi. Keep your mind fixed on Siva and recite Siva. Siva and so on and on. You will find by so doing that your mastery over breath regulation is progressiely increased. You will acquire clarity of thought and purity of mind and attain God's grace.

## ADHI-SUTSUMA PANCHAKKARAM:

Recite the Panchakkara, Sivayanama and, secure mental harmony and fearlessness. Then recite Sivaya-Siva-Siva, and divine joy is yours. Do not forget that all your knowledge of the Vedas and the Agamas reaches its fruition in the single letter "Si". If you keep on probing into this truth, your soul will achieve liberation.

## SIVA'S DANCE:

Siva exists in all things and we see His dancing everywhere. Dancing is His play. This divine dance is of five kinds: Sivananda-kuthu, Sundara-kuthu, Porpathi-kuthu, Thillai-kuthu and Arputha-kuthu.

Sivananda-kuthu is the dance of Siva when united to Sakthi. He dances in boundless space far beyond the frontiers of Gnaṇa. When this dance takes place, the world and the elements and the celestial music the Vedas and the Agamas and everthing else, all these dance with Him. Out of this dance emerge His fivefold functions.

Sundara-kuthu is the dancing of mercy on the top of Sadasivam in the presence of Sakthi. (This cosmic dance is seen in this world in the forest of Devadaru in Chidambaram and Tiruvalangadu). It takes on eight variations: Kodukotti, Pandurangam, Kabala-kuthu, Ozhi-natanam, Mun-thandavam, Anavarata-tandavam and Ananda-tandavam. All the worlds come into being when this dance begins and are dissolved when it comes to an end.

In Porpathi-kuthu Siva dances with five heads and in three stages, - first when He assumes a form, the next when He is formless, and the third when He is formless though possessing a form. This dance
3 takes place separately on each of the five elements.

Those who witness it experience certain physical sensations such as moaning, stumbling and absent-mindedness.

Thillai-kuthu is His cosmic dance as Paranjoti with Sakthi as Tiruvambalam Divine joy surges over when He dances thus, facing the South; and along with him dance the fire in His hand, His matted hair the crescent moon over it and this and all other worlds. (Tirumular: "Following the guidance of my Guru I saw this dance taking place in my soul; I saw His dancing feet and the bells; I heard the musical notes of His anklets")

When Siva dances the Arputha-kuthu He has no form whatsoever and His consort also is mingled into Him as Tripurai. This dance is beyond the comprehension of intelligence, and can be viewed only by those who have cast off Maya and Ma-maya. His consort Umayal who is the personification of eternal bliss, first separates Herself from him during this dance and then coalesces with Him. The visualization here is that of Siva dancing before His consort wearing on His body fire drum beads, pasa ankusa, spear skull etc, representing the meaning of the five letters of the Panchakkara namely, Si-va-ya-na-ma

Siva in all His dancing forms is known as Nataraja. The Nataraja form depicts the following:

the drum creation; the fire in the hand destruction or dissolution: the raised hand, preservation or sustentation; the raised leg anugraha or bestowal of grace.

## AKASA-PERU:

When God is worshipped as the Pranava, Om the body is Chitakasam this world and all other worlds are Purakasam: Ahakasam is Sivagnanam: the great light is Sivakasam. The ***Summum-bonum*** of witnessing the dances of Siva is to see His form in space. God as Truth will manifest Himself when one attains tattva-Gnana (Tirumular: "I" was wandering in the wilderness under the erroneous impression that "I" and Siva where different entities. I could not see Him as long as this impression lasted. It is from Him that "I" arises and when I got to know this truth the "I" slipped away")

## SATYA-GNANANANDA:

When the effects of twofold Karma are dissipated by experiencing pain and pleasure, when the soul regards pain and pleasure with equanimity neither fearing the evil effects of evil deeds nor desiring the good effects of good deeds, it enjoys Satya-Gnanananda. Those who have cut down all the ties those who have seen that which remains inaccessible to all the religions of the world and stand under His

light get Sorupa-Udayam. Such men are affected by neither pain nor pleasure and never once deviate from the happy path shown by Him. What does it matter to them if the skies fall down or if there is a deluge? They are mingled into Siva and, therefore they need neither entry nor exit. They have no existence other than that of Siva. When soul and Siva are thus mingled into one. Para-Mukthi is attained.

## A TALK FROM THE VOID:

Six streets. The first lane that cuts into them has four palmyra trees. There is a ladder which is difficult to climb. However I used this ladder and climbed up. From the top of the trees, I saw the seven seas. (Exp. Six streets - Aradhara: the first lane - Muladhara: four palmyra trees - the lotus in the Muladhara with four petals: ladder - Sushumna; seven seas - seven groups of living beings.)

* * *

I planted brinjal seeds, but a sour species sprouted up. I dug into the sand and pumpkins came out. The astonished gardeners bowed to me hurriedly and ran away. In the end, however, these plants grew banana fruits. (Exp. Brinjal seed - yogas; sour species - Vairagya (unswerving determination); dug into the sand- probed into the eternal verities; pumpkin - Siva; gardeners - sense organs; banana fruits - liberation of the soul)

There is a farm where grows a cow born of five seeds. No one realises the purity of this field. One can enter it only if one is blessed with God's grace. (Exp Five seeds - Five sense organs: cow - soul; field - Tirodhana Mala).

* * *

Three ploughs three acres of land. Fools! Why do they not put up the bunds, bend the tongue, thrust the point deep and plough the central field? What folly is it that they should plough the barren field with their legs tied to chains. (Three ploughs - the flow of breath through Ida and Pingala and in the Sushumna; three acres of land - the triangular Chakra or Centre in the Muladhara; put up the bunds - pranayama or breath regulation; bend the tongue - block the throat; central field - Kundalini yoga; tied to chains - entangled in worldly attractions.)

* * *

Seven wells and two water-bailers. The elder brother lifts the water while the yonger brother diverts it into the field. If water does not flow into the plot where seedlings grow and is thus wasted, it resembles the hen of a public prostitute. (Exp. Seven wells Aradhara and the Amrit (Divine Nectar) in the Sahasrara; two water-bailers- Ida and Pingala: water - Amrit; plot where seedlings grow - Sushumna: the

hen of a public prostitute - a thing which is not under the effective control of a single person.)

*  *  *

Twenty-four cows in the pen. A second herd of twelve cows in two groups of seven and five. One can get a big pot of milk from a single cow in the second herd. But the Parppan gets a cow only from out of the twenty-four in the pen (Twenty-four cows in the pen - twenty-four Anma-Tattvas; the seven cows in the second herd - the seven kinds of Vidya-tattvas; the five cows in the second herd- Siva - Tattvas; parppan - soul.)

*  *  *

The goldsmith's house has a wooden loft, and in it a red bud has blossomed. there is a circle in it which contains a truth. Amrit springs from this circle. The goldsmith is very careful in retaining the Amrit. (exp. Wooden loft-skull; red bud - cell; circle - Pranava; a truth - Panchakkara; Amrit - Sivananda)

*  *  *

The soil in the seed-plot is eroding. The field is flooded. If however, ploughing is done with a good cow and the seed-plot is sown with ***Vellari*** seeds a bumper growth of seedlings can be had. (Seed-plot

- human body; the flooded field - mind; good cow - Prana or breath; ***Vellari*** seed - Bindu-dhyana; bumper growth of seed-lings - moksha or liberation of the soul.)

* * *

They have done manuring ploughing and sowing. They scratch the ground so as to enable the seedlings to sprout. And then they cut the crops and harvest the paddy. What a waste of labour when they can eat cooked rice straight from the crops! (Manuring - Suddha - Vasana; ploughing - undergoing distress; seed - Mona; scratch the ground - make an effort; seedling - the beginning of Mona; to bring out - to control the Vishukthi; cooked rice - Amrit; paddy - the fruit of Kameeyam.)

* * *

They plough the salt-marsh in vain. Even if some seedlings manage to come out, they will soon wither away. How is it that they are not aware of their useless effort? (Salt-marsh - trivial matter; seedling - effort)

* * *

A tent with a fox-hole in it. In this tent put Pasa into the fire, burn it and then perform tapas for

a very long time. If you do so, a woman will appear. With her blessings, you can live happily in the tent. (Fox-hole - mind; tent - body; fire - Siva; woman - Sakthi-nipatham.)

*     *     *

One day it rained on the hill. Deer herds pranced out. A fruit fell down from a bunch. The blacksmith was heating iron in his foundry and poured. amrit on the iron when it became red-hot. (Hill-Meru; rain - the flow of Amrit; deer - soul; fruit - the soul's experience; blacksmith - Siva; foundry - His grace; Amrit - Sakthinipatham.)

*     *     *

There are five milch-cows in the Parppan's house. No shepherd for grazing them. They are let loose and are running about madly as they please. But when their madness abates, they are quiet, and give plenty of milk. (Parppan - soul; house - body; five milch cows - Panchapranan; milk - Sivananda.)

*     *     *

Five forest-cows thirteen lions, two ***themas*** and nine ***thippilis***. If they are caught, the enemies in the mind cannot grow more powerful, and then ways can be found to subdue them. (Five forest-cows -

Panchapranan; thirteen lions - five Gnanendriyas plus five Karmendriyas plus Buddhi Siddhi and Ahankara; two ***themas*** - to view pain and pleasure with equanimity; nine ***thippilis*** - Sravanam. Kirtanam, Smaranam, Sevai, Archana, Adimai Vandhanam; Sakyamand Atma-nivedhanam; enemies - Karma-krotha-lopa-moha-madha-matsaryas; way - vairagya.)

*     *     *

A small girl interpreted correctly the meaning of what is written in an unwritten book, even as the bee which is not hatched from egg drinks honey from a flower that has not come out of any bud. (Unwritten book - Veda; a small girl - Chit-Sakthi; a flower that has not come out of any bud - jeeva; honey - Ananda; the bee that is not hatched from egg - the Jeeva afflicted with cares.)

*     *     *

It is a false exit; the entry is a false seed, Those five men ate fruits from a blackcherry, and lived on the top of the roof. (False exit - Resaka; false seed - puraka; Blackcherry - body; fruits - the fruits of Karma or Iruvinai. five men - Gnanendriyas; roof - body.)

*     *     *

A margosa tree in a bamboo bush, and embracing the margosa is a palmyra tree. Under the palmyra lives a snake. None is bold enough to drive the snake and eat the margosa fruit. The margosa tree therefore, does not benefit anyone. (Bamboo) bush - mind; margosa tree - Siva palmyra tree - Tirodhana Sakthi, snake - ignorance; does not benefit anyone - Sivananda is not attained.)

* * *

In the forest, there are ten big tigers and fifteen elephants. Ten man are playing there. Also there are five skilled men besides three groups of three, five and six. What a strange company! (Ten big tigers - Dasanadi; fifteen elephants - five elements plus five Tanmatras plus five Karmendriyas. five skilled men - five Gnanendriyas; three men - three Gunas; five men - five Avasthas; six men - six Vigaras.)

* * *

There are two rams in the village. They belong to a shepherd. If only he could press them together, they will become a single ram. (Village - body; two rams - Resaka and Puraka; shepherd - jeeva; a single ram - Kumbhaka.)

* * *

There are many who think the most of clothing, food, oil, ornaments, waist-string, bangles etc., Such men fall down into the deserted well, like the cloth blown by winds from the hill-top.

* * *

They sit not beside the lily-pond and eat the sumptuous food laid on the ground Instead they are standing silently with drawn faces.

* * *

The sun peeps through the cracks in the eastern sky and the birds are singing. He is still embracing her, unwilling to come out of the trance. (Exp. Only those who can rise above the weakness of the flesh and grasp Siva can enjoy His bliss.)

## MONA SAMADHI:

Those in the state of Mona-Samadhi can see the entire universe within themselves without moving an inch. They never experience pain, for they are merged in Siva.

Ananda should be felt by the mind; it cannot be seen by the eyes. A woman cannot explain the joy she shared with her husband to her daughter. The sweetness of a fruit can only be enjoyed by eating

it. Only a husband knows the charms of his wife. (Tirumular: "Therefore, I shunned all disquieting thoughts sat down and searched within me calmly. I have bound myself to His feet. Siva can be comprehended only by those in whose mind the waves have ceased to beat. mind as an instrument becomes superfluous to those who have reached His feet. They commit no errors: they do not smell; their sense organs are quiescent; they are sans bias of any kind. The Supreme Being is everything I am one with Him. I do not need any system of metaphysics. I am not afraid of anybody. I am treading the correct path with dignity. I have consumed the fruit of Namasivaya. I am still enjoying its sweetness. The three of us, my Father, Mother and I have become one entity. If the God of Death dares to approach me I shall kill him with the sword of Gnana. But if Siva appears I shall go with Him.

Siva removed the dishamony in me. He freed me of my physical limitations and took me under His protection. When I experienced Him, it was like drinking honey and sugarcane juice. But I drank again, and found that the honey and sugarcane juice had turned sour! And then my mind closed down. My tapas ended. I ended everything, and attained the state where the mind ceases to work and the mouth closes in silence.)

**-SIVAM-**



பசு படுதுயர் கண்ட யோகியர் நிலை

உ
சிவமயம்

கயிலாயத்து ஒருசித்தர் பொதியில் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருதும் மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயரம் நீடும்
பசுக்களைக்கண்டு அவன்உடலிற்
பாய்ந்து போத
அயலாகப் பண்டைஉடல் அருளால் மேவி
ஆவடுதண் துறைஆண்டுக்கு ஒருபா
வாகக்
குயிலாரும் அரசடியில் இருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகி னாரே.

–திருத்தொண்டர் புராணசாரம்.
–ஸ்ரீஉமாபதி சிவம்.



திருமந்திரம் அருளிய

திருமூலதேவ நாயனார்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

(பஞ்சாட்சர தீபம் என்னும் உரையுடன்)

## ஒன்பதாம் தந்திரம்

## (மகுடாகமம்)

### 1. குருமட தரிசனம்

அஃதாவது தொன்றுதொட்டு வரும் கேள்வியோடு அநுபவமும் உடைய ஞானகுரு எழுந்தருளியுள்ள திருமடத்தைக் கண்டு தொழுதல்.

**பலியும் அவியும் பரந்து புகையும்**
**ஒலியும்எம் ஈசன் றனக்கென்றே உள்கிக்**
**குவியுங் குருமடங் கண்டவர் தாம்போய்த்**
**தளிரும் மலரடி சார்ந்துநின் றாரே.** 2648

கருத்து: இப்பாட்டு குருமடத்தின் இயல்பும் அதனைக் கண்டு தொழுவார் எய்தும் பயனும் கூறுகின்றன.

பொழிப்புரை: தெய்வத்திற்கு கொடுக்கப்பெறும் சோற்றுத் திரளும், சிவாங்கியிற் பெய்யும் நெய், பொரி முதலிய அவியும் எங்கும் பரவி, ஆங்கு எழும் நறும்புகையும் சிவ ஒலியும் எம்மை ஆளும் சிவபிரானுக்கே ஆகின்றன எனக் கண்டு நினைந்து அன்பர்கள் வந்து திரளும் குருமடத்தைக் கண்டு தொழுவோர் உலகெலாம் தோன்றும் மலர் போன்ற சிவனடியைச் சென்று சார்ந்து நிற்பவர் ஆவர்.

விசேடக் குறிப்பு: பரந்து – பரவியிருத்தலால், ஒலி – தோத்திரம்: மந்திரம் முதலியவற்றின் ஒலியும், முழக்கு ஒலியும். குவிதல் – மக்கள் உள்ளங்கள் ஒருங்குதலும், கைகள் மார்பின் முன்னும் சென்னியின் மேலும் குவிதலும் ஆம்.

தளிரும் – மூவகை உலகும் முகிழ்க்கும். மலர் அடி – எங்கும் விரிந்த அடியும் ஆம். (1)

**இவனில்ல மல்லது அவனுக்கங் கில்லை**
**அவனுக்கும் வேறில்லம் உண்டா அறியில்**
**அவனுக் கிவனில்லம் என்றென் றறிந்தும்**
**அவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே.** 2649

க–து: இஃது இறைவனுக்குச் சிறந்த இடம் ஞான குருவின் உள்ளமே என்கின்றது.

பொ–ரை: சீவன் முத்தனது உளம் அன்றிச் சிவனுக்கு வேறு இடம் இல்லை. அச்சிவனுக்குத் தனியாக ஓர் இல்லம் உள்ளதாக எண்ணி ஆராயின், அஃது இவன்றன் இல்லமேயாம் என்றே மீள மீள அறியப்படுகின்றது. இங்ஙனமாகவும், சிவனைச் சிவஞானிக்கு வேறு என்று சிலர் அறியாமையினால் அரற்றுகின்றார்கள்.

வி–கு: இல்லம் – தங்கும் இடம். ஞானியின் உள்ளம், உடல், மடம் மூன்றும் சிவன் உறைவிடமே என்றபடி. (2)

**நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்**
**கூடும் சிவனது கொய்மலர்ச் சேவடி**
**தேட வரியன் சிறப்பிலி எம்மிறை**
**ஓடும் உலகுயி ராகிநின் றானே.** 2650

க–து: இஃது இறைவன் எல்லாமாய் நிற்கும் பொது இயல்பு கூறுகின்றது.

பொ–ரை: இறைவனது தன் இயல்பையும் பொது இயல்பையும் நாடி அறிதற்கு வாயிலாக உள்ள மிகு சைவத் துறையை வேதநெறியிற் சென்று யான் கண்டு கொண்டேன்; கொண்டபின் உயிர்கள் கூடுதற்கு உரிய ஆய்ந்து கொய்யப்படும் மலர்கள் சூழ்ந்துள்ள தன் செய்ய அடி தொழுவார்க்கு அன்றி அறிவரியனும், தன் சிறப்பியல்பு பலருக்கும் தெரியப்படாதவனும் ஆன எம் இறைவன் உலகும் உயிரும் ஆகி நின்றான் என்பதை உணர்ந்தேன்.

வி–கு: ஓடும் – விரைவில் மறையும்: உலகுக்கு அடை.

(3)

**இயம்புவன் ஆசனத் தோடு மலையும்**
**இயம்புவன் சித்தக் குகையும் மடமும்**
**இயம்புவன் ஆதாரத் தோடு வனமும்**
**இயம்புவன் ஈரா றிருநிலத் தோர்க்கே.** 2651

க–து: இஃது இறைவனுக்கு உலகுயிர் இடனாக உபசரிக்கப்படுதல் கூறுகின்றது.

பொ–ரை: இறைவன் உலகுயிராகி நிற்றலின் அவனுக்கு எண்ணிறந்த உலகங்கள் தத்துவங்கள் ஆதனமாதலும், மலை உறைவிடமாதலும் கூறப்படும்; அவனுக்கு உயிர்களின் அறிவாகிய குகையும் அறிவர் மடமும் உறைவிடமாதல் கூறப்படும்; உடம்பில் சுழுமுனையில் ஆதாரங்களும் எழுத்துக்களும் அவனுக்கு உறைவிடமாகவும் உருவாகவும் கூறப்படும். இங்ஙனம் கூறுதல் பதினான்கு உலகில்உள்ளோரும் இறைவனை அணுக்கமாகக் கண்டு வழிபடுதற்பொருட்டே ஆம்.

வி–கு: வனம் – வன்னம், எழுத்து; நீர் எனலும் ஆம். திருக்குடமுழுக்கு உண்மையின். ஈர் அறு இரு நிலம் – இரண்டு ஆறும் இரண்டுமாகிய உலகம். செந்தமிழ்ப் பெருநிலம் பன்னிரண்டு எனலும் ஆம். (4)

**முகம்பீடம் மாமடம் முன்னிய தேயம்**
**அகம்பர வர்க்கமே ஆசில்செய் காட்சி**
**அகம்பர மாதனம் எண்எண் கிரியை**
**சிதம்பரம் தற்குகை ஆதாரந் தானே.** 2652

க–து: இஃது அகவழிபாட்டில் அமையும் உறுப்புக்கள் கூறுகின்றது.

பொ–ரை: முகப்பு அடிப்படை என்பவற்றோடு கூடிய திருமடம் இறைவனது நாடு ஆகும்; அதன் அகத்துள்ள பரவர்க்கமாகிய உயிர் பொருள்கள் குற்றமற்ற புனைவு ஆகும்; அங்குள்ளோர் உள்ளங்களே உயர்ந்த இருக்கையாம்; அவர்தம் எண்ணங்களே நினைத்துச் செய்யப்படும் உபசார வகைகள்; அக்குகையில் உள்ள சித்தாகிய ஆகாயமே திருக்கூத்தியற்றும் சார்பு ஆகும்.

வி–கு: தத் – அது. இங்கு அதன் அல்லது அந்த என்னும் பொருள்பட நின்றது. தற்குகை – மடத்தில் உள்ள தியான அறைக ளாகிய குகைகள் எனினும் அமையும். இப்பொருட்கு, தற்குகை சிதம்பரம் ஆதாரம் எனக்கூட்டி மடத்திலுள்ள தியான அறைகள் சிதம்பரமாகிய ஆதாரம் உள்ள இடம் என உரைக்க. இறைவ னுக்குத் தனு, கரணம், புவனம், போகம் எனும் நான்கும் திருவருளே ஆதலின், ஆதாரம் சிதம்பரம் என்றனர். ஆதாரம் – இடம். எண்கிரியை – ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அடிநீர், முகநீர், முடிநீர், அறுகு, அக்ஷதை, மலர்

என்பவற்றை முடியில் சாத்தல் என்னும் எட்டுச் செயல்கள் எனின் அமையும்.

வர்க்கம் – இனப்பொருள்கள். செய்காட்சி கைபுனைந்து இயற்றும் கவின். (5)

**அகமுக மாம்பீடம் ஆதாரம் ஆகும்**
**சக்முக மாஞ்சத்தி ஆதனம் ஆகும்**
**செகமுக மாந்தெய்வ மேசிவ மாகும்**
**அகமுகம் ஆய்ந்த அறிவுடை யோர்க்கே.** 2653

க–து: இஃது உள்நோக்கு நெறிக்கண் இறைவனது இயல்பு கூறுகின்றது.

பொ–ரை: உள்நோக்கு நெறியை ஆராய்ந்து உணர்ந்த தலையாய அறிவினார்க்குத் தன்னை நோக்கி நிற்கும் அடிநிலை உள்ளமே இறைவனுக்கு இருக்கை ஆகும்; உயிர்களை நோக்கி நிற்கும் முதல்வனது அருளாற்றலே அவன் இடங்கொள்ளும் உடம்பாகும் உலகத்தை நோக்கி நின்று அருள்புரியும் தெய்வ மாகிய அன்புருவச் சிவமே மூர்த்திமான் ஆகும்.

வி–கு: புறவழிபாட்டில் இருக்கை (ஆசனம்) திருவுரு (மூர்த்தி) உடையான் (மூர்த்திமான்) என்னும் மூன்றும் முதல்வ னுக்குக் கருதப்படுதலின் அவ்வழிபாட்டில் அவை முறையே உள்நோக்கி ஒன்றிய உள்ளமும். திருவருள் ஆற்றலும், அதற்கு முதலாகிய சிவமும் எனக் கூறியது இது.

ஆதாரம் – இடம். ஆதனம் – வடிவு. தெய்வம் வழிபடப்பெறும் முதல். சுருங்குதல் என்னும் அழகு பற்றிச் சத்தியொன்றே வடிவாகக் கூறப்படினும், திருவைந்தெழுத்து தூல

உருவாம் எனவும், அதனை உணரும் உயிர் நுண் உருவாம் எனவும் அதனைச் செலுத்தி உடனிற்கும் திருவருளாற்றல் மிக நுண் உரு எனவும் இனம் பற்றிக் கொள்க. (6)

**மாயை யிரண்டும் மறைக்க மறைவுறும்**
**காயமோ ரைந்துங் கழியத்தா னாகியே**
**தூய பரஞ்சுடர் தோன்றச் சொரூபத்துள்**
**ஆய்பவர் ஞானாதி மோனத்தர் ஆமே.** 2654

க—து: இது திருமடத்தில் உள்ள மோனிகள் இயல்பு கூறுகின்றது.

பொ—ரை: அறிவு நெறியைக் கடைப்பிடிக்கும் மிகு மௌனம் உடையார் ஆன்மாவின் அறிவின்கண் மாசற்ற திருவருளாகிய சுடரொளி தோன்ற, அவ்வொளியைக் கொண்டு அதற்கு முதலாகிய முதற் பொருளைத் தலைப்பட நாடுவர். அச்சுடரொளி தோன்றுவது, ஆன்மா தனக்குச் சார்பாயுள்ள பருவுடல், நுண் உடல், குணவுடல், அறிவுடல், இன்ப உடல் என்னும் ஐந்தனையும் இது இது எனக் கண்டு அவை தனக்கு வேறாக நீங்கத் தான் அச்சார்பு நீங்கித் தனித்துள்ளபோதேஆகும். இவ்வுடல்கள் மூலப்பகுதி நுண்பகுதி என்னும் இரு மாயைகளில் ஆகி, அவை மறைக்க மறைவன ஆம்.

வி—கு: மூலப்பகுதியின் ஆயவை சித்தம் புத்தி ஆங்காரம், தொழிற்பொறி ஐந்து, அறிவுப் பொறி ஐந்து, நுண்பூதம் ஐந்து, பருப்பூதம் ஐந்து என்னும் இருபத்து நான்கு. இவற்றுள் ஐம்பூதங்களாலாகி அறிவு தொழிற்பொறிகளுக்கு இடனாகிச் சோறு நீர் காற்று என்பவற்றைக் கொள்ள வளர்வதாய்க் காணப்படும் நனவுடல் பருவுடம்பு: இஃது அன்ன மய கோசம் எனவும் படும்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் நுண்பூதம் ஐந்தானும் ஆக்கப்பெற்று, புத்தி ஆங்காரம் மனம் இவற்றிற்கு இடந்தந்து, கனவில் உடலாய் நிற்பது நுண் உடல்; இது பிராணமயகோசம் எனவும் படும்.

இனி, சித்தம் என்பது குண ரூபமாய் விளங்கி, ஏனை மூன்று அகக் கருவிகளையும் அடங்கக் கொண்டது. இது குணவுடல் அல்லது மனோமய கோசம் எனப்படும். இஃது உறக்கத்தில் உயிர்க்கு உடலாய் நிற்பது.

இம்மூன்றும் மூலப்பகுதி எனப்படும் பருமாயையி னின்றும் ஆயவை.

இனி, அசுத்த மாயை எனப்படும் நுண்பகுதியில் தோன்றுவன மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்பவை, இவற்றுள் முதற்கண்ணதாகிய மாயையே மிகு நுண் உடல் அல்லது ஆனந்தமய கோசமாகும். இஃது உயிர்க்கு உயிர்ப்பு அடங்குதல் எனப்படும் கேவல துரியாதீதத்தினும் நீங்காமலுள்ளது. ஏனை ஐந்தன் தொகுதி அறிவுடல் அல்லது விஞ் ஞானமய கோசம் எனப்படும். இஃது உறக்கத்தின் பின் கூறப் படும் பேருறக்கம் அல்லது துரியம் என்னும் நான்காம் அவத் தையில் உயிர்த்து நிற்பது. இது கஞ்சுக சரீரம் எனவும் படும்.

கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அடிப்படை நிலைகளினும் உயிர் இவ்வுடல்களைச் சார்ந்து அறிந்தும் அறியா மலும் வருவதை உள்நோக்கிக் கண்டு, இவை உயிர்க்கு வேறா தலைச் சுட்டியுணரின் இவை கழிந்து, ஆன்மா தன் தூய நிலையில் நிற்கும்; இதுவே தானாகி என்றதனால் குறிக்கப்பட்டது அத்தகைய ஆன்மாவின் உணர்வில் தான் தூய பரமாகிய சுடர் (திருவருள்) தோன்றும்; இச்சுடர் ஞானக்கண் எனவும் படும்.

சொரூபத்துள் – ஆன்மாவின் தன்னியல்பில். ஆய்தல் – முதற்பொருளை நாடுதல்.

***ஊனக்கண் பாசம் உணராப் பதியை***
***ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி***

என்னும் மெய்கண்டதேவர் அருள் ஆணையை உடன் வைத்து நோக்குக. இதில் சிந்தை என்றதைத் திருமூலர் சொரூபத்துள் என்றனர். (7)

## 2. ஞானகுரு தரிசனம்

அஃதாவது திருமடத்தில் உள்ள ஒண்குரவன் வாயிலாக ஒருவர்க்குக் கிடைக்கும் திருவருட் காட்சி.

**ஆறொடு முப்பதும் அங்கே அடங்கிடின்**
**கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்**
**வேறே சிவபதம் மேலாய் அளித்திடும்**
**பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. 2655**

க–து: இஃது ஒண்குரவனால் சிவப்பேறு கிட்டும் என்றுணர்த்துகிறது.

பொ–ரை: உறுதி மொழிகளைக் கூறும் மேலான குரவனைக் கும்பிடுதலால் அவன் அறிவுறத்தும் முப்பத்தாறு தத்துவங்களும் உருவம் காட்சி தெளிவு என்னும் மூன்று வகையினும் அறியப்பட்டுத் தஞ்செயல் அற்றால் உயிர்க்கு வேறாய் உள்ள திருவருள் விளங்கி மேலாய் நிற்கும் சிவதரிசனத்தைப் பெறும்படி அக்குரவன் அருள்வன். பின் ஆன்ம சுத்தியை வருவிக்கும் முறையில் சிவானந்தம் பேறு ஆகப் பெருகும்படி அக்குரவன் பாதுகாத்து உய்க்கும்.

வி–கு: தந்திடும் ஆறொடு முப்பதும் என்க.

சிவபதம் – சிவன் திருவடி எனக் குறிக்கப்படும் திருவருள் ஒளி. (மேல்) ஆக என்பது ஆய் எனத் திரிந்து நின்றது. ஆனந்தம் – சிவானந்தம் அக்குருபரன் அளித்திடும் பேணும் எனக் கூட்டுக.

தத்துவங்களின் தொழிலைத் தனித்தனி அறிதல் தத்துவ உருவம்; அவை உயிர்க்குத் துணையாய் அமைந்து உயிரால் செயற்படுவன என்றறிதல் காட்சி; அவற்றைத் தனக்கு வேறாகக் கண்டு நீங்குதல் தெளிவு. இது தத்துவ சுத்தி எனப்படும். பின் விளைவன ஆன்ம உருவம், சிவ உருவம், ஆன்மக்காட்சி, சிவக் காட்சி, ஆன்ம சுத்தி, சிவப்பேறு என்பவை. ஆன்ம சுத்தி சிவ யோகம் எனவும், சிவப்பேறு ஆன்மலாபம் எனவும் குறிக்கப் பெறும். இவற்றின் விளக்கங்களை தசகாரியம் உணர்த்தும் நூல்களில் கண்டுகொள்க. (8)

**துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி**
**அரிய பரசிவம் யாவையும் ஆகி**
**விரிவு குவிவற விட்ட நிலத்தே**
**பெரிய குருபதம் பேசவொண் ணாதே.** 2656

க–து: இது சிவபோகம் உரையுணர்வு கடந்தது என்று உணர்த்துகிறது.

பொ–ரை: கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூன்றன் கண்ணும் உளதாகும் துரிய நிலைகள் மூன்றனுக்கும் அப்பாற் பட்டுள்ள பேரொளிப் பிழம்பும், உணர்தற்கரிய பேரின்ப மயனும் ஆகிய முதல்வன் அத்துவாக்கள் ஆறும் ஆகி உயிரை மாசகற்றித் தூய்மை செய்து அறிவு அறியாமைகளைக் கடந்த

வீடாகிய பெருநிலத்தே சிவபோகமாய் வளரும் குரு முதல்வ னாகிய அவன் பேரின்ப சக்தி சொல் நடை அன்று.

வி–கு: துரியங்கள் மூன்றைச் சீவ, அருள், சிவ துரியம் எனக் குறிப்பாரும் உளர். சோதி – பேருணர்வு சிவம் – இன்பம். விரிவு – கருவிகள் செயற்பட்டு உலக முகப்படும் சுட்டறிவு. குவிவு – அவை தொழிற் அடங்கும் கேவலமாகிய அறியாமை. (9)

**ஆயன நந்தி அடிக்கென் தலைபெற்றேன்**
**வாயன நந்தியை வாழ்த்தவென் வாய்பெற்றேன்**
**காயன நந்தியைக் காணவென் கண்பெற்றேன்**
**சேயன நந்திக்கென் சிந்தைபெற் றேனே.** 2657

க–து: இது குருவை வழிபடுவதற்கே இப்பிறவி வாய்த்தது எனக் கூறுகின்றது.

பொ–ரை: அருண் ஞான குரவனாகிய திருநந்தியின் திருவடிகளை வணங்கத் தலையினையும், அவனை வாழ்த்த வாயினையும், காணக் கண்களையும், சிந்திக்கச் சிந்தையினையும் நல்வினைப்பயனாகப் பெற்றேன்.

வி–கு: ஆய் ஆன – தாயை அனைய. வாய் அன – (வறியவனுக்குப் பொருள்) வாய்த்தல் அன்ன; வாய் – முதனிலைத் தொழிற்பெயர். காய் அன – காயம் அன்ன; ஆகாயத்தைப் போல் எங்கும் நிறைந்த. சேயன் அ நந்திக்கு – உரை உணர்வுகளுக்குச் சேயன் ஆகிய அந்நந்திக்கு; நகரமெய் தொகுத்தலாயிற்று. (10)

**கருடன் உருவம் கருதும் அளவில்**
**பருவிடம் தீர்ந்து பயங்கெடு மாபோல்**

**குருவின் உருவங் குறித்தவப் போதே**
**திரிமலந் தீர்ந்து சிவனவன் ஆமே. 2658**

க–து: இது சிவகுருவின் நினைவு சிந்தைத் திருகு ஓட்டிச் சிவமாந்தன்மை தரும் என்றுணர்த்துகிறது.

பொ–ரை: கருடனாந் தன்மை செய்யும் மந்திரத்தைப் பயின்றோன் அம்மந்திர உருவைக் கருதியதும் அவனால் நோக்கப்பட்டோனுக்கு ஏறிய அரவின் நஞ்சு நீங்கி இறப்பினால் வரும் அச்சம் கெடுகின்றது; அதுபோல, சிவகுருவின் உரு வத்தை நினைத்த அப்போதே நினைப்போனது உயிரின் கண்ண தாகிய மாசு தீர்ந்து அவ்வுயிர் சிவமாந் தன்மையைப் பெறுகிறது.

வி–கு: திரிமலம் – ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்கள்; அறிவைத் திரித்து உலகை நோக்குவிக்கும் மலம் எனினும் பொருந்தும்; மலந்தீரின், மாயை வினைகளும் நில்லா என்க. விடந்தீர்ந்து பயங்கெடுமாறுபோல் எனச் சொற்செயினும், கருடனது ஆதிதைவிக உருவைக் குறித்தோன் அக்கருடன் ஆவதுபோல் என்பது கருத்தாகக் கொள்க. (11)

**அண்ணல் இருப்பிட மாரும் அறிகிலர்**
**அண்ணல் இருப்பிட மாய்ந்துகொள் வார்களுக்(கு)**
**அண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்**
**அண்ணலைக் காணின் அவனிவ னாமே. 2659**

க–து: இது சிவனை ஒருவன் தன் அறிவிற் காண்க என விதிக்கின்றது.

பொ–ரை: பெருமையிற் சிவபிரான் உயிரின் கண் மறைந்து தான் அழிவின்றி உறைவன்; அவனை அங்கு அருட் கண்ணாற் காணின் சிவமாந் தன்மை வரும். (12)

**தோன்ற அறிதலும் தோன்றல்தோன் றாமையும்**
**மான்ற அறிவும் மறிநன வாதிகள்**
**மூன்றவை நீங்கும் துரியங்கள் மூன்றற**
**ஊன்றிய நந்தி உயர்மோனத் தானே. 2660**

க–து: நனவு முதலிய அவத்தைகளை உணர்ந்து நீங்குதல் குருவருளால் ஆகத்தக்கது எனக் கூறுகின்றது இது.

பொ–ரை: பொருள்களை விளங்க அறிதலை உடையது நனவு. விளங்கியும் விளங்காத ஐயுறு நிலையின் அறிவது கனவு. அறிவு மயங்கிய நிலை உறக்கம். இம்மூன்றையும் கடந்த நிலை துரியம். அது கேவலம், சகலம், சுத்தம் மூன்றினும் உண்டு. கேவல சகலங்களைக் கடத்தலால் இரு துரியங்கள் அறும். சுத்த நிலைக்கண் துரியம் என்பது அருளோடு ஒன்றி நிற்பது. அதனையும் கடந்த நிலையே அதீதம் எனப்படும் இன்புறு நிலை. இத்துரியம் மூன்றும் நீங்கி அதீதத்தை அணையும்படி அருள் மொழியை என் அறிவில் ஊன்றியவன் ஞானகுரு. அவன் என்னைப் போல உரு பெயர் முதலியன பெற்று வரினும், அவன் தன் உண்மையில் மேலான மோன நிலையில் நுகரப்படும் இன்புருவச் சிவனே ஆவன்.

வி–கு: மான்ற அறிவு – அறிவு மாழ்கி அறியா நிலை. மறி – மீண்டு மீண்டு மறித்துவரும். (13)

**சந்திர பூமிக் குடன்புரு வத்திடைக்**
**கந்த மலரில் இரண்டிதழ்க் கன்னியும்**
**பந்த மிலாத பளிங்கின் உருவினள்**
**பந்தம் அறுத்த பரங்குரு பற்றே. 2661**

க–து: இது சிவமாந்தன்மை பெறப் புருவ நடுவில் செய்யத்தக்க தியானத் திருவுரு கூறுகின்றது.

பொ–ரை: ஒருவன் தன் புருவ நடுவில், மதி வட்டத்துள் இரண்டிதழ்களையுடைய நறுமணம் உள்ள மலர் இருக்கையில் எந்நிறமும் இல்லாத பளிங்கின் உருவினளாகிய பராம்பிகை யாகிய கன்னியைப் பாசம் அறுக்கும் குருபரனாகிய பரசம்பு வுடன் தியானத்திற்குப் பற்றாகக் கொள்ளக்கடவன்.

வி–கு: பளிங்கு உருவினளாகிய கன்னியும் பரங்குரு வுடன் பற்று ஆவள் என முடிக்க. புருவ நடு திருவாணை நிகழ் இடமாதல் பற்றி ஆஞ்ஞை எனப்படும். (14)

**மனம்புகுந் தானுல கேழும் மகிழ**
**நிலம்புகுந் தானெடு வானிலம் தாங்கிச்**
**சினம்புகுந் தான்றிசை எட்டும் நடுங்க**
**வனம்புகுந் தானூர் வடக்கென்ப தாமே.** 2662

க–து: இது புறத்தே திருவாணை நிகழ் இடம் கூறு கின்றது.

பொ–ரை: முதல்வன் ஏழுலகும் நன்மையுற்று மகிழ்தற் பொருட்டு மனத்திற்கு இடனாகிய புருவ நடுவில் புகுந்தான். நீண்ட மேலுலகத்தைத் தாங்குதற்கு நிலத்துப் பல கோயில்களை இடங்கொண்டான். அவன் சினங்கொண்டால் எண் திசையும் நடுங்கும். ஓங்காரம் முதலிய எழுத்துக்களைத் திருமேனியாகக் கொண்ட அச்சிவன் உறையும் ஊர் வடக்கேயுள்ள வாரணாசி ஆகும்.

வி–கு: வனம் – வன்னம், எழுத்து. வாரணாசியாகிய காசி திருவாணைத்தலம். 'அஞ்ஞா க்ஷேத்திரம்' ஆதல் அறிக.

**தானான வண்ணமும் கோசமும் சார்தரும்**
**தானாம் பறவை வனமெனத் தக்கன.**

**தானான சோடச மார்க்கந்தான் நின்றிடில்**
**தானம் தசாங்கமும் வேறுள்ள தானே.** 2663

க–து: இஃது உயிர் தானாம் தன்மை எய்துதற்கு உரிய வாயில்கள் சோடசகலைப் பிராசாதமும் தச காரியமும் ஆம் எனக் கூறுகின்றது.

பொ–ரை: சார்ந்த பொருளேயாய் நிற்கும் இயல்பும் ஐங்கோசமாகிய கூடுகளும் சார்ந்துள்ள சிவன் ஆதற்குரிய உயிராகிய பறவை எழுத்து எனத் தக்கனவேயான பதினாறு கலை நெறியில் நின்றால் சிவன் ஆம். அங்ஙனமாதற்கு வேறு பத்து உறுப்புக்களை உடைய நெறியும் உள்ளது.

வி–கு: தான் முதலது சாரப்படும் பொருள்; இரண்டாவதும் நான்காவதும் சிவன் மூன்றாவது அசை நிலை. மார்க்கம் என்னும் சொல் தசாங்கம் என்றதனோடும் இயையும்.

சோடசம் – பதினாறு. வனம் – வன்னம், எழுத்து. பறவை தன் விருப்பின்படி பறந்து தங்கி இன்புறும். வனம் (காடு) என்னும் தொனிப்பொருளும் கொள்க. பதினாறன்நெறி: வனம் எனத்தக்கன ஆன சோடசம் என்க. அவை அ, உ, ம், விந்து, அரைமதி, நிரோதி, நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, சமனை, உன்மனைகளும், இவற்றுள் வியாபினிக்கு மேல் சமனைக்குக் கீழ் வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாச்ரிதை என்னும் நான்கும். இவை அசபையின் பரிணாமமாயும், சிவபீசத்தின் விருத்தியாகவும் கொள்ளப்படுதலின், வ(ன்)னம் எனத்தக்கன ஆன சோடசம் எனப்பட்டன.

சோடசம் என்றதைச் சரியையிற் சரியை முதலிய பதினாறு என்பாரும் உள்ர். (16)

**மருவிப் பிரிவறியா எங்கள் மாநந்தி**
**உருவ நினைக்கநின் றுள்ளே உருக்கும்**
**கருவிற் கரந்துள்ளங் காணவல் லார்க்கிங்(கு)**
**அருவினை கண்சோரும் அழிவா ரகத்தே. 2664**

க—து: இஃது ஒண்குரவன் உருவை எண்ணுதல் தன் முனைப்பையும் வினையினையும் கெடுக்கும் என்று உணர்த்து கின்றது.

பொ—ரை: ஞானகுரவன் தன்னைச் சார்ந்தாரைப் பிரிவ தில்லை; அவன் திருவுருவை நினைக்கின் அஃது உள்ளத்தில் மறையாது நின்று அன்பைப் பெருக்கித் தன் முனைப்பைக் கெடுக்கும். தனக்கு முதலாகிய திருவருளில் பிரிப்பின்றி ஒன்றி, அவ்வருட்கண்ணால் எல்லாவற்றையும் நோக்கி இறைபணி நிற்க வல்லார்க்கு அங்ஙனம் தற்போதம் அழிந்தார் அகத்தே அருவாய் வந்து புகும் பிராரத்த வினை தன்வலி குன்றும்; அதனால் ஏறுவினை உளதாகாது.

வி—கு: உருக்கும் — மனம் உருக்கி மலம் முருக்கும். கண் சோரும் — உடலூழாய்க் கழிந்து, மேலைக்கு வித்தாகாது மெலியும். அழிந்தார் — தன் முனைப்புக் கெட்டோர். (17)

**தலைப்படலாம் எங்கள் தத்துவன் றன்னைப்**
**பலப்படு பாசம் அறுத்தறுத் திட்டு**
**நிலைப்பெற நாடி நினைப்பற உள்கில்**
**தலைப்பட லாகும் தருமமுந் தானே. 2665**

க—து: இது மெய்ப்பொருளாகிய சிவனைத் தலைப் படுதற்கு உரிய உபாயம் அறநெறி நிற்றலும் இடையறாத் தியானமும் எனச் செப்புகின்றது.

பொ–ரை: எம்மால் தொழப்படும் மெய்ப்பொருளாகிய சிவபிரானை ஒருவன் தலைப்பட்டு உணர்தல் இயலும். அதற்கு வழியாவது (அறநெறியில் நின்று) அறிவைப் பிணிக்கும் வினை மாயை மலங்களை முறை முறையே அறுத்து, நிலையாக அவன் இயல்புகளை ஆராய்ந்து, நனவு நிலையில் நமக்கு உளதாகும் நினைவுகள் கெடும்படி உள்நோக்கிக் கண்டாலே ஆகும். அவன் அறமும் அறம் உரைத்தானும் ஆவன் என்பதைக் குறிக் கொள்க.

வி–கு: பலப்படுதல் – பலவாக வந்து தாக்குதல். தருமமும் தானே என்றதில் உம்மையால் உரைத்தானும் தானே என்பதும் கொள்க. இதனால் அவனைத் தலைப்படுதற்கண் முதல் முயற்சி அவன் அறவாழி அந்தணன் என்பதை மனத்துக் கொண்டு அறவழியில் நிற்றலே ஆம் எனக் கொள்க. (18)

**நினைக்கின் நினைக்கும் நினைப்பவர் தம்மைச்**
**சுனைக்குள் விளைமலர் சோதியி னானைத்**
**தினைப்பிளந் தன்ன சிறுமைய ரேனும்**
**கனத்த மனத்தடைந் தாலுயர்ந் தாரே.** 2666

க–து: சிவபிரான் தன்னை நினைப்பவரை எதிர் நினைந்து உயர்த்துகிறான் என்பதை உணர்த்துகின்றது இது.

பொ–ரை: ஒருவர் தன்னை அன்பால் நினைக்கின் அவரைமுதல்வனும் திருவருளால் எதிர் நினைந்து உயர்த்து கிறான். அறிவு, செல்வம், குலம் முதலியவற்றில் தினையின் பிளவு அன்ன சிறுமையரேனும், தமது திண்ணிய மனத்தில், நெஞ்சமாகிய சுனையில் விளைகின்ற, மேன்மேலும் விளங்கி விரியும் தூய பேரொளி வடிவினனை மறவாது நினைப்பவர் உயர்வற உயர்ந்தோரே ஆவர்.

வி–கு: சுனை – அன்பாகிய நீர் நிறைந்த உள்ளக்குகை. மலர்ச்சோதியினான் என்பது பாடமாயின், சுனையில் விளையும் மலர்போன்ற சோதியினன் என உரைக்க.

*''மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே''*

என்னும் திருவாசக அடியோடு ஒப்பிடுக. (19)

**தலைப்படுங் காலத்துத் தத்துவன் றன்னை**
**விலக்குறின் மேலை விதியென்று கொள்க**
**அனைத்துல காய்நின்ற ஆதிப் பிரானை**
**நினைப்புறு வார்பத்தி நேடிக்கொள் வாரே. 2667**

க–து: இஃது இறைவன் நினைவால் வினை நீக்கமும் மெய்யன்பு முதிர்ச்சியும் உளவாம் என உணர்த்துகிறது.

பொ–ரை: இறைவனைத் தலைப்பட முயலும் போது அதற்கு மாறான தடைகள் வரின் அது முன்னைய விதியால் வருவது எனக் கொள்க. எல்லாமாய் நிற்கும் முதல்வனை அவ் விதியைக் கூட்டுவோன் என நினைப்பவர் இறையன்பை ஆராய்ந்து வளர்த்துக் கொள்வோர் ஆவர். (20)

**நகழ்வொழிந் தாரவர் நாதனை யுள்கி**
**நிகழ்வொழிந் தாரெம் பிரானொடுங் கூடித்**
**திகழ்வொழிந் தார்தங்கள் சிந்தையி னுள்ளே**
**புகழ்வழி காட்டிப் புகுந்துநின் றானே. 2668**

க–து: இறைவன் செருக்கு அற்றார்க்கு உண்மை நெறி காட்டி உடனிற்றலின், அவ்வருள் பெற்றோர் தம் நெறியினின்றும் விலகார் என்பதும், அவர்க்கு இருவினைகள் ஏறா என்பதும் இதனால் உணர்த்தப்படுகின்றன.

பொ–ரை: யான் எனது எனத் தோன்றுதல் நீங்கிச் செருக் கற்றார் அறிவில், தலையாயவர்களால் புகழப்படும் அருள் நெறியை விளக்கி அதன் பயனாக முதல்வன் அவ்வறிவிற் புகுந்து நிற்பன். அருள் பெற்றோர் முதல்வனை இடையறவின்றி நினைத்து நன்னெறியின்றும் விலகுதலை ஒழிந்தார். மேலும், அவர் முதல்வனொடும் ஒன்றிக் கூடுதலால், ஏனையர் வாழ்வைப்போல், 'பிற்செயாது நுகர்வின்று' என்னும் பொது விதியின் அகப்பட்டு வாழ்தல் இலர்; விண் ஏறாதபடி ஏகனாகி இறைபணி நிற்பர் என்றபடி,

வி–கு: நகழ்வு – நெறியின் விலகுதல். நிகழ்வு – உலகியல் வாழ் இயல்பு. திகழ்வு – யான் எனது என முனைந்து நிற்றல். புகழ்வழி – பெரியோர் பலரும் புகழும் திருநெறி. (21)

**வந்த மரகத மாணிக்க ரேகைபோல்**
**சந்திடு மாமொழிச் சற்குரு சன்மார்க்கம்**
**இந்த இரேகை இலாடத்தின் மூலத்தே**
**சுந்தரச் சோதியுட் சோதியு மாமே.** 2669

க–து: இது சற்குரு உபதேசம் தியானவாயிலாக முதற் பொருளைத் தலைப்படுவித்தல் கூறுகின்றது.

பொ–ரை: சிறந்த மொழிகளை உடைய நல்ல ஆசிரியன் கூறும் நன்னெறியுணர்த்தும் திருவைந்தெழுத்து, அயன் மால் எதிர் வந்த மரகதக் குவாலோடு கூடிய மாணிக்கப் பிறக் கத்தின் கதிரொளி போல் இடைநின்று முதற்பொருளோடு உயிரின் அறிவைத் தொடர்பு படுத்தும். இவ்விரு நிறக் கதி ரொளி (பச்சையோடு கூடிய செம்மை) நெற்றியின் அடியாகிய புருவ நடுவில் தோன்றும் அறிவுக்கறிவாகிய முதற்பொருளும் ஆகும்.

வி–கு: சிவ என்னும் எழுத்துக்களின் பொருள் மரகத மாணிக்கக் கதிரொளியாக எண்ணுதல் கூறிய தாகலாம். (22)

**உண்ணும் வாயும் உடலும் உயிருமாய்க்**
**கண்ணு மாயோகக் கடவுள் இருப்பது**
**மண்ணு நீரனல் காலொடு வானுமாய்**
**விண்ணு மின்றி வெளியானோர் மேனியே.** 2670

க–து: இஃது இறைவன் ஞானிகளின் உடலை இடங் கொள்வது உரைக்கின்றது.

பொ–ரை: அறிஞர்களால் கருதப்படும் ஆல் நிழற் கடவுள், வாய் முதலிய உறுப்புக்களாகவும், உடலாகவும், உயிராகவும் வேறின்றி ஒன்றி இடங் கொண்டிருப்பது எங்கு எனின், ஐம்பூதமும் மாய்தற்கு இடனாகிய மனவெளியைக் கடந்து அறிவு வெளியானோராகிய ஞானிகளுடைய திரு மேனியே ஆகும்.

வி–கு: கண்ணும் – கருதும், நினைக்கும். விண்ணும் இன்றி – வெளியையும் கடந்த. விண் – வெளி, இங்கு மனவெளி. (23)

**பரசு பதியென்று பார்முழு தெல்லாம்**
**பரசிவன் ஆணை நடக்கும் பாதியால்**
**பெரிய பதிசெய்து பின்னாம் அடியார்க்(கு)**
**உரிய பதியும்பா ராக்கிநின் றானே.** 2671

க–து: அடியார்க்கு இவ்வுலகையும் தங்குதற்கு உரிய இடமாக்கினன் இறைவன் என்பது உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ–ரை: தலையாய அறிவினார் போற்றித் தொழும் காவலன் என உலகம் முழுதும் தன் பாதி எனப்படும் சிற்சத்தியால் தன் ஆணை நிகழ நின்றனன் சிவபிரான். பெரிய பதியாகிய வீட்டு நிலத்திற்கு வேண்டுவன செய்து. திருவருளை முன்னிட்டுத் தாம் பின் ஆம் அடியார்க்கு இந்நிலவுலகும் உரிய பதியாம் படி அமைத்து நின்றான்.

வி–கு: பாதி – பாகத்து அருள்உரு பாரும் தன் அடியார்க்குப் பதி ஆக்குதல். 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்றாற்போன்ற அருள் மொழிகளால் உணர்க.

உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. (24)

**அம்பர நாதன் அகலிடம் பூம்பொழில்**
**தம்பர மல்லது தாமறி யோமென்பர்**
**உம்பருள் வானவர் தானவர் கண்டிலர்**
**எம்பெரு மானருள் பெற்றிருந் தாரே. 2672**

க–து: இஃது இறைவன் இயல்பு யாராலும் அளவிடற்கு அரிது என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: பர வியோமம் எனப்படும் அறிவுப் பெருவெளியில் உள்ளோனது உடைமையே அழகிய உலகனைத்தும். அப்பெருமானது திருவருள் பெற்று அப்பரவெளியில் இருந்த பெருமக்கள் தமக்குரிய பேரின்ப நுகர்ச்சியன்றி அவன்றன் உயர்வின் எல்லையைத் தாம் அறியோம் என்பர்; வானுலகில் உள்ள தேவரும் அசுரரும் அவனைக் கண்டிலர். (25)

**கோவணங் கும்படி கோவண மாகிப்பின்**
**நாவணங் கும்படி நந்தி அருள்செய்தான்**

**தேவணங் கோமினிச் சித்தந் தெளிந்தனம்**
**போய்வணங் கும்பொரு ளாயிருந் தோமே. 2673**

க–து: சிவஞானிகள் யாவரும் வணங்கும் தகுதியுடையோர் ஆவர் என்பது இதனால் உணர்த்தப்படுகின்றது.

பொ–ரை: முன்னர் அரசனும் வணங்கும்படி புறத் துறவு பூண்டு, பின் சிவகுருவின் அருளால் நாவால் இறைவன் பொருள்சேர் புகழ்விரித்து வணங்கும்படி சிவாநுபவம் பெற்றோம். இப்போது தெளிந்த சிந்தையை உடையோம் ஆகலின், பிற தேவரை வணங்கோம். ஞான நெறியில் மேற் சென்றமையின், யாவரும் சென்று வணங்கும் பெரும் பொருளாந் தன்மை பெற்றுச் செயலற்றிருந்தோம்.

வி–கு: கோ – அரசன். கோவணம் ஆதல் – கோவணமே உடையாகக் கொண்டிருத்தல்; அது இங்குத் துறவு நிலையைக் குறித்து நின்றது. இறை மயமாகி எனினுமாம்.

நாவணங்குதல் – சிவனைத் தலைப்பட்டு உணர்ந்து அவனருளால் அவன் இயல்பு உலகறியுமாறு கூறுதல். போய் வணங்கும் பொருள் – சிவம். போய் வணங்குதல் – ஞான நெறியில் சென்று வணங்குதல். (26)

## 3. பிரணவசமாதி

அஃதாவது பிரணவம் எனப்படும் ஓமொழி இயல் புணர்ந்து இறைவனோடு ஒன்றுமாறு கூறுதல்.

**தூலப் பிரணவம் சொரூபானந்தப் பேருரை**
**பாலித்த சூக்குமம் மேலைச் சொரூபப்பெண்**

**ஆலித்த முத்திரை ஆங்கதிற் சூக்குமம்**
**மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே** 2674

க-து: இது பிரணவத்தின் வகைகளைக் கூறுகின்றது.

பொ—ரை: யாரும் கேட்டறியும் தூலப் பிரணவ ஒலி தன்னியல்பு உணர்தலால் வரும் இன்பத்தைப் பயக்கும் பெரு மொழி ஆகும். காக்கப் பெற்ற சூக்குமப் பிரணவம் மேற்கூறிய தன்னியல்பை உணரவைக்கும் பெண்மை (அருட்சத்தி) ஆகும். எல்லா நூற்பொருளும் திரண்ட சின்முத்திரை அதனினும் நுட்ப மாகும். இம்மூன்றும் வேதாந்தமாகிய உபநிடத நெறிக்கண் உள்ளவை.

வி—கு: எல்லாப் பிராணன்களையும் பரமான்மாவிடம் வணங்கச் செய்வது பிரணவம் (ப்ராணாந் ஸர்வாந் பரமாத்மநி ப்ரணமய்தி இதி ப்ரணவ:) என்பது சொற்பொருட் காரணம்.

"பிரணவமே வில், ஆன்மாவே அம்பு, பிரம்மம் அதன் குறி; சோர்பு படாமல் எய்க. அம்பைப் போல் அதனோடு ஒன்றும் நிலை உண்டாம்" என்னும் முண்டகோபநிடதத்தின் இரண்டாம் பிரிவின் நாலாம் தொடர் உடன் எண்ணத்தக்கது.

பிரணவத்தினுட் பிரிவுகளாகிய அ, உ, ம், விந்து, நாதம் என்பவை சூக்கும ஐந்தெழுத்து எனப்படும். இவை சூக்குமை, பைசந்தி, மத்திமை வடிவில் நின்று எதிர் எதிர் நிரலாகப் புருடன், சித்தம், மனம், புத்தி, ஆங்காரம் என்பவற்றைச் செலுத்தி உயிர்க்கு நிருவிகற்ப சவிகற்ப உணர்வுகளைத் தருகின்றன என்பது சித்தாந்த சாத்திரத் துணிபு.

பிரணவமே ஹம்ஸ என்னும் அசபையாகவும், ஹௌம் என்னும் சிவபீஜமாகவும் திரிந்து நிற்கும் என்பதும், மேற்சுட்டிய

அகரம் முதலிய கலைகளில் இருந்து நகரம் முதலிய திருவைந் தெழுத்துக்கள் தோன்றுமென்பதும் சிவாகம நூல் துணிபு. பாலித்த – மறையாக வைத்துக் காக்கப்படுகின்ற. பாலனம் – காப்பு. ஆலித்த – திரண்ட; ஆலி என்னும் பெயரடியிற் பிறந்த பெயரெச்சம் சித்திரித்த என்பது போல. வீதி – நெறி.

மோனமுத்திரைக் கையில் பெருவிரல் சிவ, சுட்டு விரல் ய, நடுவிரல் ம, ஏனையிருவிரல் ந எனப்பொருள் கண்டு கொள்க.

தூல உபாசனையில் வைத்துப் பொருள் இயல்பு உணர்த் தும் வேதாந்தத்தில் பிரணவமும், அதன் சூக்குமப் பொருள் விரிக்கும் சைவ சித்தாந்தத்தில் ஐந்தெழுத்தும் கொள்ளப்படும்.

பிரணவத்தோடு கூடாத மந்திரம் பிராணன் இல்லது என்பது எல்லா மந்திரங்களுக்கும் பொது விதி. திருவைந் தெழுத்து பிரணவமின்றியே வீரியம் உடையதாம். அதற்குக் காரணம் அது பிரணவத்தினின்று தோன்றி அதன் பொருளையே குறித்தல் என்க. இன்னும்,

***பிரணவ முதலாய்ச் சிவாய என்பதுபின்***
***பிணைந்துறக் கிளக்குமா றெழுத்தும்***
***விரவுமந் நூலின் எவ்வகை மனுக்கு***
***மேலதா மவைதரு பொருள்கள்***
***பரனொடு பஞ்ச சத்திகள்; இரண்டு***
***பயனுமாம் பயின்றவர்க் காதி***
***மருவிய பதத்தின் வித்தின்ஆல் என்ன***
***மறைமுத- லனைத்துந்தோன் றினவால்***

என்னும் தணிகைப்புராணச் செய்யுளால் திருவ்வைந்தெழுத்தின் முன் பிரணவஞ் சேர்த்துக் கிளப்பது ஆறெழுத்து மறையெனப் படும் என்பதும், அவ்வெழுத்துக்களால் குறிக்கப்படும்

பொருள்கள் பரன், மூர்த்தி, வாமை, ஆர்த்தி, பூரணி, ஈசானி என்பனவாம் என்பதும் விளங்கும். இவ்வாறனுள் பின்னைய ஐந்தும் ஐந்தொழில் செய்யும் ஐஞ்சத்திகளாதலை 'மேலைச் சொரூபப் பெண்' என்னும் திருமந்திரத்தின் பகுதியோடு ஒப்பித்துக் காண்க. (27)

**ஓமெனும் ஓங்காரத் துள்ளே ஒருமொழி**
**ஓமெனும் ஓங்காரத் துள்ளே உருவரு**
**ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்**
**ஓம்எனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே.** 2675

க–து: இஃது ஓங்காரம் எல்லாவற்றையும் அடக்கி நிற்பது என்பதும் அதன் பயிற்சி, சித்தி முத்திகளைத் தரும் என்பதும் கூறுகின்றது.

பொ–ரை: மஹாவாக்கியம், பெரும் பெயர், ஒரு வார்த்தை எனப்படும் தத்துவமசி முதலிய முடிந்த மொழிகள் ஓங்காரத்தில் அடங்கும். காணாத அருவப் பொருள்களும் காணப்படும் உருவப் பொருள்களும் அதன்கண்ணே அடங்கி யுள்ளன. அதன்கண் பலவகையான எழுத்துக்களும் மற்றும் நூல்களும் பலவகையான எழுத்துக்களும் மற்றும் நூல்களும் தோன்றும். அதன் இயல்பு அறிந்து பயில்வோர்க்கு நல்ல பேறுகளும் வீடுபேறும் கிடைக்கும்.

வி–கு: மேலைப்பாட்டின் விசேடக் குறிப்பில் இப் பாட்டின் பொருள் விளக்கத்தைக் கண்டு கொள்க. (28)

**ஓங்காரத் துள்ளே உதித்த ஐம்பூதமும்**
**ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்**
**ஓங்கார தீதத் துயிர்மூன்றும் உற்றன**
**ஓங்கார சீவன் பரசிவ ரூபமே.** 2676

க–து: இதுவும் அது.

பொ–ரை: ஐம்பூதங்களுக்கும் இயங்கு நிலைத் திணைகளுக்கும் ஓங்காரமே பிறப்பிடம். ஒரு மலம், இருமலம், மும்மலம் உடைய மூவகை உயிர்களும் தம் உண்மையியல்பை உணர்வது ஓங்காரமாகிய நாதத்தின் இயல்பை அறிந்து அதனின் வேறு தாம் என உணர்ந்தபோதே கூடுவது; அங்ஙனம் அறிந்த சீவன் பரசிவமே ஆகும்.

ஓம் என்பது பரம் பொருளைக் குறிக்கும் மொழி ஆதலினால், முதல்வனுக்குக் கூறப்படும் இயல்பு அனைத்தும் இதற்கும் கூறப்படும். சொல்லும் பொருளும் ஒன்றே என்னும் இயைபு பற்றி இங்ஙனம் கூறுதல் மரபாக உள்ளது. சொல்லை வாசகம் என்றும் அதன் பொருளை வாச்சியம் என்றும் வடநூலார் குறிப்பர். (29)

**வருக்கம் சுகமாம் பிரமமும் ஆகும்**
**அருக்கஞ் சராசரம் ஆகும் உலகில்**
**தருக்கிய ஆதார மெல்லாந்தன் மேனி**
**சுருக்கமில் ஞானம் தொகுத்துணர்ந் தோரே. 2677**

க–து: இது விமர்சப் பிரணவம் எனப்படும் பிரணவ வர்க்கத்தின் உயர்வு கூறுகின்றது.

பொ–ரை: பரம்பொருள் இரு நிலையினை உடையது. ஒன்று தன் விளக்கமுடையதாய்ப் பிற பொருள்களைக் குறியாது நிற்றல். அது பிரகாச இயல்பு எனப்படும். அந்நிலையைக் குறித்தலின், ஓங்காரம் பிரகாசப் பிரணவம் எனப்படும்.

மற்றொரு நிலை உலகைக் குறித்து நிற்கும் நிலை. இது சைவாகமங்களில் சத்தி எனப்படும்; வேறு சில நூல்களில் விமர்ச

இயல்பு எனப்படும். முதற் பொருளின் விமர்ச நிலையைக் குறிக்கும் விமர்சப் பிரணவங்கள் ச்ரீம், ஹ்ரீம், ஐம், க்லீம், ஸௌ: (ஸௌம்) என்னும் ஐந்தும் ஆம். இவை பிரணவத்திற்கு இன மாதலின், வர்க்கம் எனப்பட்டன.

பிரகாசப் பிரணவத்தின் வர்க்கமாகிய விமர்சப் பிரண வங்கள் பேரின்ப இயல்பினதாகிய பரம்பொருளும் ஆகும். உம்மையால் இவை பரை, ஆதி, ஞானம், இச்சை, கிரியை என்னும் ஐஞ்சத்திகளைக் குறிக்கும் வாசகங்களாம் என்க. இவை, உலகில் ஒளியுடைப் பொருள்களும் சராசரமும் ஆகும். ஆய்ந்து கொள்ளப்படும் மூலம் முதலிய ஆதாரங்களில் எல்லாம் தன் உருவம் விளங்க நிற்பது. ஐம் என்பது மூலத்தில் வாக்பவ கூடத்தின் வித்தாய் அமையும்; க்லீம் இதயத்தில் அடுத்த கூடத் திற்கு வித்தாய் நிற்கும்; ஸௌ: புருவ நடுவில் சத்தி கூடத்திற்கு வித்தாய் நிற்கும். இக்கூடங்களில் இறுதியில் ஹ்ரீம் என்பது நிற்கும். மூன்றாவது ஹ்ரீங்காரம் நெற்றி நடுவில் அமையும். ச்ரீம் என்பது பிரமரந்திரத்தில் இருக்கும். இங்ஙனம் கூறுவோர் விரிந்த கலைஞானங்களைத் தொகுத்து உணர்ந்தோர்.

வி–கு: மேலும் விளக்கம் வேண்டில் லலிதா திரிசதி, ஆனந்தலஹரி என்பவற்றின் உரைகளிற் காண்க. தருக்குதல் – ஆராய்தல். (30)

**மலையும் மனோபவம் மருள்வன ஆவன**
**நிலையில் தரிசனம் தீப நெறியாம்**
**தலமுங் குலமுந் தவஞ்சித்த மாகும்**
**நலமுஞ்சன் மார்க்கத் துபதேசந் தானே.** 2678

க–து: இது, நிலைப்பட்ட உணர்வின் இன்றியமை யாமையை வற்புறுத்துகின்றது.

பொ—ரை: தடுமாற்றத்தினையுடைய மனத்தில் தோன்றும் உணர்வுகள் முரணாவனவாகும்; முன்பின் முரணாமல் நிலைப்பட்ட காட்சி ஆசிரியன் அருளும் ஞான தீபத்தால் காணும் நெறியில் உளதாகும். ஆதலால் நன்னெறியாகிய ஞான நெறியில் மறையாகக் கூறப்படுவன நிலைப்பட்ட உணர்வு பெறுவதற்குரிய இடமும், கூட்டமும், மற்றும் தவம் பயன் தருவதற்கு வேண்டிய நலங்களும் ஆகும். (31)

**சோடச மார்க்கமுஞ் சொல்லும்சன் மார்க்கிகட்**
**காடிய ஈராறின் அந்தமும் ஈரேழிற்**
**கூடிய அந்தமும் கோதண்ட முங்கடந்**
**தேறியே ஞானஞே யாந்தத் திருக்கவே. 2679**

க—து: இது பதினாறன் நெறியும் சமாதி நிலைக்கு வாயிலாம் எனக் கூறுகின்றது.

பொ—ரை: நன்னெறியினர்க்கு, அவர் பன்னிரண் டங்குல முடிவெனப்படும் நிராதார முடிநிலையும், பதினான்கு வித்தைகளிற் கூடிய முடிநிலையாகிய பேருரைகளும், புருவ நடுவில் உற்று நோக்குதலும் ஆகிய செயல்களைக் கடந்து ஞாதுரு ஞான ஞேயம் என்னும் பகுப்பு நீங்கும் முடிநிலையாகிய சமாதியில் இருக்க விரும்புவோர்க்குப் பதினாறன் நெறியினை யும் நூல்கள் விதித்துச் சொல்லும்.

வி—கு: சோடசமார்க்கம் – பிரணவம் அல்லது சிவ பீசத்தைப் பதினாறு கலைகளாகப் பாவித்தல் – சமயாசாரத்திற் கூறப்படும் சோடசி எனலும் ஆகும்.

ஈராறின் அந்தம் – முடிமேல் துவாதசாந்தம். ஈரேழ் – வேதம் 4, அங்கம் 6, உபாங்கம் 4 ஆகிய பதினான்கு வித்தைகள். (32)

# 4. ஒளி

அஃதாவது காணுதற்கு இன்றியமையாது வேண்டப் படும் வாயில். அது காணும் ஒளி, காட்டும் ஒளி, ஒளிக்கு முதலா கிய சுடர், அறிவொளி, அறிவிக்கும்அறிவொளி, அவற்றிற்கு முதலாகிய சீவான்மா பரமான்மாக்கள். அவற்றின் இயல்பு உணர்த் தலின், இவ்வதிகாரம் ஒளி என்னும் பெயர் உடையதாயிற்று.

**ஒளியை யறியில் உருவம் ஒளியும்**
**ஒளியும் உருவம் அறியில் உருவாம்**
**ஒளியின் உருவம் அறியில் ஒளியே**
**ஒளியும் உருக உடனிருந் தானே.** 2680

க–து: இஃது தன் தூய்மைக்குச் சிவக்காட்சி வாயில் ஆமாறு கூறுகின்றது.

பொ–ரை: ஆன்ம ஒளியை அறியின் அதனை மறைத்து நிற்கும் உருவமாகிய தத்துவ வன்ன பேதங்கள் மறையும் (ஒளியும்): மறையும் இயல்பினவாகிய தத்துவ வன்ன பேதங் களைச் சார்ந்து அறியின், மேலும் பிறப்பு உளதாகும். இனி, அறிவொளியாகிய ஆன்மாவின் தன்னியல்பை அறியின் ஒளி வண்ணனாகிய சிவபிரானே, அவ்வான்ம ஒளி, யான் எனது என்னும் வரம்புபட்ட தன்மை நீங்கி வியாபக நிலை எய்துமாறு உயிர்க்குயிராய் (ஒளிக்கு ஒளியாய்) உடனிருந்து செலுத்தி வந்தமை உணரப்படும்.

வி–கு: ஒளி – மூன்றாவது சிவசைதன்னியம்; ஏனைய மூன்றும் ஆன்ம சைதன்னியம். ஒளியும் – மறையும். முதலாவது முற்று.; இரண்டாவது எச்சம். நான்காம் அடிக்கண் ஒளியும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. (33)

**புகலெளி தாகும் புவனங்கள் எட்டும்**
**அகலொளி தாயிரு ளாசற வீசும்**
**பகலொளி செய்தது மத்தா மரையிலே**
**இகலொளி செய்தெம் பிரானிருந் தானே. 2681**

க–து: இது திருவருளொளியைக் கண்டவுடன் விளையும் பயன் கூறுகின்றது.

பொ–ரை: பகல் எனப்படும் விழிப்பு நிலையில் ஒருவன் தியான ஒருமையால் திருவருளைத் தலைப்பட்டதும், எமது தலைவனாகிய சிவபிரான அந்தத் தியான வடிவத் தாமரையில் ஒன்றோடொன்று மாறுபடும் நீலச் செவ்வொளி உடையனாய் விளங்கினான். மேலும் ஆன்மா தன் அறிவால் பற்றி எளிதிற் புகுவதற்கு இடன் ஆக நின்ற எட்டுக் கொத்துக் களிலும், அகன்று நிறையும் திருவருளொளி தாவிச் சென்று மல இருள் கெடும்படி செய்யும்.

வி–கு: புகல் எளிதாம் – எளிதிற் புகும். புவனம் எட்டு – ஆன்மாத் தங்கும் புரியட்டகம் எனப்படும் பரசரீரம். எட்டாவன: பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, தொழிற்பொறி ஐந்து, அறிவுப் பொறி ஐந்து, அகக்கருவி மூன்று, குணம், மூலப்பகுதி கலைமுதல் ஏழு என்னும் எட்டுக் கொத்துக்கள்.

திருவருள் ஒளி ஆன்மாவைத் தூய்மை ஆக்குதலன்றி, அதனில் அடங்கி நிறையும் மாயேயங்களையும் தூய்மையுறச் செய்யும் என்றபடி. இதனை 'ஐந்துபேர் அறிவும்' எனவும், 'அளப்பரும் கரணங்கள்' எனவும், 'திருந்து சாத்துவிகம்' எனவும் நம்பி ஆரூரர் கரணங்களை அடைகள் கொடுத்துச் சேக்கிழார் அடிகள் சிறப்பித்துள்ளமையைக் காண்க. இன்னும் அவர் ஆளுடைய பிள்ளையார் கூத்தப்பிரானைக் கண்டு பேரின்பு

எய்தினமையை "உணர்வின் நேர்பெற வருசிவ போகம் ஒழிவின்றி – உருவின்கண் ஐம்பெறி அளவினும் அருளினை எனப் போற்றி" எனக் குறிப்பித்தலும் காண்க. (34)

**விளங்கொளி அங்கி விரிகதிர் சோமன்**
**துளங்கொளி பெற்றன சோதி யருள**
**வளங்கொளி பெற்றதே பேரொளி வேறு**
**களங்கொளி செய்து கலந்துநின் றானே.** 2682

க–து: இஃது எல்லா ஒளிகளுக்கும் முதல் திருவருள் ஒளி எனக்கூறுகின்றது.

பொ–ரை: உலகில் அறியப்படும் ஒளியை உடைய அங்கி, ஞாயிறு, மதி என்பவை பரஞ்சோதியாகிய சிவபிரான் மாறுபடும் ஒளிகளை அருளினமையால் பெற்றன. குறைவிலா நிறைவாகிய வளப்பத்தைக் கொண்டோனாகிய அவனியற்கையி னுள்ளதே மூலமாகிய பேரொளியாகும். இவற்றின் வேறாக உயிர்களுக்கு அவற்றின் களங்கத்தின்கண், இருளிடை மிடையும் சிற்றொளி போலத் தன் ஒளியை அளவுபடுத்திக் கொடுத்து அவற்றோடு கலந்து நின்றான் என்பதும் உணர்க.

வி–கு: விளங்கு ஒளி அங்கி முதல் மூன்றனுக்கும் அடை. வளம் கொள்ளி என்க. கொள்ளி – கொண்டவன். களங்கு – களங்கம், மலம், களங்கத்திடை ஒளி செய்து என்க. (35)

**இளங்கொளி ஈசன் பிறப்பொன்று மில்லி**
**துளங்கொளி ஞாயிறுந் திங்களுங் கண்கள்**
**வளங்கொளி அங்கி மற்றைக்கண் நெற்றி**
**விளங்கொளி செய்கின்ற மெய்காயம் ஆமே.**
2683

க–து: இஃது இறைவன் உலகவுருவினனாதலைக் கூறுகின்றது.

பொ–ரை: இயல்பாக விளங்கும் அறிவொளியுடையனாய் யாவரையும் எவற்றையும் ஆள்பவனும் உயிர்களைப் பிறப்பிற் செலுத்தித் தான் ஏற்று மொழியினும் பிறப்பில்லாதவனும் ஆகிய சிவபிரானுக்கு யாவரானும் அறியப்பட்ட ஒளியாகிய ஞாயிறு திங்கள் என்பவை வல இடக்கண்கள் ஆம். வளத்தைக் கொள்வதாகிய அங்கி (நெருப்பு) அவன்றன் நெற்றியில் உள்ள மூன்றாவது கண் எனப்படும். ஒளி விளங்கும் அவனது மெய் ஆகாயம் ஆம்.

வி–கு: இலங்கு என்பது இளங்கு என வந்தது. காயம் – ஆகாயம். மெய் – உடம்பு. (36)

**மேலொளி கீழதன் மேவிய மாருதம்**
**பாரொளி யங்கி பரந்தொளி ஆகாசம்**
**நீரொளி செய்து நெடுவிசும் பொன்றினும்**
**மேலொளி ஐந்தும் ஒருங்கொளி யாமே. 2684**

க–து: இது திருவருள் ஒளி ஐம்பூதங்களும் தோன்றி நின்று ஒடுங்குதற்கும் இடமும் நிமித்தமும் ஆம் எனக் கூறுகின்றது.

பொ–ரை: மேலாகிய ஒளியாகிய திருவருள் அதன் கீழ் உள்ள காற்று, பார், அதன்கண் மறைந்துள்ள அங்கி, பரந்த ஒளிக்கு இடம் தரும் ஆகாசம், நீர் என்பவற்றை விளங்கச் செய்து நீண்ட அறிவு வெளியாகக் கலந்து நிற்பினும் அம் மேல் ஒளி, மேற் கூறிய ஐம்பூதமும் ஒன்றி அடங்கும் ஒளி ஆகும்.

வி–கு: கீழதன் – அதன்கீழ் உள்ள, ஒளி அங்கி என்க. பரந்த ஒளி: அகரந் தொக்கது. விசும்பு – பரவெளி. அம்மேல் ஒளி எனச் சுட்டு வருவிக்க. (37)

**மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி**
**பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி**
**துன்னிய வாறொளி தூய்மொழி நாடொறும்**
**உன்னிய வாறொளி ஒத்தது தானே.** 2685

க–து: இது நாடொறும் மானதமாகக் கணிக்கப்படும் மறைமொழி இறைவனையும் அவன்றன் ஐஞ்சத்தியையும் குறிக்கும் ஒளிகளாம் எனக் கூறுகின்றது.

பொ–ரை: யாவர்க்கும் மேலான மாறுபடாத ஒளியாகிய சிவபிரானும், அவன் மின்னல் போலச் சங்கற்பிக்கும் சங்கற்பமாகிய தூய பராசத்தியாகிய ஒளி, உலகிற்குக் கலைஞானத்தைச் சொல்லிய, யாங்கணும் நிறைந்த திருவருள் ஒளியாகிய ஆதி, அறிவு, இச்சை, செயல் என்னும் நான்கு ஒளியாகிய ஐந்தும் கூட, மொத்தமாகச் சேர்ந்த ஆறுவகை ஒளி, நாள்தோறும் உயர்ந்தோர் உளங்கொண்டு உன்னிய தூய மறைமொழிக்கண் விளங்கும் ஆறு வகைப்பட்ட ஒளியை ஒத்தது.

வி–கு: தூய்மொழி என்றது பிரணவம் எனக் கொண்டால், அதன் கலைகள் அ, உ, ம், விந்து, நாதம் என்பவற்றோடு நாதாந்தம் எனப்படும் சிவமும்கூட ஆறு ஒளி ஆகும். 'ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே' என்னும் திருப்புகழ் காண்க. அதனைப் பிரணவம் இசைந்த திருவைந்தெழுத்து என வைத்து ''போற்றியோ நமச்சிவாய சயசய போற்றி'' என்னும் தொடரில் வரும் மறை மொழியாகக் கொண்டால்,

பரனொடு ஐந்து சத்தியுமாம் என் மேற்காட்டியபடி ஆறு ஒளி ஆகும்

நாடொறும் உன்னிய தூய்மொழிக்கண் உள்ள ஆறு ஒளி என்க

இனி, ஞானம் பன்னிய பரந்த பரத்தொளி என்பவற்றை நால் வேதம் கொடுத்த தற்புருடம் முதலிய நான்கு முகங்களும், மின்னிய தூவொளியை ஈசானமும் எனக் கொள்ளினும் பொருந்தும்.

செவ்வொளி – மாறுபடாத நேர்மையான ஒளி; சிவ ஒளி. செம்மை ஈண்டு நிறத்தைக் குறித்ததன்று. ஐஞ்சத்தியை ஈசானி முதலியனவாகவும் கொள்ள இடம் உண்டு. (38)

**விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து**
**துளங்கொளி ஈசனைச் சொல்லுமெப் போதும்**
**உளங்கொளி யூனிடை நின்றுயிர்க் கின்ற**
**வளங்கொளி எங்கும் மருவிநின் றானே.** 2686

க–து: இஃது இறைவன் மின்னாய் நின்று அருளுமாறு கூறுகின்றது.

பொ–ரை: தன்னை எப்பொழுதும் உள்ளத்திற் கொள் ளும் அறிவரது உடம்பை இடமாகக் கொண்டு அவர்தம் உயிர்ப் பாய் உள்ள முதல்வன் எங்குமாய்ப் பொருந்தி நிற்கின்றான் அங்ஙனம் எங்கும் விளங்கத்தக்க ஒளி வடிவினன், மேகத்தின் கண் கணப்பொழுதில் தோன்றி மறையும் மின்னாயிருந்து உலகத்தும் பரத்தும் மாறி அசையும் ஒளி போன்ற சாதகரிடத்துத் தான் விளங்குமாற்றைப் புலப்படுத்துகின்றான்.

வி–கு: துளங்கொளி – நினைப்பும் மறப்பும் உடைய உயிர். அவ்வுயிர்க்கண் ஈசன் சாதனங்களைக் கொண்டு வழிபடும்போது விளங்கி மறையும் இயல்பு உள்ளவன். கரந்து – மேகத்தில் மறைந்து. உயிர்க்கின்ற வளம் என்க. வளம் – இயல்பு. (39)

**விளங்கொளி அவ்வொளி அவ்விருள் மன்னும்**
**துளங்கொளி யான்தொழு வார்க்கும் ஒளியான்**
**அளங்கொளி ஆரமு தாகநஞ் சாரும்**
**களங்கொளி ஈசன் கருத்தது தானே.** 2687

க–து: இது சிவபிரான் உயிர்களிடத்து மன்னி விளங்குமாறு கூறுகின்றது.

பொ–ரை: இயல்பாய் விளங்கொளியாகிய ஈசன் தன்னால் ஒளிரும் உயிர், மாயை என்பவற்றில், அவை மல நடைப்படும்போதும் தங்குவன். மிக்கு விளங்கு ஒளிவடிவச் சிவன், அருள் நடைப்பட்டுத் தன்னைத் தொழும் அன்பர்க்கும் அறிவர்க்கும் மறையான். ஒளி உள்ள சுவை நிறைந்த அமுது தேவர்க்குக் கிடைத்தற் பொருட்டு ஆலகால நஞ்சை உண்ட கறுத்த கழுத்தை உடைய அப்பெருமானுக்குத் திருவுள்ளம் இருள் மலத்து அழுந்தும் உயிர்க்கு அவ்விருள் நீங்கி அமுதம் எனப்படும் சிவத்தன்மையை அருள்வதே ஆகும்.

வி–கு: இருள் – இருள்மலம். களம் – கழுத்து. (40)

**இலங்கிய தெவ்வொளி யவ்வொளி ஈசன்**
**துலங்கொளி போல்வது தூங்கருட் சத்தி**
**விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி**
**உளங்கொளி யுள்ளே ஒருங்குகின் றானே.** 2688

க-து: இஃது இறை, சத்தி, உயிர் மூன்றும் முச்சுடர் எனக் கூறுகின்றது.

பொ-ரை: தானே தன்னொளியாய்ச் சுடர்வது எச் சுடரோ அச்சுடர் ஈசன்; அச்சுடரைக் காட்டும் ஒளிக் கதிர் போன்றது அச்சுடரோடு பிரிப்பின்றித் தங்கும் திருவருள் ஆற்றல்; அவ்வருளால் விளக்கம் எய்தும் ஒளியோடு கூட விரிசுடர் மூன்றாகும். தான் தோன்றியாகிய சிவபிரான் தன்னை உளங்கொள்ளும் மெய் உணர்வினன் நெஞ்சக் கமலத்தே ஆன்மாவையும் அருட்சத்தியையும் தன்னுள் அடக்கி எல்லாம் தான் என நிற்கின்றான்.

வி-கு: ஒருங்குதல் – பிறவற்றைத் தன்னுள் அடக்கி ஒரு முதலாதல். (41)

**உளங்கொளி யாவதென் உண்ணின்ற சீவன்**
**வளங்கொளி யாநின்ற மாமணிச் சோதி**
**விளங்கொளி யாய்மின்னி விண்ணில் ஒடுங்கி**
**வளங்கொளி யாயத்து ளாகிநின் றானே. 2689**

க-து: இஃது இறைவன் உயிர்க்குயிராய்த் தோன்றி அடியார் நடுவுள் இருப்பன் என்றுணர்த்துகின்றது.

பொ-ரை: அன்பர்தம் உள்ளங்களைத் தனக்கு உரிய இடமாகக் கொள்ளும் பொருள், என்னுள் நின்று என்னை நடத்தும் உயிர் (உயிர்க்கு உயிர் என்றபடி). அப்பொருளே வண்மையை உடைய, சிறந்த மணியில் மறைந்துள்ள சோதி யனையது. அது தன்னைத் தொழுவார்க்குத் தானே விளங்கும் ஒளியாகி, மேலான அறிவு வெளியில் மின்னல் போல் தோன்றி, அதன்கண் மறைவதாய், அவன்றன் குண நலன்களை ஏற்றுக்

கொள்ளும் அறவோர் கூட்டத்துள் அணுக்கமாய் நின்றருள்வன்.

வி–கு: வளம் – முன்னையது உலகம்; பின்னையது இறைவன்றன் அருட்குணங்கள். ஆயம் – திருக்கூட்டம். "விறகிற்றீயின் நன்பாலிற் படு நெய்போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான் – உறவு கோல் நட்டுணர்வு கயிற்றினால் – முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே" என்னும் அப்பர் அடிகள் அருள்மொழி கருதத்தக்கது. (42)

**விளங்கொளி யாய்நின்ற விகிர்தன் இருந்த**
**துளங்கொளி பாசத்துள் தூங்கிருள் சோர**
**கலங்கிருள் நட்டமே கண்ணுத லாட**
**விளங்கொளி யுன்மனத் தொன்றிநின் றானே. 2690**

க–து: இஃது இறைவன் உயிர்களின் மலம் கெடத் திருக்கூத்தாடுவன்; அவன் விளங்கும் உயிர்கட்கு மாயை மயக்காது எனக் கூறுகின்றது.

பொ–ரை: இயற்கையுணர்வினனாகிய முதல்வன் விளங்கும் உணர்வுடை உயிர்களின் பாசமாகிய மாயை, மாயேயம், வினை என்பவற்றில், முன் தங்கியிருந்த இருள் மலத்தின் செயல் பற்றமாட்டாது. இருள்மலம் கலங்கித் தன் ஆற்றல் மெலியும் ஐந்தொழிற் கூத்து ஆடுதற்கு, அம்முதல்வன் நுண்ணுடலில் தலையாகிய உன்மனை முடிவில் தன் அருளோடு ஒன்றி உளன்.

வி–கு: விகிர்தன் – போகி, வேகி, யோகி என தன்னுள் வேறுபட நிற்பவன். உன்மனாந்தத்து எனற்பாலது உன்மனத்து எனத்திரிந்து நின்றது. உன்மனத்தில் என உரைப்பாரும் உளர்.

விளங்கொளி பின்னையது சுட்டளவாய் நின்றது. துளங்கு ஒளி – கலங்கும் அறிவாகிய உயிர். உயிரின்கண் அருள் விளங்கின் பாசம் ஒளியாய்த் தூய்மையுடன் திகழும் என்றபடி.

இங்குத் திருக்கூத்து மிகுநுண்கூத்து; (அதி சூக்கும பஞ்சகிருத்தியம்) அது மாயையை உதறி, வினையைச் சுட்டு, மலஞ்சாய அமுக்குவது: பின் அருள் நிலைக்கண் ஆருயிரை எடுத்து நிறுத்தி ஆனந்த வெள்ளத்துள் அழுத்தல் நிகழும். (43)

**போது கருங்குழற் போனவர் தூதிடை**
**ஆதி பரத்தை அமரர் பிரானொடும்**
**சோதியும் அண்டத்தப் பாலுற்ற தூவொளி**
**நீதியி னல்லிருள் நீக்கிய வாறே.** **2691**

க–து: இஃது இறைவன் மறைப்பாற்றலாய் (திரோதான சத்தி) இருள் மலத்தை மெலிவிக்குமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: வீடுபேறு எய்தினோர் தலைவனோடு உயிர் களைக் கூட்டுதற் பொருட்டுத் தூதாக இடையிற் சென்றவர் பேரரும் பணிந்த கரிய கூந்தலாள் என்று உருவகிக்கப்படும் ஆதியாகிய பரத்தை; இவ்வாற்றலோடு கூடிச் சோதியும், உயிர் களின் உணர்வைக் கடந்த தூவொளியுமானவன் முறையாக இரவிருளை நீக்கியவாறு வியப்புடைத்து.

வி–கு: அண்டர்பிரானொடும் உயிரிடைத் தூது போனவர் போது கருங்குழலாகிய ஆதிபரத்தை. இவளோடு கூடிச் சோதியும் தூவொளியும் ஆனவர் அல் இருள் நீக்கியவாறு அழகிது! எனக்கூட்டி உரைக்க.

பரத்தை – பரமாகிய அழகியோள். ஆதி – மறைப் பாற்றல். சோதி – மறைப்பாற்றலாய் நின்று ஐந்தொழில் செய்யும் இறைவன். தூவொளி செம்பொருளாம் சிவம். அமரர்பிரான் என்றதும் அது.

பிறப்பு நிலையில் இருள் ஒருசிறிது நீக்கி உயிர்க ளுக்குப் பலவகையில் உணர்த்துவது சோதி; வீட்டு நிலையில் இருள் முழுதும் இரியப் பேரின்ப ஒளியாய் உயிரை உட்கொண்டு நிற்பது தூவொளி. (44)

**உண்டில்லை யென்னும் உலகத் தியற்கை**
**பண்டில்லை யென்னும் பரங்கதி யுண்டுகொல்**
**கண்டில்லை மானுடர் கண்ட கருத்துறில்**
**விண்டில்லை யுள்ளே விளங்கொளி யாமே. 2692**

க–து: இஃது இறைவன் உணர்வுசூழ் கடந்து உள்ளே ஒளிவளர் விளக்காய் உள்ளனன் என்று உணர்த்து கின்றது.

பொ–ரை: காணப்படும் பொருள்களையே உண்டு எனவும் இல்லை எனவும் மாறிக்கொள்ளும் உயிர் களின் தெளிவற்ற இயல்பு பழம்பொருளை இல்லை என்று துணிவது; அவ்வுலகிற்கு அப்பழம் பொருளை அடைதற்கு உரிய மேலான நெறி உளதாமோ! (ஆகாது). மனத்தால் நினைத்து அறியும் மக்கள் முதல்வனைக் கண்டது இல்லை; அவர் கண்ட உணர்வைப் பெறின், அந்நிலையில் (தம் காட்சியை) விண்டதும் இல்லை. ஆயின், முதற்பொருள் எவ்வியல்பிற்றாம் எனின், உணர்வுக்கு உணர்வாய் உள்ளே ஒற்றித்து நின்று காண்போர்க்கு விளங்கும் ஒளி ஆகும் என்க.

விー-கு: என்னும் – முதலாவது எச்சம், இரண்டாவது முற்று. பாட்டு ஐந்து முடிவாக வைத்து ஒரு பொருள் மேல் வர உரைக்கப்பட்டமை கண்டு கொள்க. பண்டு – பழம்பொருள்; உலகத் தோற்றத்திற்கு முன் இருந்த முதற்பொருள் (பண்பாகு பெயர்). (45)

**சுடருற ஓங்கிய ஒள்ளொளி யாங்கே**
**படருறு காட்சிப் பகலவன் ஈசன்**
**அடருறு மாயையின் ஆரிருள் வீசில்**
**உடலுறு ஞானத் துறவியன் ஆமே. 2693**

க–து: இஃது அண்டம் ஆர் இருள் கடப்பின், இறை யுணர்வை கைகூடும் என்றுணர்த்துகிறது.

பொ–ரை: தன் முதலாகிய சுடரைக் கண் பற்றும்படி எங்கும் பரவியுள்ள மிக்க ஒளியைப் போல, திருவருளொளி யைச் சார்ந்து படர்தற்கண் தோன்றும் காட்சியையுடைய ஞாயிறு போல் நிற்கும் தன்மையன் ஈசன்; உடல், கருவி, உலகு, நுகர்வு எனச் செறிந்து தன் வயப்படுத்தும் மாயையினூடு புகுந்து சுட்டுணர்வைப் பயக்கும் நிறைந்த இருள்மல வலியை ஞான வாள் கொண்டு நீக்கின், அங்ஙனம் மலமாயைகளை முரணி நிற்கும் ஞானத்திற்கு முதலாகத் தோன்றி, உயிர்க்கு மீளாத உறவுள்ளவன் ஆவன் அம் முதல்வன்.

வி–கு: ஆங்கே – உவம உருபு. மாயையின் ஆரிருள் வீசுதல் – தத்துவ ஆய்வு வாயிலாக அவற்றைக் கடந்த தன் உண்மையியல்பைத் தலைப்படல். பகலவனைக் காணுதற்கு அவன் ஒளியையன்றி வேறு ஒளி பயன்படா; அதுபோல ஈசனைக் காணுதற்கு அவன்றன் அருளொளியே வேண்டப்படும்; மாயையாகிய விளக்கு வேண்டப்படாது; அதன் நீக்கமே வேண்டப்படும் என்பது கருத்து. (46)

**ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்றன்**
**அளிபவ ளச்செம்பொன் ஆதிப் பிரானும்**
**களிபவ ளத்தினன் காரிருள் நீங்கி**
**ஒளிபவ ளத்தென்னோ டீசன்நின் றானே. 2694**

க–து: இறைவன் உயிர்க்குற்றம் நீக்கி அதன்கண் உறைதலைக் கூறுகின்றது.

பொ–ரை: திருவெண்ணீற்றில் மறையும் பவள வண்ணன், செம்பொன்மேனி முதல்வன், உயிர்களுக்கு களி விளைக்கும் பவள நிறத்தையுடைய இளமுளை ஞாயிறு போல், என் உணர்வில் விளங்கி மிக்க இருளைக் கடிந்து, பளிங்கில் ஒளியும் பவளத்தைப் போல என் உடனாகி நின்றனன்.

வி–கு: ஒளி பவளம் – இரண்டும் வினைத்தொகை நிலைத்தொடர். களி பவளத்து இனன் எனப் பிரிக்க, இனன் – ஞாயிறு. இனன் ஆய் என உவம உருபு வருவிக்க. (47)

**ஈசன்நின் றானிமை யோர்கள்நின் றார்நின்ற**
**தேசமொன் றின்றித் திகைத்திழைக் கின்றனர்**
**பாசமொன் றாலப் பழவினை பற்றற**
**வாசமொன் றாமலர் போன்றது தானே. 2695**

க–து: இஃது உயிர்களுக்கு வினை நீக்கத்தில் முதற் பொருட்காட்சி உண்டாகும் எனக் கூறுகிறது.

பொ–ரை: உயிர்களை ஆளும் முதல்வன் எங்கும் நிறைந்து உளன்; உயிர்களுள் நல்வினை மிகுதியுடைய வானவர் களும் அவன் நிறைவில் அடங்கியே நிலைத்துள்ளனர். ஆயினும், தம் அறிவை விளக்கும் ஒளி சிறிதும் பெற்றிலராய்,

தடுமாற்றம் உடையராய் வினைகளைச் செய்கின்றனர். (இதனால் இருவினை உள்ளவரையில் இறைவன் அருளொளி விளங்காது என்பது பெற்றாம்). பாசம் மூன்றே ஆயினும், ஒன்றே என்னும்படி, வினை பற்றுதல் நீங்கின், மணத்தோடு ஒன்றியுள்ள மலர் போன்று அவ்வுயிர் தன்கண் சிவஒளியைக் கண்டு, அவ் வொளியில் அடங்கும்.

வி–கு: மலபரிபாகம் உண்டாம் போதே வினைபற்றறும்; ஆதலினால் வினை நீக்கத்தில் மலமும் நீங்கிவிட்டது ஆம். வினைப்பயன் ஊட்டுதற்குத் துணையாய் நிற்பது மாயை; அதனால், அதுவும் காட்சிப்படாது என்பது பெற்றாம்.

மலர் உயிரையும் வாசம் (மணம்) சிவத்தையும் குறிக்கும். தேசம் – ஒளி; தேசசு என்பதன் தற்பவம். (48)

**தானே யிருக்கும் அவற்றிற் றலைவனும்**
**தானே யிருக்கு மவனென நண்ணிடும்**
**வானா யிருக்குமாம் மாயிரு ஞாலத்துப்**
**பானா யிருக்கப் பரவலு மாமே. 2696**

க–து: இஃது இறைவனைத் தெளிந்து பரவுமாறு கூறுகின்றது.

பொ–ரை: ஒருவனாகிய சிவபிரானே மறைகளில் உள்ள முற்றுத் தொடர்களாக இருப்பவன்; அவற்றில் கூறப்படும் தலைவனும் அவனே. திருமறையும் அவனே என ஓதுவோரை நண்ணுவிக்கும் வானினின்று உண்டாயிருக்கும் இப்பெரிய உலகத்தில் ஒருவன் மேலோனாய் இருத்தற் பொருட்டு. இவ்வுண்மையை உணர்ந்து, அவனைப் புகழ்ந்து வழிபடுதலும் பொருத்தமே.

வி-கு: இருக்கு - மறைத்தொடர்: அஃறிணையியற் பெயர். நண்ணிடும் - நண்ணுவிக்கும் எனப் பிறவினைப் பொருள் பயந்து நின்றது. (49)

## 5. தூல பஞ்சாக்கரம்

அஃதாவது இறைவன் திருப்பெயர் உணர்த்துதல்.

**ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்**
**ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்**
**ஐம்ப தெழுத்தின் அடைவை அறிந்தபின்**
**ஐம்ப தெழுத்தே அஞ்செழுத் தாமே. 2697**

க-து: இஃது எல்லா நூற்பொருளும் அஞ்செழுத்தின் பொருளாய் அடங்குதல் கூறுகின்றது.

பொ-ரை: வேத ஆகமங்கள் ஐம்பது எழுத்தில் அடங்கும்; அவ்வெழுத்துக்களின் தோற்றமுறையை அறிந்தால் அவை அனைத்தும் திருவைந்தெழுத்தில் அடங்கும். இவ்வைந்தெழுத்தே தூல பஞ்சாக்கரம் எனப்படும், இதனை 'நமச்சிவாய வா அழ்க!' என்னும் திருவாசகத்தாலறிக. இவை முறையே மூர்த்தி, வாமை, ஆர்த்தி, பூரணி, ஈசானி என்னும் ஐஞ்சத்திகளையுணர்த்தும். இச்சத்திகள் திருவைந்தொழிலைச் செய்வனவாய் சத்தியோசாதம் முதலிய ஐம்பெரு மறைகளாற் குறிக்கப்படும். இம்மறைகளுக்கு அ, இ, உ, எ, ஒ என்பவை வீரிய பீசங்களாம், இவை நாத விந்துக்களோடு சேர்க்கப்பெற்று ஹம் முதலியவாக உச்சரிக்கப்படும். ஹம் முதலியவற்றோடு நம் முதலியவற்றைச் சேர்த்து வழங்கும் ஒழுக்கமும் உளது. விரிவு. வல்லார் வாய்க் கேட்டுணர்க. (50)

**அகார முதலாக ஐம்பத்தொன் றாகி**
**உகார முதலாக ஓங்கி யுதித்து**
**மகார இறுதியாய் மாய்ந்து மாய்ந்தேறி**
**நகார முதலாகும் நந்திதன் நாமமே. 2698**

க–து: திருவைந்தெழுத்து பிரணவ கலைகளின் திரிபு (பரிணாமம்) ஆமாறு கூறுவது இது.

பொ–ரை: எல்லாக் கலைகளுக்கும் முதற்காரணமாய் நிற்கும் ஐம்பதெழுத்தும் பிரணவகலைகளாகிய அகர, உகர, மகரங்களில் முறையே தோன்றிப் பின் வளர்ந்து நின்று, பின் மாய்ந்து இவ்வாறே அவற்றை முதலாகக் கொண்டு வருவன வாக, அவையும் அவற்றின் முதல்களாகிய விந்து, நாதங்களும் திரிதலால் உண்டாகும் நகாரம் முதலிய ஐந்தெழுத்தும் இறைவன் திருநாமம் எனப்படும். (51)

**அகராதி ஈரெண் கலந்த பரையும்**
**உகராதி தன்சத்தி உள்ளொளி ஈசன்**
**சிகராதி தான்சிவ வேதமே கோணம்**
**நகராதி தான்மூல மந்திர நண்ணுமே. 2699**

க–து: இது மறைமொழி மரபு உணர்த்துகின்றது.

பொ–ரை: அகரம் முதல் பதினாறு ஆகிய உயிர் எழுத் துக்களைக் கலந்து நிற்கும் பராசத்தியும் உ–முதலாகிய பிரணவம் (உமா) ஆம்; அந்தத் தன் சத்தியின் உள்ளொளியாய் முதலாய் நிற்பவன் ஈசன் ஆம். அவன் திருப்பெயரைச் சிகரம் முதலாக் கூறுதற்கண் அது மூன்று தொடர் ஆகி சிவத்தையும் ஏதத்தையும் கோணத்தையும் உணர்த்தும். நகரம் முதலாக அமைந்த வடிவு மூலமந்திரமாக மறைகளில் வரும்.

வி–கு: சிவ – வெளிப்படை. ஏதம் – நம (ஊன நடம் எனவும் படும்) கோணம் – இரு நேர்க்கோடுகளின் இடைப்படும் கோணம் போன்றதாகிய ஆன்மா. அது – ய – ஆகும் ம – மலத் தையும், ந . திரோதத்தையும் அதன்கண் அடங்கும் மாயை வினைகளையும் உணர்த்தலின், அவ்விரண்டன் சேர்க்கையை ஏதம் என்றார்; ஏதம் – குற்றம், பிறப்புநிலை. (52)

**வாயொடு கண்டம் இருதய மருவுந்தி**
**ஆய இலிங்கம் அவற்றின்மே லேயவ்வாய்த்**
**தூயதோர் துண்டம் இருமத் தகஞ்செல்லல்**
**ஆயதீ ராமைந்தோ டாமெழுத் தஞ்சுமே.** 2700

க–து: இது திருவைந்தெழுத்து சூக்குமை முதலாகத் தோன்றி வைகரியாய் வெளிப்படுமாறு கூறுகின்றது.

பொ–ரை: திருவைந்தெழுத்து வாயை அடுத் துள்ள கழுத்து, நெஞ்சு, உந்தி, மூலம் என்பவற்றின் மேல் செவிப்புலனாகாத ஒலிவடிவாய், அடைபடாத மூக்கு முதல் தலை ஈறாகக் கூறப்படும் ஐந்திடம் உற்று வைகரியாய் வெளி வரும்.

வி–கு: மேல் ஏய் அவ்வாய் –'எனப்பிரிக்க. அ–ஆதி அகரம் எனப்படும் நுண் ஒலி. அது மூல முதல் உந்தி வரை சூக்குமையாய் (பரை எனவும் படும்). உந்தி முதல் நெஞ்சு வரை பைசந்தியாய், நெஞ்சு முதல் கழுத்து வரை மத்திமையாய் அரும்பி மலர்ந்து, காய்த்து வரும். பின் வைகரியாய்க் கனியும் என்க. இலிங்கம் – தன்மேல் உள்ள மூலத்தைக் குறிக்கும். வாய் என்றது அண்ணத்தின் அடி. மத்தகம் ஈறாகிய ஐந்து இடமாவன மூக்கு, இதழ், பல், நா, தலை என்பவை. (53)

**கிரணங்கள் ஏழும் கிளர்ந்தெரி பொங்கிக்**
**கரணங்கள் விட்டுயிர் தானெழும் போதும்**
**மரணங்கை வைத்துயிர் மாற்றிடும் போதும்**
**அரணங்கை கூட்டுவ தஞ்செழுத் தாமே.** 2701

க–து: இஃது உயிர் உடலை விடும்போது அதற்கு அருளைக் கூட்டுவிப்பது திருவைந்தெழுத்து என்பது உணர்த்து கின்றது.

பொ–ரை: தீபற்ற அதனால் உடலைவிட்டு உயிர் நீங்கும் போதும், இயற்கையில் இறப்பு வந்து உயிரைஉடலி னின்றும் பிரிக்கும்போதும், அவ்வுயிர்க்கு பாதுகாப்பாக உள்ள திருவருளை எய்துவிப்பது திருவெழுத்து ஐந்தாம்.

வி–கு: கிரணங்கள் ஏழு – ஊதா, கருநீலம், நீலம், பச்சை, மஞ்சள், செம்மஞ்சள், சிவப்பு என்னும் ஒளிக்கதிர்ப் பிரிவு. இவற்றின் கிளர்ச்சியோடு கூடிய எரி என்க. எரி பொங்குதலால் கரணங்களை விடும் உயிர் என்பது மற்றும் அத்தகைய அகால இறப்புக்களைக் கொள்ளும். கரணங்கள் – அகக்கருவி புறக் கருவிகளோடு கூடிய பருவுடல்.

*வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்*
*றஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே*

என்னும் ஆளுடைய பிள்ளையார் திருமொழியைப் புடைபட வைத்துக் காண்க. (54)

**ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்**
**ஆயுறு மந்திரம் ஆரும் அறிகிலர்**
**சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்**
**வாயுற வோதி வழுத்தலும் ஆமே.** 2702

க—து: இஃது உயிர்ப்பை அடக்கி நிற்கும் வளி நிலைக் கண் ஓதத் தகுவதும் திருவெழுத்தைந்தே எனக் கூறுகின்றது.

பொ—ரை: வலது இடது நாடிகளில் உயிர்ப்பு பயின்று எழும்பொழுது அவற்றை அடக்கியும் விடுத்தும் நுணுகிப் பொருந்தும் அசபை மறையை எல்லோரும் அறியார்; சிலரே அறிவர். செவ்வரி பொருந்திய கண்களையுடைய உமையம்மை பேணியதாக உள்ள திருவெழுத்தைந்தையும் உயிர்ப்பை ஒடுக்கி மனத்தை ஒருக்கும் போது வாய்க்கும்படி ஓதிச் சிவபிரானை வழுத்துதலும் பொருத்தமே ஆகும்.

வி—கு: ஞாயிறு – வலப்பக்கம் நிகழும் உயிர்ப்பு. திங்கள் – இடப்பக்கம் நிகழும் உயிர்ப்பு. ஹம்சம் என்னும் அசபையில் ஹம் என்பது விடுப்பதும், ஸம் என்பது உட்கொள்ளு வதுமாக இருக்கும் என்ப. வளிநிலை – பிராணாயாமம்.

**ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்**
**ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்**
**தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்**
**ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே.**

என்னும் ஆளுடைய பிள்ளையார் அருமறை எண்ணத்தக்கது.

பிரணவம், அசபை, நுண் ஐந்தெழுத்து, பருவைந் தெழுத்து என்பவை யாவும் அருள்நாதத் திரிபாய் ஒரே பயன் தருபவை என்றபடி. (55)

**தெள்ளமு தூறச் சிவாய நமவென்**
**றுள்ளமு தூற ஒருகால் உரைத்திடும்**
**வெள்ளமு தூறல் விரும்பி யுண்ணாதவர்**
**துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே.** 2703

க–து: இது திருவைந்தெழுத்தை ஒருக்காலும் பற்றாதவர் பிறப்பிற்பட்டுச் சுழல்வர் எனக் கூறுகின்றது.

பொ–ரை: தெளிந்த அமுதமாகிய சிவபிரான் தன் அருளை வழங்கும்படி அன்பால் இன்பம் ஆர்ந்து ஒருகாலேனும் உரையாத, வெண்மையான அமுது ஊறி நிற்கவும் அதனை வினை காரணமாக மறுத்து உண்ணாதவரை ஒப்பர்; அவர் நீர்த்துளிகள் காற்றில் அலைவதுபோல் வினையால் அலைப் புண்டு பிறப்பிற் சுழல்வர்.

வி–கு: உரைத்திடும் ஊறல் என முடிக்க; உரையால் வரும் பயனை அமுது ஊறல் என்று உருவகித்தார்; உரைத்தலை உண்ணுதலாக உருவகித்தார். (56)

**குருவழி யாய குணங்களி னின்று**
**கருவழி யாய கணக்கை அறுக்க**
**வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்**
**கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே. 2704**

க–து: இது திருவைந்தெழுத்தே திருவருள் நெறியைச் சுருங்க வைத்து விளக்குவதென உணர்த்துகின்றது.

பொ–ரை: மெய்யுணர்வு தரும் தேசிகன் கூறும் நெறியில் உள்ள நற்பண்புகள் உடையனாய், பிறவி நெறிக்கண் உய்க்கும் நூல்களை விடவும், தொன்று தொட்டு வரும் அவ்வழி முடியும்படி அதனை நீங்கவும் விரும்புவார்க்குத் திருவருள் நெறியை இனிது உணர்த்துவது அஞ்செழுத்துத் தொடரே ஆகும்.

வி–கு: அறுக்க, மறுக்க வல்லார்கள் என்க. வல்லமை ஈண்டு விருப்பம். கணக்கு – நூல்; இங்கு அவற்றின் தொடர்பு. (57)

**வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது**
**செறிக்கின்ற நந்தி திருவெழுத் தோதும்**
**குறிப்பது வுன்னிற் குரைகழல் கூட்டும்**
**குறிப்பறி வான்றவம் கோனுரு வாமே.** 2705

க–து: இது திருவைந்தெழுத்து வினைத்துயர் நீக்கிச் சிவ உருவைத் தரும் என உணர்த்துகின்றது.

பொ–ரை: மயங்கும்படி ஒருவனுக்கு வினை காரண மாகத் துயர் விளையும்போது, எங்குஞ் செறிகின்ற சிவன் அஞ்செழுத்தை ஓதும் நினைவையுடையன் ஆயின், அந்நினைவு துயர் களைந்து சிவன் திருவடியைக் கூடச் செய்யும்; திருவைந் தெழுத்தின் பொருளை அறிந்து செய்யும் தவம் அவ்வறிவா னுக்குச் சிவனுருவை ஆக்கும்.

வி–கு: செறிக்கும் தன்வினைப்பொருளும், ஆமே பிற வினைப் பொருளும் தந்தன. குறிப்பு – திருவெழுத்து குறிக்கும் பொருள்கள். (58)

**நெஞ்சு நினைந்துதம் வாயாற் பிரானென்று**
**துஞ்சும் பொழுதுன் துணைத்தாள் சரண்என்று**
**மஞ்சு தவழும் வடவரை மீதுறை**
**அஞ்சில் இறைவன் அருள்பெற லாமே.** 2706

க–து: இஃது இறைவனை வந்தித்து உய்யுமாறு உணர்த்துகிறது.

பொ–ரை: ஒருவன் இறைவனை மனத்தால் எண்ணி, வாயால் ஆண்டவன் என்று சொல்லி, தான் இறக்கும் போது அவன்றன் இருதாள்களே புகலிடம் என்றும் கூறிவந்தால், திருக்

கயிலையில் உள்ள, அஞ்சுதலை இல்லையாக்கும் இறைவன் திருவருளைப் பெறல் ஆகும்.

வி–கு: அஞ்சு – அஞ்சுதல்; இல் – இல்லாகச் செய்யும். (59)

**பிரான் வைத்த ஐந்தின் பெருமை உணரா**
**திரா மாற்றஞ் செய்வார்கொல் ஏழை மனிதர்**
**பரா முற்றும் கீழொடு பல்வகை யாலும்**
**அரா முற்றுஞ் சூழ்ந்த அகலிடந் தானே. 2707**

க–து: இது திருவைந்தெழுத்து இறைவன் தன்னை அணைதற்கு வைத்த உயர் மறை என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: உயிர்களுக்குத் தலைவன் அவை எண்ணி இருள் நீங்கி உய்தற் பொருட்டுத் தான் அருளிய திருமறையில் சிறப்பாக வைத்த மந்திரம் திருவைந்தெழுத்து; அதன் பெருமையை அறிவற்ற மனிதர்கள் சிலர் உணர்வதில்லை. அவர்கள் அண்டமார் இருளைக் கடப்பரோ? கடவார். அதன் பெருமையைக் கூறப்புகின், அதுவே பராசத்தியின் வடிவு முழுவதுமாம்; கீழ் எனப்படும் அதோ மாயையோடு பல வகையில் அசையும் அராவெனப்படும் ஊர்த்துவ மாயையின் காரியம் அனைத்தும் அதுவே; உயிர்களின் நிலைக்களமாய்ச் சூழ்ந்துள்ள அகன்ற நிலமும் அதுவே.

வி–கு: உரையில் வருவிக்கப்பட்டவை இசையெச்சம். பரா – பரை எனப்படும் திருவருளாற்றல்; இங்கு அதன் செயல் களை உணர்த்திற்று. மாயை சுத்தம் அசுத்தம் என இருவகைத்து. அவற்றுள் சுத்த மாயை ஊர்த்துவ மாயை எனப்படும்; இது குண்டலினி எனவும் அரவு எனவும் குறிக்கப்படும். அசுத்த

மாயை அதோமாயை எனப்படும். இது சுத்த மாயையின் கீழ் அதனால் வியாபிக்கப்பட்டு உள்ளது. ஊர்த்துவம் – மேல். அதோ, அத: – கீழ். ஆலும் – அசையும், விருத்திப்படும். கடல் சூழ்ந்த எனினும் அமையும். தானே என்றது திருவைந் தெழுத்தை; அதுவே உயிர்க்குச் சார்பு என்றபடி. (60)

## 6. சூக்கும பஞ்சாக்கரம்

இவ்வதிகாரம் நுணுகி உணரும் திருவைந்தெழுத்தின் வடிவம், பயன், பெருமை முதலியவற்றை உணர்த்துவது.

**எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை**
**ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்த்**
**தெளிய ஓதிச் சிவாய நமவென்னும்**
**குளிகை யிட்டுப்பொன் ஆக்குவன் கூட்டையே. 2708**

க–து: இது சூக்கும பஞ்சாக்கரத்தின் வடிவும் பயனும் உணர்த்துகின்றது.

பொ–ரை: வாழ்க்கையின் முடிந்த பயனை உணராதார் எளிமையான பொருள்கள் பற்றிச் சொற்போர் புரிவர்; அதனை விடுத்து, எம் ஆண்டவனும், அறிவுப் பேரொளியுமாகிய முதல்வனை உள்ளத்தில் எண்ணி, அன்பு செய்து 'சிவாய நம', என்னும் மறையின் பொருள் உணர்ந்து ஓதின் களிம்பொடு கூடிய அவர்தம் உயிரையும் ஊனையும் அம்மறையாகிய குளிகையைக் கொண்டு களிம்பில்லாத செம்பொன்னாகச் செய்வன் முதல்வன்.

வி–கு: ஓதின் என்னும் பாடம் சிறக்கும். குளிகை – தாழ்ந்த உலோகங்களைப் பொன்னாக மாற்றுவதோர் மணி (மாத்திரை). (61)

**சிவன்சத்தி சீவன் செறுமல மாயை**
**அவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச்**
**சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர**
**அவஞ்சேர்த்த பாசம் அணுக கிலாவே. 2709**

க–து: இது திருவைந்தெழுத்தின் குறிப்புப் பொருளும், அதனை ஓதுங்கால் நிற்கும் முறையும் கூறுகின்றது.

பொ–ரை: சிகாரம் முதலிய எழுத்துக்கள் முறையே சிவன், சத்தி, உயிர், மலத்தைச் செறும் திரோதம், மாயையாகிய அவத்தில் சேர்த்தற்குக் காரணமாகிய மூலமலம் என்பவற்றைக் குறிக்கும். உயிர் ஐம்மலங்களும் நீங்கும்படி சிவன் சத்தி என்பவற்றோடு சேர்ந்து நிற்பின், வீண் செயல்களில் புகுத்தும் மலமும், அதன்வழி நிற்கும் மாயை வினைகளும் உயிரைப் பற்றும் வலி இல்லனவாகும்.

வி–கு: ந – திரோதை; இதனுள் மாயை வினைகள் அடங்கும். ம – மலம். பாசம் – முன்னையது மலத்தை உணர்த்திற்று. மலம் ஐந்து – மலம் முதல் ஐந்து; மலம், மாயை, வினை, மாயேயம், திரோதை என்பவை.

சிம் முதலாக ஓதுங்கால், உயிர் அருளையும் அதன் முதலாகிய சிவத்தையும் முன்னிட்டு ஒழுக வேண்டும். அப்பொழுது நம அகலும். மாயேயமும் ந வில் அடங்கும் எனக் கொள்க. (62)

**சிவனரு ளாய சிவன்திரு நாமம்**
**சிவனருள் ஆன்மாத் திரோத மலமாயை**
**சிவமுத லாகச் சிறந்து நிரோதம்**
**பவம தகன்று பரசிவன் ஆமே. 2710**

க–து: இதுவும் அது.

பொ–ரை: திருவருள் உருவத் திருப்பெயரின் பொருள்கள் சிவன், அருள், ஆன்மா, திரோதம், மாயை, மலம் என்பவை. இப்பொருள் பயக்க சிவத்தை முன்னிட்டு உணர்ந்து ஓதிவரின், சிவ உயிர்க்கு முதலாகச் சிறந்து அதனைத் தங்கண்அடங்கி நிற்கச் செய்யும்; மறைப்பும், பவத்தைத் தரும் மலமும் நீங்கும்; உயிர் முடிவில் பரசிவமாய் விளங்கும்.

வி–கு: மலமாயை என்பவற்றை முன்பின் ஆக மாறுக. நிரோதம் – தடுத்தல். மறைத்தல் – ஈண்டுத் திரோதை. பவம் – அதற்கு மூல காரணமாய் நிற்கும் இருள்மலம். (63)

**ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டவ்**
**வாதி தனைவிட் டிறையருட் சத்தியால்**
**தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்**
**ஓதுஞ் சிவாய மலமற்ற உண்மையே.** 2711

க–து: இது துரிய அருள்நிலையாகிய சிவ யோகத்தைப் பயக்கும் ஆன்ம தரிசனம் ஆமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: மேற்சொன்ன பொருள் (திரோதை) தரும் ந, மலம் முதலியவற்றை ஒழித்திட்டபின், ஆதி எனப்படும் அத்திரோதையை விட்டு, இறையருட சத்தியைச்சாரின், அதனால் சிவஞானம் எனப்படும் (வாகுறிக்கும்) திருவருளோடு ஒன்றுத லாகிய சிவயோகம் உண்டாகும். அதற்குரிய ஓதுமுறை சிவாய என்பது; இஃது ஆன்மாவின் மலந்தீர்ந்த உண்மை நிலையைக் குறிக்கும்.

வி–கு: இதுவும் முன்னைய அதிகாரங்களும் ஞான நெறி பற்றிய சாதனங்களையே கூறுதலின், இங்குச் சரியை

கிரியை யோகம் எனப்படும் தவ நெறிகளை இணைப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. சரியை முதலிய நான்கும் முறையே சீலம், நோன்பு செறிவு அறிவு எனப்படும். பாட்டில் வந்துள்ள சிவஞான யோகம் என்பது ஞானநெறிக்கண் கூறப் படும் தச காரியங்களுள் ஒன்பதாவதாக எண்ணப்படும் சிவ யோகம் ஆகும். சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம் என்ப வற்றில் சிவ என்பது திருவருளையே குறிக்கும்; சிவபோகம் என்பதில் அஃது அருளுக்கு முதலாகிய சிவத்தைக் குறிக்கும்.

பாசம் நீங்கி, மலவாதனை நீங்காத நிலையில் நான் முதல் என நிற்றல் ஆன்ம ரூபம்; அது திருவருள் உண்மையை உணர்தலாகிய சிவரூபத்தாற் கழியும்; கழிந்தும் சிவன் செயலைத் தன் செயல் எனக் கொண்டு எல்லாம் செய்வல் என முனைந்து நிற்றல் ஆன்ம தரிசனம்; இது திருவருட் செயலை எனது என்னும் செருக்காகும். நஞ்செயல் அன்று திருவருட் செயல் என உணர்தல் சிவதரிசனம்; இந்த உணர்வால் ஆன்ம தரிசனம் அறியாமை யாய்க் கழியும். பின், திருவருளில் ஒன்றி உடனாதல் சிவயோகம்; இதுவே ஆன்ம சுத்தியும் ஆம். 'சிவாய' என்னும் வாய்பாடு சிவ தரிசனத்தால் தன் உண்மை உணர்தல், ''தன்னாலே தனையுணர்ந் தால் தன்னையும்தானே காணும்'' என்னும் சிவப்பிரகாசத் தொடருக்கு உரிய தொடர்.

ந – திரோதானசத்தி; அது மலமெல்லாம் ஒழித்திட்டுத் தன் உண்மையியல்பாகிய திருவருளாலேயே விளங்கும். (64)

**நமாதி நனாதி திரோதாயி யாகித்**
**தமாதி யதாய்நிற்கத் தானந்தத் துற்றுச்**
**சமாதித் துரியந் தமதாக மாகவே**
**நமாதி சமாதி சிவவாதல் எண்ணவே.** 2712

க–து: இது தூல வைந்தெழுத்திற்கும் தூய ஐந்தெழுத்திற்கும் பயன் வேறுபாடு கூறுகின்றது.

பொ–ரை: நமவை ஆதியாக உடையது திரோதான சத்தியாய் நின்று கேவல சகலங்களில் உள்ள நனவு ஆதிகளைப் பயந்து, ஐந்தெழுத்திற்கும் முன் நிற்க, உயிர் அதன் வயப்பட்டு இறுதியில் நிற்கும்; இஃது இங்ஙனமாக, சிவாய என்னும் தூய ஐந்தெழுத்தை யான்சிவமாகிறேன் (சிவோஹம் அஸ்மி) என்னும் பெருமொழியின் பொருள்பட வைத்துக் கணிப்பின் சமநிலைத் துரிய அருள்நிலை உயிரின் உடம்பாகும்படி நமவைக் கடப்பாய்.

வி–கு: நம ஆதி என்பது நமாதி என்றாயிற்று; நமவை ஆதியாக உடையது என அன்மொழித் தொகை நிலைத்தொடர். நனவு ஆதி என்பது நனாதி எனத் திரிந்தது. திரோதாயி – நவ்வால் குறிக்கப்பெறுவது. பின் சமாதித் துரியம் என வருதலின், முன்னைய நனவு ஆதி சகல, கேவலங்களில் வருபவை என்பது பெற்றாம். சமாதி – சமநிலை; நினைக்கப்படும் பொருளோடு ஒன்றுதல். துரியம் என்றது திருவருளை. நம அதிசரம் ஆதி – (நமவைக் கடப்பது ஆகிறாய்) என்பது நம அதி சமாதி என ரகரம் தொகுத்தலாயிற்று. சிவ ஆதல் – தான் சிவ ஆதல் என்னும் பொருள்தரும் 'சிவாய'. மூன்றாம் அடியில் தமது என்றது ஒருமைப் பன்மை மயக்கம். (65)

**அருள்தரு மாயமும் அத்தனும் தம்மில்**
**ஒருவனை ஈன்றவள் உள்ளுறு மாயை**
**திரிமலம் நீங்கிச் சிவாயவென் றோதும்**
**அருவினை தீர்ப்பதும் அவ்வெழுத் தாமே. 2713**

க–து: இது நுண் ஐந்தெழுத்துத் தூய்மைப்படுத்துமாறும், தூவைந்தெழுத்தின் பயன் ஆமாறும் கூறுகின்றது.

பொ–ரை: அருளாக மாறும் மாயமாகிய திரோதான சத்தியும், ஐந்தொழில் செய்யும் இறைவனும் தம்மிற் கூடி உயிராகிய ஒருவனை இருள்மல மாகிய கருப்பையினின்று வெளிப்படுத்தற்குத் துணையாக நின்றவள் வைப்புச் சத்தி எனப் படும் மாயை; அது நகாரத்தில் உள்ளுறுவது. அங்ஙனம் ஈன்ற பின், அவ்வுயிர் அவ்வாற்றால் மும்மலங்களினும் நீங்கிச் 'சிவாய' என்று ஓதும். அங்ஙனம் ஓதுங்கால் மேலே கூறியபடி சிவயோகம் பயப்பதுடன், உடல் முகந்த நுகர்வினை அருவாய் வந்தெய்தும்போது அதன் விளைவை உயிர் நுகராதபடி தீர்ப் பதும் அத்தூய எழுத்துக்களே ஆம். அருவாய் வரும் வினை தீர்க்கப்படுதலின் ஏறுவினையும் இன்றாம் என்பது குறிப்பெச்சம்.

வி–கு: அருள் உறுமாயம் – திரோதாயி; ஆதி எனவும் படும். ஈன்றவள் – ஈனுதற்கு உதவினவள். (66)

**சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்**
**சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்**
**சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்**
**சிவசிவ வாகும் திருவரு ளாமே.** 2714

க–து: இது திருவருளோடு ஒன்றும் தெளிவு நிலை கைகூடுவதற்கு ஓர் உபாயம் கூறுகின்றது.

பொ–ரை: மனம் சிவசிவ என்னும் உயர் மறையை தேர்ந்து நிற்ப. உயிர்ப்பும் உடன் அடங்க, சிவசிவ என்று எண்ணித் தெளிவுறாதவர் ஊமர் ஆவர்; ஊமர் செவிடரும் ஆதலின், அவர் மேலோர் உறுதிகளைக் கேளாதவரும் ஆவர்; அஃதாவது, வாக்கின் பயனையும் செவியின் பயனையும் இழந்தவர் என்றபடி, அங்ஙனம், மனமும் உயிர்ப்பும் அடங்கச் சிவசிவ எனச் சொல்லிச் சும்மா இருக்கும் சுகத்தினைத் தெளிந்து

மௌனம் பூண்டவர் தம்மைத் திருவருளோடும், பின்னர்ச் சிவத்தோடும் ஒன்றுவிக்கும் பேறு அடைவர்.

வி–கு: சிவசிவ என்னும் மறை உயிர்ப்பும் மனமும் அடங்கக் கணிப்பார்க்கு ஐம்புலக் கதவை அடைத்துக் கருவி களை ஒடுங்குவிக்கும்; பின் அதன் வாயிலாகச் சிவயோகம், சிவபோகம் என்னும் திருவருட்பேறு சிவப்பேறுகளை முறையே எய்துவிக்கும் என்றபடி. வேறு உபாயங்களைப் பின்பற்றுவோர் மோனிகள் என இருப்பது ஊமர் நிலையினை ஒக்கும் என்றதூஉம் ஆம். (67)

**சிவசிவ என்கிலர் தீவினை யாளர்**
**சிவசிவ என்றிடத் தீவினை மாளும்**
**சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்**
**சிவசிவ என்னச் சிவகதி தானே.** 2715

க–து: இது சிவசிவ என எண்ணியிருப்பதன் பயன் உணர்த்துகின்றது.

பொ–ரை: சிவசிவ என மனம் ஒருங்கிப் பயில்வோர் தீவினை முற்றும் அழியும்; பின்னர் அவர் ஒளியுடம்பு உடையர் ஆவர்; மேலும் கணிப்போர் சிவமாந் தன்மை பெறுவர். ஒருவர் இதனை ஓதாமல் இருப்பின், அஃது அவர் தீவினையின் விளைவு என்றே உன்னத்தக்கது. (68)

**நமவென்னும் நாமத்தை நாவில் ஒடுக்கிச்**
**சிவவென்னும் நாமத்தைச் சிந்தையுள் ஏற்றப்**
**பவமது தீரும் பரிசும தற்றால்**
**அவமதி தீரும் அறும்பிறப் பன்றோ.** 2716

க–து: இஃது ஓதுமுறையும் சிந்தித்து நிற்கும் முறையும் உணர்த்தி அவற்றின் பயன் கூறுகிறது.

பொ–ரை: நம என்னும் முதலையுடைய திருநாமம், வாசகம் உபாஞ்சு மானதம் என்னும் செபங்களுக்கு உரியது; எடுத்து ஆளுதற்கும் உரியது. இதுவே, சிவ என்னும் முதலை யுடைய திருநாமம் எழுத்துக்களின் பொருள் அடைவுபற்றிச் சிந்தையை நெறிப்படுத்தற்கு உரியது. இவற்றால் பாவம் தீரும். அஃது அப்பரிசால் தீர்ந்தால், அறியாமை நீங்கும்; பிறப்பும் அறும்.

வி–கு: சிவயநம என்பதில் சிவ என்னும் பகுதி சிந்தையில் நிறுத்தப்படல் வேண்டும்; ய என்பது மிடற்றில் நிற்றல் வேண்டும்; நம் நாவில் அடங்குதல் வேண்டும். இஃது இம் மறையை ஓதுமுறை என்று இதற்கு உரை கூறுவோரும் உளர். (69)

## 7. அதிசூக்கும பஞ்சாக்கரம்

இவ்வதிகாரம் மிகுநுண் திருவைந்தெழுத்தின் இயல்பு உணர்த்துவது.

**சிவாய நமஎனச் சித்தம் ஒருக்கி**
**அவாயம் அறவே அடிமைய தாக்கிச்**
**சிவாய சிவசிவ என்றென்றே சிந்தை**
**அவாயங் கெடநிற்க ஆனந்தம் ஆமே.** 2717

க–து: இது மேலை அதிகாரப் பொருளைச் சுருங்க வைத்து உணர்த்துகிறது.

பொ–ரை: சிவ எனத் தொடங்கும் திருநாமத்தைச் சிந்தித்து மனத்தை ஒருமைப்படுத்தி, தனக்கு எத்தீங்கும்

வராதபடி தன்னை முதல்வனுக்கு மீளா அடிமையாகக் கொடுக்க. பின், திரிமலந்தீர்ந்து திருவருள் மேற்படற் பொருட்டும், கரணங்கள் ஒடுங்குதற் பொருட்டும் முறையே சிவாய என்றும் சிவசிவ என்றும் எண்ணித் தன் அறிவில் தன் முனைப்பாகிய தீங்கு உறாதபடி நிற்பின், (அருள் விளக்கமும்) பேரின்ப மேலீடும் உளவாகும்.

வி–கு: இப்பாட்டிற் குறிக்கப்படும் மறையைச் 'சிவய சிவ' எனவும் கொள்வர். (70)

**செஞ்சுடர் மண்டலத் தூடுசென் றப்புற**
**மஞ்சண வும்முறை ஏறி வழிக்கொண்டு**
**துஞ்சு மவன்சொன்ன காலத் திறைவனை**
**நெஞ்சென நீங்கா நிலைபெறல் ஆகுமே.** 2718

க–து: இது குண்டலி யோகப் பயிற்சியில் உள்ளார்க்குத் திருவருளை எய்து விப்பதும் திருவைந்தெழுத்தென்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: நடுநாடியில் ஞாயிற்று மண்டலத்தூடு கடந்து அதன் உச்சியாகிய பன்னிரண்டங்குல முடிவில் தங்கும் யோகி, மேற்கூறிய முறையில் சிவாய, சிவ சிவ என்பவற்றை மத்திமை வாக்கு வடிவில் நினைந்தபோது அவன் இறைவனைத் தனக்கு நெஞ்சுபோல உணர்ந்து நிலைபெறல் ஆகும்.

வி–கு: மஞ்சு அணவும் முறை ஏறி – மேகம் தன்னைத் தடவும்படி ஏறி; இதனால், மலையின் மீது ஏறுதல் பெறப்படும். செஞ்சுடர் மண்டலத்தூடு சென்று என்றமையின், அம்மலை மேரு அல்லது ஆதாரவேற்பு எனப்படும் நடுநாடி என்பது பெற்றாம். மஞ்சு அணவும் இடம் மலையின் உச்சியாதலின், நடு நாடியின்

முடிவாகிய பன்னிரண்டு அங்குல முடிவு என்பது பெறப்படும். மஞ்சு – மேகம்; திருவருளைக் குறிக்கும்.

சொன்ன என்பதன் செயப்படு பொருள் அதிகாரத்தாற் பெற்றாம்.

'ஊனில் உயிர்ப்பை' என்னும் பிள்ளையார் திருமொழியை இணைத்துணர்க. 'நெஞ்சு என' என்றமையின் இறைவன் அவ்வியோகிக்கு உடனாய் நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் இயல்பு குறித்ததாயிற்று. (71)

**அங்கமும் ஆகம வேதம தோதினும்**
**எங்கள் பிரான்எழுத் தொன்றில் இருப்பது**
**சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்தால்**
**அங்கரை சேர்ந்த அருங்கலம் ஆமே.** **2719**

க–து: இஃது உயர்ந்த நூல்களின் குறிக்கோள் உயிரைச் சிவத்தோடு ஒன்றுவிப்பதே என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: ஆறு அங்கங்களை ஓதி உணர்ந்தாலும், முதல் நூல்களாகிய ஆகம வேதங்களை ஓதி உணர்ந்தாலும், அவ்வுணர்வின் முடிந்த பயன் சிவபிரானைக் குறிக்கும் சிகாரம் என்னும் ஓரெழுத்தின் பொருளோடு ஒன்றி உடனாய் இருப்பதே ஆகும். ஐயமின்றி, மேற்கூறியவற்றால் திருவைந்தெழுத்து நெறியில் உணர்வை நிறுத்தி, அவ்வெழுத்தால் குறிக்கப்படும் பரம்பொருளோடு ஒன்றி உடனாதல் என்னும் பயனை முயன்று பெற்றால், அந்நூல்கள் உயிரைப் பிறவிக்கடல் கடப்பித்து வீடுபேறாகிய அழகிய கரையில் கொண்டு உய்த்த பெறற்கரும் தோணி என சிறப்பிக்கப்பெறும்.

வி–கு: திருவைந்தெழுத்து நெறியாவது, முதற்கண் தூலவைந்தெழுத்துப் பயின்று உலகில் உள்ள தூய நுகர்ச்சிகளைப் பெறுதல்; பின் திருவருளைக் காண விழைந்து சிகாரம் முதலாக ஓதி, நம தீர்ந்து சிவாய எனத் தன் உண்மையியல்பு உணர்தல்; பின் அதன் பயிற்சியினால், தான் (ய) அருளால் விழுங்கப் பெற்று சிவசிவ என இருத்தல்; முடிவாக, உயிரை உட்கொண்ட வகாரம் அதனை முதல்வன் (சி) பால் உய்க்க வகாரத்தை மறந்து சிகாரத்தோடு ஒன்றி உடனாய் மேன்மேலும் வளரா நிற்கும் இறவாத இன்பில் அழுந்தி நிற்றல். இதுவே திருவெழுத்து ஐந்தின் மிகுநுண் பொருள்.

இதனால் ஞானம் பெறாதார் எல்லாரும் தூல பஞ்சாக் கரம், சூக்கும பஞ்சாக்கரம் அவற்றின் பேதங்களாகிய தார பஞ்சாக்கரம், பிராசாத பஞ்சாக்கரம் மிச்சிர பஞ்சாக்கரம் என்ப வற்றையே ஓதக்கடவர் என்பது தெளியப்படும். மூன்றெழுத்து, இரண்டெழுத்து, ஓரெழுத்து என்பவை நிற்கு முறையே உணர்த் துவன எனக் கொள்க. (72)

**பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே**
**விழித்தங் குறங்கும் விளைவறி வாரில்லை**
**எழுத்தறி வோமென் றுரைப்பர்கள் ஏதர்**
**எழுத்தை அழுத்தும் எழுந்தறி யாரே.** 2720

க–து: இஃது ஐந்தெழுத்ததிகாரப் பொருளைத் தொகுத்துக் கூறி முடிந்தது முடிக்கின்றது.

பொ–ரை: பழைமையான திருமறையில் அதன் விழுப் பயனாக எழுந்தவை திருவைந்தெழுத்துக்கள். அவற்றை உணர்விற்கொண்டு அனுபவித்து, அதன் பயனாகப் பரம் பொருளைத் தலைப்பட்டு உணர்ந்து இன்புறு நிலையை

எய்துவார் மிகச் சிலர். அறியாமையாகிய குற்றம் உள்ளவர்கள், அதன் வலியால் யாம் எல்லா எழுத்தையும் அறிவோம் என்று செருக்கி நிற்பர். உண்மையில்தலை எழுத்தைப் போக்கும் திரு வைந்தெழுத்தின் அருள் நிலையை அவர் அறியார். (பொருள் படுத்தார்)

வி–கு: விதிப்பயனை வெல்வதற்கு திருவைந்தெழுத்து நெறி ஒன்றே கூறப்பட்டுள்ளது அனைத்து வேதங்களிலும் என்பது கருத்து. (73)

## 8. திருக்கூத்துத் தரிசனம்

இவ்வதிகாரம் இறைவன் உயிர்கள் நன்மை பெற்று உய்தற் பொருட்டுச் செய்யும் அருட்செயல்களாகிய திருக்கூத்தை எவ்வெவ் வகையில் எங்கெங்குக் கண்டு இன்புறுதல் வேண்டும் என்பது உணர்த்துகின்றது.

**எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி**
**எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்**
**எங்குஞ் சிவமா யிருத்தலாவ் எங்கெங்கும்**
**எங்குஞ் சிவனரு டன்விளை யாட்டே.** **2721**

க–து: எல்லாப் பொருளும் சிவநிறைவில் அடங்கிச் சிவன் ஆற்றலால் தொழிற்படுதலால், திருக்கூத்தும் அது நிகழ் இடம் கரணம் என்பனவும் எங்கும் காணத்தக்கவை என்று உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ–ரை: இறைவனுக்கு எப்பொருளும் திருமேனி யாகும். அவன் அருளாற்றல் எவ்விடத்தும் எப்பொருளையும்

கலந்து தொழிற்படுத்துவது. அவன் ஆடும் இடமாகிய அறிவு வெளி எங்கும் உள்ளது. ஆதலின் திருக்கூத்து எங்கும் காணத் தக்கது. எல்லாப் பொருளையும் சிவன் தன் அருளாற் கலந்து ஒன்றி நடாத்துதலால், எல்லாம் சிவமயம் ஆகும்; அவன் அருளின் விளைவு எங்கும் நிகழ்வது. (74)

**சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனைச்**
**சொற்பத மாமந்தச் சுந்தரக் கூத்தனைப்**
**பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை**
**அற்புதக் கூத்தனை ஆரறி வாரே.** 2722

க–து: இது திருக்கூத்துக்களின் வகைகளை உணர்த்து கின்றது.

பொ–ரை: மேலான அறிவொளியும் நூல்களாற் சொல்லப்படும் பதங்களை ஆக்குவோனும் ஆனந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக் கூத்து என்பவற்றை இயற்றுவோனும் ஆகிய முதல்வனை அறிவார் யாரும் இல்லை.

வி–கு: ஆனந்தக்கூத்து – முத்தர்க்குப் பேரின்பம் விளைக்கும் திருக்கூத்து. சுந்தரக் கூத்து – பொருள்களும் உயிர்களும் முறை தழுவச் செய்யும் திருக்கூத்து. பொற்பதிக் கூத்து – உயிர்களின் உள்ளங்களில் நின்றியற்றும் திருக்கூத்து. பொற் றில்லைக் கூத்து – அண்டத்தின் நடுவுள் நின்றாடும் கூத்து; பொன் என்னும் அடை பிற பொருள்களால் கறை படாது நிற்கும் தூய்மையைக் குறிக்கும். அற்புதக் கூத்து – ஐந்தொழில் நடத்தும் திருக்கூத்து; பிண்டத்தில் அதிசூக்குமத் திருக்கூத்தும் அண்டத்தில் தூல சூக்குமத் திருக்கூத்துக் களும் நிகழும் என்க. (75)

## சிவானந்தக் கூத்து

**தானந்த மில்லாச் சதானந்த சத்திமேல்**
**தேனுந்தும் ஆனந்த மாநடங் கண்டீர்**
**ஞானங் கடந்து நடஞ்செய்யும் நம்பிக்கங்**
**கானந்தக் கூத்தாட ஆடரங் கானதே.** 2723

க—து: இது பேரின்பக் கூத்தாமாறு உணர்த்துகின்றது.

பொ—ரை: உயிரின் உணர்வைக் கடந்து நின்று திருக் கூத்தியற்றும் முதல்வன் பேரின்பக் கூத்தியற்றுவதற்கு முத்தான்மாவே அரங்காக அமைந்துள்ளது. முடிவில்லாத தன் உண்மையின்ப ஆற்றலையே தனக்கு நிலைக்களனாகக் கொண்டு இன்பஞ் சொரியும் தன்அடிகளை ஊன்றி இன்பக் கூத்தியற்றுவன்.

வி—கு: ஞாயிற்றின் ஆற்றல் ஒன்றேயாயினும் அது விளைக்கும் பயன்வேறுபாடு பற்றி அவ்வாற்றல் ஒளி என்றும், வெப்பம் என்றும் பலவகைப் படக் கருதி வழங்கப்படுகிறது. அதுபோல, இறைவன் ஆற்றல் ஒன்றேயாயினும், அதனால் விளையும் பயன் வேறுபாடு பற்றி அஃது அறிவென்றும், விழைவு என்றும், செயல் என்றும், இன்பம் என்றும் கூறப்படும்.

இறைவன் பேரின்ப உருவினன்; அவன் குணமும் இயல்புமாகிய ஆற்றலும் அது. சத்தி – ஆற்றல். ஆற்றலே இறைவனுக்குத் திருமேனியும், கரணமும், இடமும் ஆம் என்க. (76)

**ஆனந்தம் ஆடரங் கானந்தம் பாடல்கள்**
**ஆனந்தம் பல்லியம் ஆனந்தம் வாச்சியம்**
**ஆனந்த மாக அகில சராசரம்**
**ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே.** 2724

க–து: இது முதல்வன் திருக்கூத்திற்கு உடனிகழ் பொருளெல்லாம் இன்பமயம் எனக் கூறுகிறது.

பொ–ரை: நிலையியற் பொருள் இயங்கியற் பொருள் அனைத்தும் இன்பமயம் ஆதற்பொருட்டு பேரின்பக் கூத்து இயற்றுதலால் உயர்ந்தோனுக்கு ஆடுதற்கு இடமாகிய அரங்கும், 'உடனிகழும் பாட்டும், இசைக் கருவிகளும், தாளங்குறிக்கும் கருவிகளும் பிற அனைத்தும் பேரின்ப மயமே ஆகும்.

வி–கு: இதனால் உலகவின்பமும் இறைவன் திருக் கூத்தின் பயன் என்பது பெறப்படும், திருக்கூத்து என்பது இறை வன் உயிர்களோடு ஒன்றி உடனாகிச் செய்தருளும், காட்டும் உபகாரமும் காணும் உபகாரமும் ஆம் என்று உணர்க. (77)

**ஒளியாம் பரமும் உளதாம் பரமும்**<br>
**அளியார் சிவகாமி யாகுஞ் சமயக்**<br>
**களியார் பரமும் கருத்துறை யந்தத்**<br>
**தெளிவாஞ் சிவானந்த நட்டத்தின் சித்தியே.** 2725

க–து: இது திருக்கூத்தைக் கண்டு பின் ஒன்றி இருந்து நினைத்தலால் ஆம் பயன் கூறுகின்றது.

பொ–ரை: மேலான ஒளியும், இயற்கை உண்மையும், அன்பால் விளையும் மேலான இன்பமும் ஒருவன் தெளிந்த உணர்வில் சிவானந்தக் கூத்தைக் கருத்தில் கொண்டு வழிபடு வதால் வரும் பேறே ஆம்.

வி–கு: அளியார் களி எனவும் சிவகாமி ஆகும் சமயக் களி எனவும் களிக்கு அடை ஆக்குக. சமயம் தத்துவம் என்ப வற்றில், சமயத் துறையில் சிவகாமி என வைக்கப்பெறும் திருவுரு

பேரின்ப விழைவு என்றபடி. இங்குக் காமம் என்ற சொல் இன்பம் என்னும் பொருள் உணர்த்தும். சிவகாமவல்லி என்னும் பெயரைத் தன் ஆனந்தக்கொடி எனப் பெரியோர் வழங்கினமை காண்க. 'ஸோ காமயத பஹுஸ்யாம் ப்ரஜாயாயேதி' என தைத்தி ரியத்தில் வருகிறது. 'அவன் மக்களுக்காக பலவாக ஆவேன் ஆக என விழைந்தான்' என்பது அதன் பொருள். இறைவனது விழைவாற்றலே 'சிவகாமி' எனப்பட்டது என்பது இதனால் விளங்கும். இரண்டையும் அளி யார் களி, சிவகாமி ஆம் களி எனப் பாட்டில் வருதல் பற்றி உணர்ந்து கொள்க.

திருக்கூத்து காட்சி, இயற்கை உண்மை அறிவு இன்ப நிலையைப் பெறுவிக்கும் என்பது கருத்து. (78)

**ஆன நடமைந் தகள சகளத்தர்**
**ஆன நடமாடி ஐங்கருமத் தாகம்**
**ஆன தொழிலருளா லைந்தொழில் செய்தே**
**தேன்மொழி பாகன் திருநட மாடுமே.** 2726

க—து: இது திருக்கூத்து அருவுருவத் திருமேனியிலும் உருவத் திருமேனியிலும் கருதப்படுதல் உணர்த்துகிறது.

பொ—ரை: முதல்வனது சக்தி சங்கற்பத்தால் ஆன நடனம் ஐந்து (பரை, ஆதி, அறிவு, விழைவு, செயல் என உணரப் படல்); அருவுரு ஆன நடமாடியின் திருவுரு ஐந்தை அடக்கி யுள்ள கன்மசாதாக்கியம். அருளின் அவதரமான கிரியை சத்தியால் நிகழும் தொழில் ஐந்து செய்து, சத்தியோடு உடனாகிய சிவனார் திருநடனம் புரிவர்.

8 வி—கு: தேன்மொழி பாகன் என்பது தன்னியல்பையும், உருவத் திருமேனியையும் ஒருங்கே குறித்து நின்றது.

ஆன திருநடம் ஐந்து என்பதற்குச் சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தையில் நின்று புரியும் உபகாரத் தைப் பொருளாகக் கொள்ளுதலும் பொருந்தும். சிவசாதாக்கியம் அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம் என்னும் நான்கையும் கொண்டதாகலின் கன்ம சாதாக்கியம் ஐங்கருமத்து ஆகம் எனப்பட்டது. அருளான தொழிலால் என்க. (79)

**பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட**
**மூதாண்ட முத்தாண்ட மோகாண்ட தேகாண்ட**
**தாகாண்ட மைங்கரு மத்தாண்ட தற்பரத்**
**தேகாந்த மாம்பிர மாண்டத்த என்பவே. 2727**

க—து: இது பிரமாண்டத்தில் அடங்கிய தொகுதிகளின் வகை ஒன்பதாதல் உணர்த்துகின்றது.

பொ—ரை: திருவைந்தொழிலால் உலகனைத்தையும் ஆட்சிபுரியும் தற்பரம் எனப்படும் முழு முதலால் ஒரே முடிவைப் பெறும் பிரமாண்டத்தில் உள்ளவை பூதங்களாலான அண்டமும், அவற்றின் வேறாய அண்டமும், இன்ப நுகர்வு அண்டமும் யோகத்திற்கு வாயிலாக உள்ள அண்டமும், நீடிய வாழ்வளிக்கும் பழைய அண்டமும், பாசத்தின் நீங்கியோர் வாழும் முத்தாண் டமும், மோகத்தைப் பயக்கும் அண்டமும், உடல் வடிவ அண்டமும், அவாநிரம்பாது துன்புறுவிக்கும் தாகாண்டமும் என்னும் இவை. (80)

**வேதங்கள் ஆட மிகுஆ கமமாடக்**
**கீதங்கள் ஆடக் கிளர்அண்டம் ஏழாடப்**
**பூதங்கள் ஆடப் புவன முழுதாட**
**நாதங்கொண் டாடினான் ஞானானந்தக் கூத்தே. 2728**

க–து: இஃது இறைவன் திருக்கூத்தால் தொழிற்படுவன சொல்லும் பொருளும் என விரியும் உலகு என்று உணர்த்து கின்றது.

பொ–ரை: இறைவன் நாதம் எனப்படும் முப்பத்தாறாம் தத்துவத்தை ஞானமாத்திரமாக நின்று நோக்கி இடங்கொண்டு ஆடும் உண்மையறிவின்பத் திருக்கூத்தால் தொழிற்படுவன பொது நூல்களான வேதங்களும், அவற்றின் மேம்பட்ட சிறப்பு நூல்களான ஆகமங்களும், பண் கலந்த துதி நூல்களும், இவற்றால் விளக்கம் அடையும் ஏழ் அண்டங்களும், உயிர்களும், எல்லாப் புவனங்களும் ஆகும். (81)

**பூதங்க ளைந்திற் பொறியிற் புலனைந்தில்**
**வேதங்க ளைந்தில் மிகுமா கமந்தன்னில்**
**ஓதுங் கலைகாலம் ஊழி யுடன்அண்டம்**
**போதங்கள் ஐந்தில் புணர்ந்தாடும் சித்தனே. 2729**

க–து: இதுவும் அது.

பொ–ரை: எல்லாம் வல்ல சித்தனாகிய முதல்வன் ஐம் பூதம், ஐம்பொறி, ஐம்புலன், வேதம் நான்கும் உப பிருங்கணம் ஒன்றும் ஆகிய ஐந்து, அவற்றின் மேம்பட்ட ஆகமம், சொல்லப் படும் கலை, காலம், ஊழி, அண்டம் ஞானத்திற்கு வாயிலாகிய சூக்குமை முதலிய அகவாக்குக்கள் என்னும் ஐந்து ஆகிய இவற்றில் கலந்து நின்று அவற்றை இயக்குவன்.

வி–கு: உபபிருங்கணம் என்பது வேதத் தொடர்களை விளக்குவதற்கு அற்றைப் பின்பற்றி விரித்துரைக்கும் சிவபுரா ணங்கள். போதங்கள் ஐந்து எனக் கொண்டு நாதம், விந்து, சாதாக் கியம், ஈசுரம், சுத்த வித்தை என்னும் சிவதத்துவங்கள் எனினும்

பொருந்தும். அண்டப் போதங்கள் என்பதற்கு அண்டங்களில் உள்ள உயிர்களின் புரியட்டகங்கள் என்க. (82)

**தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர்**
**மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்**
**தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்**
**யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே. 2730**

க–து: இறைவன் ஆட்டுவிக்க ஆடுபவையே எல்லாம் என்று கூறுவது இது.

பொ–ரை: வான் உறையும் தேவர், நிலத்தில் தொழிலால் சிறப்புறும் சுரர், மக்கள், வித்தியாதரர் சித்தர், ஆதியின் முதற் றேவர் எனப்படும் மூவர், ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் ஆகிய முப்பத்து மூவர், தவமுடையோர், எழுவர் (எழு முனிவர் அல்லது கன்னியர்), சமயக் கடவுளர், இயங்குநிலைத் திணைகள் ஆகிய பிற உயிர்கள் எல்லாம் இறைவன் சத்திய சங்கற்பத் திருக்கூத் தினால் தத்தம் தொழில்களிற் செல்லுவர். (83)

## சுந்தரக் கூத்து

**அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பால்**
**உண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேல்**
**கண்டங் கரியான் கருணைத் திருவுருக்**
**கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே. 2731**

க–து: இது சிவன் அண்டங் கடந்த அருள் வெளியில் ஆடல் குறிக்கின்றது.

பொ—ரை: திருநீலகண்டன் என எண்ண எளிவரும் இறைவன் ஏழ் அண்டத்திற்கு அப்பாலைக்கு அப்பால் உள்ள சாதாக்கியம், சத்தி என்பவற்றின் முடியாகிய நாதம் என்னும் தத்துவத்தின் மேல், தன் அருளே திருமேனியாகக் கொண்டு தன் செம்பாதியாகிய உமையம்மை காணும்படி திருக்கூத்து ஆடுதலை விரும்பினான்.

வி—கு: அண்டம் ஏழ் மூலப்பகுதிக்குட்பட்டவை. அவற்றிற்கு அப்பால் என்பது நுண் பிரகிருதி எனப்படும் மாயையின் ஆக்கப் பொருள்கள் உள்ள கலப்பு உலகம்; அதற்கு அப்பால் என்பது பரப்பிரகிருதி எனப்படும் மாமாயையின் ஆக்கப் பொருள்கள் உள்ள தூய உலகு: அங்கு உண்டு என்று கூறப்படுவன சதாசிவம் (சாதாக்கியம்), அதற்குமேல் சத்தி (விந்து), இவற்றின் உச்சி நாதம், இதன்மேல் உள்ளது பரவெளி. அப்பர வெளியில் இறைவன் ஆடல் உகந்தான் என்க. சத்தி சதாசிவம் என்றதைச் சதாசிவ சத்தி என மாறுக. (84)

**கொடுகொட்டி பாணடரங் கோடு சங்காரம்**
**நடமெட்டோ டைந்தாறு நாடியின் நாடுந்**
**திடமுற் றெழுந்தேவ தாருவாந் தில்லை**
**வடமுற்ற மாவன் மன்னவன் தானே.** 2732

க—து: இது சிவபிரான் செய்யும் திருக்கூத்தின் வகைகளைக் கூறுகின்றது.

பொ—ரை: கொடுகொட்டி, பாண்டரங்கம், கோடு என்பவை அழித்தலின் பாற்படும்; பிற நடனங்கள் எட்டோடு ஐந்து நாடியுள் நாடும் ஆறு ஆகும். திடமாக ஓங்கும் தேவதாரு மாவனம், தில்லை மாவனம், வடமாவனம் என்றாற்போல்வன திருக்கூத்தியற்றும் முற்றங்கள் ஆகும். திருக்கூத்தியற்றும் மன்னவன் சிவபிரானே ஆவன்.

வி–கு: கொடுகொட்டி – உலகம் முழுவதும் அழித்து ஆடும் தனிக்கூத்து. பாண்டரங்கம் – முப்புரம் எரித்து அந்நீற்றினை மேற்பூசிக்கொண்டு ஆடும் வீரக்கூத்து. கோடு – அயன் ஒரு தலை பறித்து அதனை ஏந்தி ஆடும் வீரக்கூத்து. இவை மூன்றும் அழிவு பற்றி எழுந்தவை. ஏனையவை ஆக்கல், காத்தல், மறைத்தல், அருளல் பற்றியவை. எட்டு என்பவை ஐம்பூதம், ஞாயிறு, திங்கள்,, இயமானன் என்னும் எட்டுருவில் நின்று அவற்றை நடத்தும் திருநடம். ஐந்து – திருவாலங்காடு, 'திருத்தில்லை திருஆலவாய், திருநெல்வேலி, திருக்குற்றாலம் என்னும் ஐந்து இடங்களில் ஆடும் கூத்துக்கள். நாடியுள் நாடும் ஆறு – நடுநாடியாகிய சுழு முனையில் ஆறு ஆதாரங்களில் யோகியர் நோக்கிக் காணும் தேகாண்டக் கூத்து.

தேவதாருவனம் – கடவுள் உண்மைக் கொள்கையை உடன்படாத வேத முனிவர் வேள்வி முதலியன செய்து உறைந்த வனம்; அங்கு மோகினியாகிய திருமாலும் அம்முனிவரும் காண ஆடிய கூத்து நூல்களிற் கூறப்படுவதொன்று, தில்லை வனம், வடமாவனம் என்பவை என்றும் நடைபெறும் ஐந்தொழில் நடமும், காளியால் உலகு அழிபடாமற்காத்த காப்பு நடமும் நிகழ்ந்த இடங்கள். முற்றம் – வெளியிடம். (85)

**பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்**
**பரமாண்டத் தூடே படரொளி ஈசன்**
**பரமாண்டத் தூடே படர்தரு நாதம்**
**பரமாண்டத் தூடே பரனடம் ஆடுமே. 2733**

க–து: அண்டத்தின் உள்ளே திருநடம் நிகழுமாறு அறிவுறுக்கின்றது இது.

பொ–ரை: மேலான அண்டத்தினுள் யாண்டும் பராசத்தியின் பதிவு உள்ளது; அங்கு அவ்வொளிக்கு முதலாகிய

முதல்வனும் உளன்; அவ்விரண்டும் பற்றி உயிர்களின் அறிவை விளக்கும் நாதமும் படர்ந்து உளதாகும். இவ்வாற்றால் அண்டத் துள் எங்கும் சிவப்பிரானது திருக்கூத்து உள்ளது. (86)

**அங்குச மென்ன எழுமார்க்கம் போதத்தில்**
**தங்கிய தொந்தி எனுந்தாள ஒத்தினில்**
**சங்கரன் மூலநா டிக்குள் தரித்தாடல்**
**பொங்கிய காலம் புகும்போகல் இல்லையே. 2734**

க–து: இது மக்களுக்கு அறவுணர்வு இறைவன் திருக் கூத்தினால் விளங்குகின்றது என உணர்த்துகின்றது.

பொ–ரை: யானையை நெறிப்படுத்தும் தோட்டியைப் போல, மக்கள் உள்ளங்களைத் தீது நீக்கி நன்றின்பால் உய்க்கும் நீதிநெறி அவர்தம் அறிவில் தங்குதற்பொருட்டு, தொம் தி என்னும் குறிப்பொலிகளால் உணர்த்தப்படும் தாள ஒத்துக்க ளுடன் சிவபிரான் மக்களுடைய சுழுமுனை நாடியுள் தங்கி பல் காலமும் ஆடலைச் செய்யும்; அவன் அவ்விடத்தினின்றும் நீங்குதல் இல்லை.

வி–கு: இறைவனால் அமைக்கப்பெறும் நீதியை வடநூலார் 'இருதம்' என்பர்.

***ருதம் ஸத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம்***
***கிருஷ்ண பிங்களம் ஊர்த்வ ரேதம்***
***விச்வரூபாயவை நமோ நம:***

என்னும் தைத்திரீய சாகை மறையைக் காண்க.

மார்க்கம் போதத்தில் தங்கிய சங்கரன் ஆடல் புகும்; போகல் இல்லை எனக் கூட்டி முடிக்க. தங்கிய – தங்குவதற்கு;

செய்யிய என்னும் வாய்பாடு. அம் குசம் எனப் பிரிப்பின், பெதும்பையயாவாளுக்கு மார்பில் இணைந்து எழும் துணை முகைகள் போல, பக்குவம் எய்தும் சாதகன் உள்ளத்தில் அறிவு அன்பு நெறிகள் தோன்றி வளர்வதற்கு எனவும் உரைத்துக் கொள்க. இது முத்தாண்ட, யோகாண்டங்களில் திருக்கூத்து உளதாமாறு கூறிற்று; பிறவும் இங்ஙனம் உய்த்து உணர்க. (87)

**ஆனத்தி யாடிப் பின்னவக் கூத்தாடிக்**
**கானத்தி யாடிக் கருத்தில் தரித்தாடி**
**மூனச் சுழுனையுள் ஆடி முடிவில்லா**
**ஞானத்துள் ஆடி முடித்தான்என் நாதனே.** 2735

க–து: இஃது உயிர்கள் முறையாக அறிவு மலர்ந்து திருவடி கூடுதற் பொருட்டு இறைவன் செய்யும் திருக்கூத்துக் களை முறைப்படுத்தித் தொகுத்துக் கூறுகின்றது.

பொ–ரை: எமது தலைவன் ஆனத்தியென்னும் திருக் கூத்தாடி, பின் நவக்கூத்தாடினன்; காட்டில் தீயோடு ஆடி உயிர் களின் அறிவில் தங்கி ஆடினன்; ஞான, விளக்கேற்றுதற்கு இடனாகிய சுழுமுனையில் ஆதாரங்களில் திருக்கூத்தாடி முடிவில்லாத ஞானக் கூத்தாடித் தன் கூத்தை முடித்தான்.

வி–கு: ஆனத்தி – ஆன் அத்தி பசுக்கொலை எனப் பொருள் பட்டு உயிர்கள் முழுவதையும் ஒருங்கே அழிக்கும் முற்றழிப்பைக் குறிக்கும். இதனை ஐந்தொழிற் கூத்து எனக் குறிப்பாரும் உளர். நவக்கூத்து – உலகப் படைப்பை மேற் கொண்டு, அருவம் நான்கு, அருவுரு ஒன்று, உருவம் நான்கு என நின்று செய்யும் உதவி. கானத்தீ என்பது குறுகி நின்றது; இஃது தடைப்படும் அழிப்பைக் குறிப்பது. கருத்தில் தரித்தாடுதல் – அழிப்பு நிலையில் உயிர்களின் வினைகளைப் பக்குவப்படுத்தல்

முதலிய செயல்புரியும் சூக்கும நடனம். இது நள்ளிருளில் ஆடும் நட்டம் பயின்றாடல் எனவும் கூறப்படும். மோனச்சுழுமுனை என்பது மூனச்சுழுமுனை எனத் திரிந்தது. சுழுமுனையுள் ஆடுதல் – தில்லையிலும், உயிர்களின் உள்ளங்களிலும் ஆடித் தூலம் அதிசூக்குமம் என்னும் ஐந்தொழில்களைச் செய்தல். முடிவில்லா என்னும் அடை முன்னரும் இயையும்.

ஞானக்கூத்து – மாயையை உதறி, வல்வினையைச் சுட்டு, மலம் சாய அமுக்கி அருள்தாள் எடுத்து, ஆனந்த வெள்ளத்து அழுத்தல். (88)

**சத்திகள் ஐந்தும் சிவபேதந் தானைந்தும்**
**முத்திகள் எட்டும் முதலாம் பதமெட்டும்**
**சித்திகள் எட்டும் சிவபதம் தானெட்டும்**
**சுத்திகள் எட்டீசன் தொல்நடம் ஆடுமே. 2736**

க–து: இது வேறோராற்றான் திருநடச் செயலை வகுத்துக் கூறுகின்றது.

பொ–ரை: ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்னும் சத்திகள் ஐந்தும்; அவற்றையுடைய ஈசானன், தற்புருடன், அகோரன், வாமதேவன், சத்தியோசாதன் என்னும் சிவ வகை ஐந்தும்; சாலோகம், சாமீபம், சாரூபம் என்பவற்றோடு அதிகாரமுத்தி, போகமுத்தி, இலயமுத்தி, சீவன் முத்தி, சாயுச்சியம் என்னும் முத்திகள் எட்டும்; கணபதி, அயன், மால், பரன், இந்திரன், முருகன், சண்டி, கணத்தலைவன் என்னும் முதலாம் பதம் எட்டும் அணிமா முதலிய சித்திகள் எட்டும்; மண் முதல் பூதம் ஐந்தும்; ஞாயிறு, திங்கள், உயிர் என்னும் இவற்றை நடாத்தும் நிலையில் பவன் முதல் மகாதேவன் வரையுள்ள சிவபதம் எட்டும்; நோக்கல், தெளிதல், தட்டல், மூடல், முவ்வொத்து, திசைக்கட்டு வளைத்தல், சொரிதல், (நிரீக்கணம், புரோக்கணம்,

தாடனம், அப்யுக்கணம், தாளத்திரயம், திக்கு பந்தனம், அவகுண் டனம், தேனுமுத்திரை) என்னும் தூய்மை எட்டும் ஆகவிருந்து இறைவன் பண்டுதொட்டுத் திருநடம் ஆடுவன். (89)

**மேகங்கள் ஏழும் விரிகடல் தீவேழும்**
**தேகங்கள் ஏழும் சிவபாற் கரனேழும்**
**தாகங்கள் ஏழும் சாந்திகள் ஏழும்**
**ஆகின்ற நந்தி யடிக்கீழ் அடங்குமே.** 2737

க–து: இது திருநடனத்திற்குக் கீழ் அடங்கும் பொருள் களைத் தொகுத்துணர்த்துகின்றன.

பொ–ரை: சம்வர்த்தம், மாவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவண்ணம் என்னும் ஏழு மேகங்களும்; உவர்க்கடல் முதலிய கடல் ஏழும்; நாவல், சாகம், குசம், கிரெளஞ்சம், சன்மலி, கோமேதம், புட்கரம் என்னும் தீவு ஏழும்; ஏழு பிறப்பும்; ஐம்பொறிகளும், அகக்கரணமும், உள் அகக்கரணம் எனப்படும் கலாதிகளும் ஆகிய அறிவை விளக்கும் கருவிகள் ஏழும்; இவற்றின் புறச் செலவாகிய வேட்கை ஏழும்; அச்செலவு நீங்கி அடங்கும் சாந்தி நிலை ஏழும் ஆகின்றவை சிவன் திருவடிக்கீழ் அடங்கித் தொழிற்படும். (90)

## பொற்பதிக் கூத்து

இவ்வதிகாரம் பொற்பதிக் கூத்தாமாறு உணர்த்து கின்றது.

**தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியில்**
**அற்புத மானதொ ரஞ்சு முகந்திலும்**
**ஒப்பில்பே ரின்பத் துபய உபயத்துள்**
**தற்பரன் நின்று தனிநடஞ் செய்யுமே.** 2738

க–து: இது சிவலிங்கத்தின் திருநடம் நிகழுமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: மேல், கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்னும் திசைகளை நோக்கி உள்ள ஞான மயமான ஐந்து முகங்களினும், உவமையில் பேரின்பந் தரும், அரு, உரு என்னும் இரண்டனுக்கும் காரணம் ஆக உள்ள அருவுருவத் திருமேனியை இடங்கொண்டு இறைவன் ஒப்பற்ற ஐந்தொழில் கூத்தை இயற்றுவன்.

வி–கு: செய்யுளாகலின் திசைகள் முறை பிறழக் கூறப் பட்டன. உபயம் – இரண்டு; முன்னையது அரு, உரு என்பவற் றையும், பின்னையது அருவுருவையும் குறித்தன. பின்வரும் சிவதருமோத்தரச் செய்யுள் ஐந்து முகங்களின் பெயர், நிறம் என்பவற்றைக் குறிக்கின்றது.

**உச்சிமுகம் ஈசானம் ஒளிதெளியப் பளிங்கே**
**உத்தரபூ ருவதிசையை நோக்கியுறு முகத்தே**
**நிச்சயித்த முகத்தின்கீழ்ப் பூர்வதிசை நோக்கி**
**நிகழுமுகந் தற்புருடம் கோங்கலர்போல் நிறமே**
**அச்சுறுத்து மகோரமுகம் அறக்கரிது கராளம்**
**அவிழ்தாடி வலத்தோளில் தென்னோக்கி அமரும்**
**செச்சைநிறத் தெரிவைமுக மிடத்தேண்மேல் வாமம்**
**சிறுபுறத்தின் முகஞ்சத்தி யோசாதம் திகழ்பால்.**
***(91)***

**அடியார் அரனடி யானந்தங் கண்டோர்**
**அடியா ரானவர் அத்தருள் உற்றோர்**
**அடியார் பவரே அடியவ ராமால்**
**அடியார்பொன் னம்பலத் தாடல்கண் டாரே. 2739**

க—து: இஃது அடியர் ஆவார் இவர் என்று உணர்த்து கின்றது.

பொ—ரை: அரன் திருவடி பேரின்பமாவதைக் கண்டோர்; அப்பெருமானை உளங்கொள்வோரும், அவன் திரு வடியிற் பொருந்தி நிற்போரும் பொன்னம்பலத்தில் முதல்வன் செய்யும் திருநடம் கண்டோரும் சிவபிரான் அடித்தொண்டு புரியும் அடியரும் ஆவர். (92)

**அடங்காத என்னை அடக்கி அடிவைத்(து)**
**இடங்காண் பரானந்தத் தேயென்னை யிட்டு**
**நடந்தான் செயும்நந்த நன்ஞானக் கூத்தன்**
**படந்தான்செய் துள்ளுட் படிந்திருந் தானே.** 2740

க—து: இஃது ஆசிரியர் ஆட்கொள்ளப்பெற்றமை கூறுகின்றது.

பொ—ரை: மனம் ஒருங்கி நிற்கமாட்டாத என்னை உலகியலிற் புகாதபடி காத்துத் தன் திருவடியை என் சென்னியில் வைத்து அந்தமில் இன்பத்தில் திளைக்கச் செய்து என் உள்ளக் கிழியில் உருவெழுதி அவ்வுருவில் தோய்ந்து நின்று நன்ஞானக் கூத்து இயற்றுவான் ஆயினன்; அவன் பெயர் நந்தி; கூத்தாடும் குணம் உடையோன். (93)

**உம்பரிற் கூத்தனை உத்தமக் கூத்தனைச்**
**செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனைச்**
**சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை**
**இன்புற நாடியென் அன்பில்வைத் தேனே.** 2741

க—து: இது முதல்வன்மேல் அன்பு மேலிட்டுப் பல்லாற் றால் போற்றுகின்றது.

பொ–ரை: திருக்கூத்தியற்றும் முதல்வனை அன்பினால் நினைந்து இன்புறுதல் கூடும்; அவன் மேல் உலகில் நிற்பவன்; தலையாயவன்; திருமன்றுள் ஆடி உயிர்களைக் காப்பவன்; உயிர்களோடு அத்துவிதமாய்க் கலந்துள்ளவன்; அவற்றின் உணர்வுக்கு அப்பாற்பட்டவன்.

வி–கு: தற்பரம் – அதற்கு மேலானது என்னும் பொருள் உள்ளது. அது இடத்திற்கு ஏற்பப் பொருள் தரும். (94)

**மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்**
**பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனை**
**சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை**
**ஆணிப்பொற் கூத்தனை ஆருரைப் பாரே. 2742**

க–து: இதுவும் அது.

பொ–ரை: கூத்தப்பிரான் மாணிக்கம்போற் சிறந்தவன். வளப்பம் பொருந்திய தில்லையம்பதியில் இருப்பவன்; மேலான ஆகாயத்தில் அறிவு வடிவாய் நின்று பேரின்பம் விளைப்பவன்; ஆணிப்பொன் போன்று மற்றையோரைத் தன் அளவுட்படுத்தித் தான் அளவுபடாதவன்; அவன் பேருண்மையை அறிந்து உரைப்பார் யாரும் இல்லை. (95)

**விம்மும் வெருவும் விழுமெழும் மெய்சோரும்**
**தம்மையுந் தாமறி யார்கள் சதுர்கெடும்**
**செம்மை சிறந்த திருவம் பலக்கூத்துள்**
**அம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே. 2743**

க–து: இது திருக்கூத்துக்கண்டு இன்புற்றார் எய்தும் மெய்ப்பாடு கூறுகின்றது.

பொ–ரை: நன்னலம் கனிந்த திருவம்பலத்தில் திருக் கூத்தியற்றும் அழகிய திருவடிக்கண் அன்பு வைத்து இன்புறு வார்க்கு பேருயிர்ப்பும், மெய்ந் நடுக்கமும், விழுதல் எழுதல் சோர்தல்களும் உளவாகும்; தம்மையும் அறியார்களாய்த் தம் வயம் இழப்பர் அவர். இவை யாவும் அன்பு மேலீட்டால் நிகழ்வன. (96)

**தேட்டறும் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள்**
**வாட்டறும் கால்புந்தி யாகி வரும்புலன்**
**ஓட்டறும் ஆசை யறும்உளத் தானந்த**
**நாட்ட முறுக்குறு நாடகங் காணவே.** 2744

க–து: இது திரு நடக் காட்சியின் விளைவு கூறு கின்றது.

பொ–ரை: திருக்கூத்தைக் கண்டபோதே உள்ளத்தில் ஊறி எழும் பேரின்பமும் அதனை நுகரும் பேரார்வமும் முறுகி வளரும்; அதனால், ஒருவனது அறிவு புறப்பொருளைத் தேடு தலும் தேடித் திகைத்தலும் கெடும்; உம்பின்கண் வாட்டம் உளதாகாது; உயிர்ப்பு அறிவு வயப்பட்டு ஓடுதல் நீங்கும்; புத்தியும் புலன்கள் மேற்செல்லாது; பிறப்பு ஈனும் வித்தாகிய உலக ஆசைகளும் உளவாகா. (97)

**காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்**
**கூளியோ டாடிக் குவலயத் தேயாடி**
**நீடிய நீர்தீகால் நீள்வா னிடையாடி**
**நாளுற அம்பலத் தேயாடும் நாதனே.** 2745

க–து: இது நாதன் நடம்புரியும் இடங்களைக் கூறுகின்றது.

பொ–ரை: உலகை அழிக்கப் புகுந்த காளியோடு ஆடி வென்று, பொன்மலையில் ஆடி சுடுகாட்டில் பேய்க் கூட்டத்தின் நடுவில் நின்று ஆடி, உலகத்தில் ஆடி, நீர் முதலிய ஏனை நான்கு பூதங்களினும் ஆடி, பலநாளும் பொருந்த திருவம்பலத்தே ஆடுவன் இறைவன்.

வி–கு: உலக நிகழ்ச்சிகள் எல்லாவற்றிற்கும் நிமித்த மாய் நிற்பது இறைவன் திருவுள்ள எழுச்சி என்பதும், அவன் மக்களுக்கு உயர்ந்ததாகவும் தாழ்ந்ததாகவும் எட்டுவதாகவும் எட்டாததாகவும் உள்ள யாண்டும் அவற்றின் தன்மை தனக்குப் பற்றுதலின்றிக் கலந்து நின்று இயக்குவன் என்பதை அறிவுறுத் தியபடி. (98)

**மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை**
**கூருமிவ் வானின் இலங்கைக் குறியுறும்**
**சாருந் திலைவனத் தண்மா மலயத்தூ**
**டேறுஞ் சுழுனை இவைசிவ பூமியே.** 2746

க–து: அண்ட பிண்டங்களில் சிவ விளக்கம் உறும் இடங்களைக் குறிக்கின்றது இப்பாட்டு.

பொ–ரை: மேருவும், நடுநாடி முதலிய மூன்று நாடி களும் உள்ளது சிறக்கும் இப்பூதவெளியில் இலங்கையும் சிவக்குறி பொருந்தும். நிலத்தில் சாரும் தில்லை வனத்தோடு குளிர்ந்த பொதியிலின் நடுவே அண்டத்தின் சுழுமுனை நாடி பொருந்தும். இவை சிவன் விளங்கி அருள் புரியும் இடங்கள்.

வி–கு: பிண்டத்தில் நடு நாடி மேருவுக்கு இணையாகக் கூறப்பட்டமையின், இடைபிங்கலைகளுக்கு இணையாக திங்கள் ஞாயிறுகளைக் கொள்க. (99)

**பூதல மேருப் புறத்தான தெக்கணம்**
**ஓதும் இடைபிங் கலைஒண் சுழுனையாம்**
**பாதி மதியோன் பயில்திரு அம்பலம்**
**ஏதமில் பூதாண்டத் தெல்லையின் ஈறே.** 2747

க–து: இஃது அண்டத்திற்கு முந்நாடிகள் இவை என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: நிலவுலகத்துப் பொன்மலையாகிய இமயமும், நிலத்தின் புறத்தேயுள்ள தென் இலங்கையும் அண்டத்திற்குக் கூறப்படும் இடைகலையும் பிங்கலையும் ஆகும். இனி, அண்டத்தின் ஒட்பமுள்ள சுழுமுனை நாடியாவது பிறையணி சடைமுடிக் கடவுள் திருக்கூத்து இயற்றும் தில்லையம்பலம் ஆகும். இவை குற்றம் அற்ற பிருதிவியண்டத்தின் முதன்மையான எல்லைகளின் முடிவு. (100)

## பொற்றில்லைக் கூத்து

**அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்**
**பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்**
**தெண்டினிற் சத்தி திருவம் பலமாகக்**
**கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே.** 2748

க–து: இது பொற்பதிக் கூத்தாமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: ஏழுவகைப்பட்ட அண்டங்களும் அழகிய சிறந்த ஊராக, அவற்றைத் தம் நிறைவில் அடக்கி நிற்கும் மாமாயையின் வகையாகிய நிவர்த்தி, பிரதிடை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் பழைய ஆகாய வகை ஐந்தும் தலை நகராக, தாமரைத் தண்டின் நூல் போல அவற்றில் ஊடுருவி

நிற்கும் தனது அருளாற்றலே ஆடும் அரங்காகவும் கொண்டு இயற்கைப் பேரறிவுப் பிழம்பாகிய பெருமான் கூத்து இயற்று தலை மகிழ்ந்தான்.

வி--கு: பிண்டத்தில் அண்டம் ஏழு என்பவற்றை ஆறு ஆதாரமும் முடிக்கண் உள்ள ஆயிரம் இதழ் மலரும் எனக் கொள்க. ஏனையவை ஈரிடத்திற்கும் ஒக்கும்; மூலம், உந்தி, நெஞ்சம், கழுத்து, புருவநடு என்பவற்றில் உள்ள வெளிகளை ஆகாசம் ஐந்து எனக் கோடலும் ஒன்று. (101)

**குரானந்த ரேகையாய்க் கூர்த்த குணமாம்**
**சிரானந்தம் பூரித்துத் தென்றிசை சேர்ந்து**
**புராணந்த போகனாய்ப் பூவையுந் தானும்**
**நிரானந்த மாகி நிருத்தஞ்செய் தானே.** 2749

க–து: இஃது இறைவன் குருவடிவு, அம்மை உரு, அப்பன் உரு மூன்றிலும் நிரதிசய ஆனந்தமாகியே உளன் என்பது கூறுகின்றது.

பொ–ரை: குருவடிவாகிய பேரின்பக் கதிர்களாய் அக்கதிர்களின் செறிவாகிய குணம் எனப்படும் தலைமையான இன்பம் நிறைந்து. தென்றிசைக்கண் தோன்றி, காயாம்பூ வண்ணமுள்ள அம்மையும் தானுமாகப் பரானந்தபோத நடனஞ் செய்வான் ஆயினன் முதல்வன். அங்ஙனம் ஆனந்தக் கூத்தியற்றுங்கால் அம்முதல்வன் திருமேனி ஆனந்தத்தை விளைக்கும் போக வடிவாய் உள்ளது.

வி–கு: குரு ஆனந்தம் – குரானந்தம்; ரேகை – கதிர், கிரணம். கூர்த்த – செறிந்த. சிரம் ஆனந்தம் – சிரானந்தம்; இதற்கு வேதத் தலையில் கூறப்பட்ட பூமா எனப்படும் ஆனந்தம்

எனினும் பொருந்தும். நிர் ஆனந்தம் – உறுதியான இன்பம்; நிர் – உறுதியை உணர்த்திற்று. நிர்ப்பந்தம் என்பதிற்போல. போகம் உலகபோகம், சிவபோகம் இரண்டும். (102)

**ஆதி பரனாட அங்கைக் கனலாட**
**ஓதுஞ் சடையாட உன்மத்த முற்றாடப்**
**பாதி மதியாடப் பாரண்ட மீதாட**
**நாதமோ டாடினான் நாதாந்த நட்டமே.** 2750

க–து: இது நாதாந்தக் கூத்து உணர்த்துகின்றது.

பொ–ரை: முப்பத்தாறாவது தத்துவம் எனப்படும் நாதத்தின் முடிவில் பரவெளியில் திருவருள் உருக்கொண்டு நாதப் பறையைக் கையிற்கொண்டு முதல்வன் ஆடினன். அதன் விளைவாக, ஆதிசத்தியோடு உடனாகிய சதாசிவன் ஆடினன்; முதல்வனது மற்றொரு திருக்கையில் ஏந்திய அனல் ஆடிற்று; அவன்றன் சடைகள் ஆடின; அவன் முடிக்கணிந்த உன்மத்த மலரும் ஆடின; பிறை ஆடிற்று; இந்தப் பாராகிய அண்டம் ஆடிற்று.

வி–கு: பார் அண்டம் ஈது – எனப் பிரிக்க. நாதப்பறை உயிர்களுக்கு அறிவை வழங்கும் நாத சத்தியை எழுப்பிற் சொற் பிரபஞ்சத்தைத் தொழிற்படுத்தும். சதாசிவன் தன் ஐந்தொழிலை மேற்கொண்டான் என்றபடி. இறைவன் உலக உருவினன் ஆகலின், சடை ஆகாயத்தைக் குறிக்கும். கனல் உலகிலுள்ள தீயைக் குறிக்கும்; ஒளியுடைப் பொருள்கள் இதில் அடங்கும். பிறை வளர்ந்தும் தேய்ந்தும் உலகப் பொருள்களை வளர்ந்தும் தேய்ந்தும் வரச் செய்யும் உன்மத்தம் வெளிப்படையாக மக்களால் விரும்பப்படாத பொருள்கள் ஏனைய பொருள்களைத் தோற்றுவிக்கு முகத்தால் பயன்படுதலைக் குறிக்கும். (103)

**கும்பிட அம்பலத் தாடிய கோனடம்**
**அம்பர னாடும் அகிலாண்ட நட்டமாம்**
**செம்பொரு ளாகுஞ் சிவலோகஞ் சேர்ந்துற்றால்**
**உம்பர மோனஞா னாந்தத்தில் உண்மையே. 2751**

க–து: இது திருவம்பலக் கூத்தின் பெருமை உணர்த்து கின்றது.

பொ–ரை: மக்கள் கண்களாற் கண்டு தொழுதுய்யும்படி இறைவன் திருவம்பலத்தில் ஆடும் திருக்கூத்து, அப்பரம் பொருளால் கருதப்படும் எல்லா உலகத்தையும் ஆட்டும் ஆடல் ஆம்; அந்நடங் கண்டு அதன் பயனாக நித்தமாய் மாறுதலில்லாத சிவலோகம் எனப்படும் மீதான வெளியைச்சேரப் பெறினும், அது மேலான மோன நிலையாகிய ஞான எல்லையின் உண்மை நிலையே ஆகும்.

வி–கு: மோனமாகிய ஞான அந்தத்தின் உண்மை என்க. திருநடக்காட்சி ஒருவரை அவ்வுண்மையாகிய சிவலோகத்தில் உய்க்கும் என்பது கருத்து. (104)

**மேதினி மூவேழ் மிகுமண்டம் ஓரேழு**
**சாதக மாகுஞ் சமயங்கள் நூற்றெட்டு**
**நாதமோ டந்த நடானந்த நாற்பதப்**
**பாதியோ டாடிப் பரனிரு பாதமே. 2752**

க–து: இது முதல்வன் திருவடி உலகையும் சமயங் களையும் நடாத்தும் என உணர்த்துகின்றது.

பொ–ரை: நாதம், அதன் அந்தம் என்பவற்றில் இயற்றப் படும் திருநடன இன்பத்தை மிகுமந்தம், மந்தம், விரைவு, மிகு

விரைவு என்னும் நான்கு வகையால் விளைவிக்கும் தன் ஒரு கூறாகிய அம்மையோடு உடனாகி நின்று ஆடும் இம் மேலோனுடைய இரண்டு திருவடிகள் உலகம் இருபத்தொன்று, அண்டம் ஏழு உயிர்கள் இறைவனை அறிந்து அணைதற்கு வாயிலாகிய சமயங்கள் ஆறு பதினெட்டு என்பவற்றை இடங்கொண்டு இயக்குவன.

வி–கு: நாற்பதம் – நால்வகைச் சத்திநிபாதம். சாதகம் – வாயில். (105)

**இடைபிங் கலையிம வானோ டிலங்கை**
**நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை**
**கடவுந் திலைவனங் கைகண்ட மூலம்**
**படர்வொன்றி யென்ற பரமாம் பரமே.** 2753

க–து: இது பிண்டத்திற்போல அண்டத்தில் முந்நாடிகள் இவை என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: பிண்டத்தில் இடை பிங்கலை என்னும் திங்கள் ஞாயிறு ஒப்ப அண்டத்தில் உள்ளவை இமய மலையும் இலங்கையும் ஆம். இடைபிங்கலைகட்கு நடுவேயுள்ள சுழுமுனை திங்களும் ஞாயிறும் சூழ்ந்துவர நடுவே நின்ற மேரு எனக் கூறப்படும்; உலகைத் திருக்கூத்தால் நடாத்தும் தில்லைவனம் இனிது காணப்படும் அம்மூல நாடி ஆகும். அங்கு உள்ள பரம் (மேலான பரவெளி) உயிர்களின் நினைவோடு ஒன்றியுள்ளது எனப்படும் பரம் பொருளாம்.

வி–கு: படர்வு – நினைவு; 'சேவடி படரும் செம்மல் உள்ளம்' என்றதிற்போல. (106)

**ஈறான கன்னி குமரியே காவிரி**
**வேறா நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழும்**
**பேறான வேதா கமமே பிறத்தலான்**
**மாறாத தென்றிசை வையகஞ் சுத்தமே. 2754**

க–து: இது தென்னாடு உலகத்துள் தூய்மை பெறுவதற்கு உரிய நாடு எனக் கூறுகிறது.

பொ–ரை: தென்றிசைக்கண் தெற்கு எல்லையாக உள்ள கன்னி குமரித்துறை, காவிரியாறு முதலிய சிறந்த ஒன்பது தீர்த்தமும், மேம்பட்ட ஏழு வெற்புகளும் இருக்க, இம்மை மறுமைப் பேறுகளை அடைவிக்கும் வேத ஆகமங்கள் தோன்றி நடைபெறுதலால் அது கலை, பண்பாடு முதலிய உயர் நலங்கள் மாறாது நிலையுறும் இடமாய், மக்கள் தம் உயிரைத் தூய்மை செய்து கொள்ளுதற்குச் சிறந்த இடமாம்.

வி–கு: ஒன்பது தீர்த்தம் – பொன்முகலி, பாலி, பெண்ணை, முத்தாறு, நிவா (வெள்ளாறு), காவிரி, வைகை, பொருநை, குமரித்துறை என்பவையாகலாம்.

வெற்பேழு – திருக்காளத்தி, திருக்கழுக்குன்றம், திருவண்ணாமலை, திருச்செங்கோடு, திருஈங்கோய், திருப்பரங்குன்றம், பொதியில் ஆகலாம். இத்தீர்த்தங்களும் வெற்புகளும் இறைவன் ஆடும் இடம் என்பது கருத்து. (107)

**நாதத் தினிலாடி நாற்பதத்தே யாடி**
**வேதத்தில் ஆடித் தழலந்த மீதாடிப்**
**போதத்தில் ஆடிப் புவன முழுதாடும்**
**தீதற்ற தேவாதி தேவர் பிரானே. 2755**

க–து: இஃது இறைவன் ஆட்டுவிக்கும் பொருள்களைக் கூறுகின்றது.

பொ–ரை: இயல்பாகவே பாசங்களின் நீங்கிய தேவர்க்கும் முதற்றேவர்க்கும் தலைவனாகிய சிவபிரான் நாதம், நாற்பதம், வேதம், சிவாங்கிச் சிகை, உயிர்கள், புவனம் என்ப வற்றில் ஆடி அவற்றை நடாத்துவன்.

வி–கு: நாற்பதம் – நாத காரியமாகிய சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் வாக்குக்களின் வகை: பெயர், வினை, இடை, உரி என்னும் நாற் சொற்கள் எனினும் அமையும். போதம் – அறிவு; ஈண்டு உயிர்களைக் குறித்தது.

(108)

**தேவரோ டாடித் திருவம் பலத்தாடி**
**மூவரோ டாடி முனிசனத் தோடாடிப்**
**பாவினு ளாடி பராசத் தியிலாடிக்**
**கோவினுள் ஆடிடும் கூத்தப் பிரானே.** 2756

க–து: இதுவும் அது.

பொ–ரை: கூத்தப்பிரான், முப்பத்து முக்கோடி தேவர்கள் உடனிருந்து காணத் திருவம்பலத்தில் ஆடுவன்; அயன் அரி அரன் என்பவர்களையும் முனிவர்களையும் இடங் கொண்டு ஆடி அவர்களைச் செயற்படுத்துவன்; அருட்பாக் களையும் அவற்றால் விளங்கும் மேலான திருவருளையும் இடங் கொண்டு ஆடி, உயிர்களுள் நின்று ஆடி முன்னையவற்றால் பின்னையவை பயன் எய்தச் செய்வன்.

வி–கு: கோ – பசு, உயிர். (109)

**ஆறு முகத்தில் அதிபதி நானென்றும்**
**கூறு சமயக் குருபரன் நானென்றும்**
**தேறினர் தெற்குத் திருவம் பலத்துளே**
**வேறின்றி அண்ணல் விளங்கிநின் றானே. 2757**

க—து: இது திருக்கூத்தின் குறிப்பு உணர்த்துகின்றது.

பொ—ரை: தெளிவு உள்ளார்க்கு சிவபிரான் தெற்குத் திருவம்பலத்தில், ஆறுமுகங்களில் முதல்வனாய் நிற்பவன் நானே என்றும், நூல்கள் கூறும் அறுசமயத்தில் சற்குருநாதன் நானே என்றும் அத் தெய்வங்களின் வேறு ஆதல் இன்றி விளங்கி நின்றான்.

வி—கு: தேறினர்க்கு என்பதில் குவ்வுருபு விகாரத்தால் தொக்கது. தேறினர்க்கு விளங்கி நின்றான் என முடிக்க.

ஆறுமுகம் – ஈசானம், தற்புருடம், அகோரம், வாம தேவம், சத்தியோசாதம், அதோமுகம் என்பவை. இவை முறையே அருளல், மறைத்தல், அழித்தல், காத்தல், படைத்தல், எவற்றிற்கும் ஆதாரம் ஆதல் என்னும் செயல்களைப் புரிவன.

ஆறுசமயம் – நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை என்னும் நூல்களைப் பற்றி நிற்போர் கொள்கைகள்; கணபதி, கந்தன், வைரவன், வீரன், மாயோன், துர்க்கை என்போரை முழுமுதல் எனக் கொள்ளும் சமயம் எனினும் பொருந்தும். வீரன் – வீர பத்திரர் முதலிய உருத்திர மூர்த்திகள். (110)

**அம்பலம் ஆடரங் காக அதன்மீதே**
**எம்பரன் ஆடும் இருதாளின் ஈரொளி**
**உம்பர மாமைந்து நாதத்து ரேகையுள்**
**தம்பர மாய்நின்று தான்வந் தருளுமே. 2758**

க–து: இஃது உணர்த்து முறைமை எனப்படும் அதிசூக்கும நடனம் உணர்த்துகின்றது.

பொ–ரை: எம் முதல்வன் திருவம்பலமே ஆடரங்காக ஆங்கு நின்று ஆடுங்கால் இரண்டு திருவடிகளில் நின்றும் வெளிவரும் அறிவு, தொழில் ஆற்றல்களாகிய இரண்டு ஒளிகள். மாயையைக் கடந்த நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுரம் சுத்த வித்தை என்னும் ஐந்துஇரேகையுள் வந்து உயிர்களைக் கடந்து நின்றே, மா சகலத்தில் அருளும்.

வி–கு: அறிவு தொழில் என்னும் ஆற்றல் இரண்டனுள் அறிவேயாதல் நாதம். தொழிலேயாதல் விந்து. இரண்டும் ஒத்து நிற்றல் சாதாக்கியம், தொழில் மிக்கு அறிவை உட்கொண்டு நிற்றல் ஈசுரம். அறிவு மிக்குத் தொழிலை உட்கொள்வது சுத்த வித்தை; இவை ஈரொளி ஐந்து ரேகையுள் வருதல்.

வித்தியா தத்துவம் ஏழனுள் மாயையை நாதமும், கலை கால நியதிகளை விந்துவும், புருடனைச் சாதாக்கியமும், வித்தையைச் சுத்த வித்தையும், அராகத்தை ஈசுரமும் செலுத்தும். இவற்றுள் மாயை அந்தக் கரணம் நான்கனுள் சித்தத்தைச் செலுத்தும், கலை ஆங்காரத்தைச் செலுத்தும், வித்தை புத்தியைச் செலுத்தும், அராகம் மனத்தைச் செலுத்தும், மனம் வாயில்களைப் பற்றி புறப்பொருள்களின் தன்மையை உணரும். இது வாயிற் காட்சி. பின் மனம் அகக்கருவிகளுள் சித்தத்தோடு ஒன்றிப் பழைய நினைவுகளோடு கலந்து சங்கற்ப விகற்பம் செய்யும்; புத்தி எதிர்ப்பட்ட பொருளைச் சவிகற்பமாக நிச்சயிக்கும்; ஆங் காரம் அவ்வுணர்வைத் தனதென அகங்கரிக்கும். இது மானதக் காட்சி. பின், சித்தம் குணமாய் நின்று புத்தியின்கண் முக்குணங் களுள் ஒன்றாய் மேம்பட, அதனை உயிர், அராகம் முதலியவற் றின் உதவியால் இன்பத் துன்ப மயக்கங்களுள் ஒன்று உற்று

அழுந்தி அறியும். இது தன்வேதனைக் காட்சி. இங்ஙனம், இறைவன் திருவடிகள் ஐந்தாய் நின்று உணர்த்துதல் காண்க. (111)

**ஆடிய காலும் அதிற்சிலம் பொலியும்**
**பாடிய பாட்டும் பலவான நட்டமும்**
**கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்**
**தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. 2759**

க–து: இது திருநடத்தை உள்ளே கண்டவுடன் பிறப்பறும் என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: உயிர்களுக்கு உடனின்று உணர்த்தும் மேலான ஆசிரியனாகிய சிவபிரான் பொருத்தமான திருக் கோலங்களைத் தன் திருவருளாற் கொண்டு ஆடிய திருவடியும், அதன்கண் உள்ள மறையாகிய சிலம்பு ஒலிகளும், அவன் பாடிய பாட்டுக்களும் ஆடிய பலவகைக் கூத்துக்களும் ஒருவன் உள்ளே நாடிக் கண்டவுடன் வியக்கத்தக்க முறையின் வினையும் பிறவித் துயரும் இல்லையாய் நீங்கிக் கழியும். (112)

**இருதயந் தன்னில் எழுந்த பிராணன்**
**கரசர ணாதி கலக்கும் படியே**
**அரதன மன்றினில் மாணிக்கக் கூத்தன்**
**குரவனாய் எங்கும் கூத்துகந் தானே. 2760**

க–து: இது மணிமன்றக் கூத்து பிராணசத்தியால் உலகைக் காக்கும் கூத்து என்பது உணர்த்துகிறது.

பொ–ரை: நெஞ்சக் கமலத்தில் தூய குருதியோடு உடனாய் உள்ள பிராணவாயு கை கால் முதலிய பல உறுப்புக் களினும் சென்று தீதகற்றி வளரச் செய்யும் அருட் செயலைச்

செய்பவன் திருவாலங்காட்டில் மணிமன்றுள் மேல் நோக்கிய கூத்தியற்றும் முதல்வன். அவனே, உயிர்களுக்கு உணர்த்துவோனாய் யாண்டும் அறிவுக்கூத்து இயற்றுவோனும் ஆவன்.

வி–கு: அரதனம் – இரத்தினம், மணி. உகத்தல் – உயர்தல். விரும்புதல். காளியோடு ஆடியது காளியால் உலகு அழியாமைப் பொருட்டு என்னும் புராண வரலாறு காண்க. (113)

## அற்புதக் கூத்து

**குருவுரு வன்றிக் குனிக்கும் உருவம்**
**அருவுரு வாவதும் அந்த அருவே**
**திரிபுரை யாகித் திகழ்தரு வாளும்**
**உருவரு வாகும் உமையவள் தானே. 2761**

க–து: இஃது இறைவனுக்கு உரு, அரு, அருவுரு என்பவை தடத்த நிலை பற்றிய வேறுபாடாவதன்றித் தன் இயல்பில் வேறுபடுவன அல்ல என உணர்த்துகின்றது.

பொ–ரை: திருவம்பலத்தில் ஆடும் (குனிக்கும்) உருவே குருவுருவாய் வருவது. அது மட்டும்அன்றி அருவுருவாகிய சிவலிங்க வடிவும் அதுவே. அருவம் நான்கு ஆவதும் அதுவே. அங்ஙனமே, மூன்று உடல்களில் நிற்பவள் (திரிபுரை) என விளங்கும் சத்தியும் உமையே. மகேசை, உமை, திரு, வாணி என உருவாகவும், விந்து, சத்தி என அருவாகவும் மனோன்மணி என அருவுருவாகவும் நிற்பவளும் உமையவளே என்று உணர்க. (114)

**திருவழி யாவது சிற்றம் பலத்தே**
**குருவடி வுள்ளாக் குனிக்கும் உருவே**

**உருவரு வாவதும் முற்றுணர்ந் தோர்க்கு**
**அருள்வழி யாவதும் அவ்வழி தானே. 2762**

க–து: இஃது எல்லாம் சற்குரு உருவே எனக் கருதல் ஒன்றே திருநெறியும் அருள் நெறியும் ஆகும் என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: பேரின்பத்திற்கு உரிய நெறியாவது ஒருவன் உள்ளக் கமலத்தில் உள்ள திருச்சிற்றம்பலத்தே குருவடிவை எண்ணி அதுவே கூத்தப்பிரான் உருவெனக் கொள்வதே ஆகும். அருவுரு எனப்படும் வடிவும், கலைஞானம் முற்றும் உணர்ந் தோர்க்குத் திருவருளை விளக்கும் நெறியும் அவ்வழியே ஆகும். (115)

**நீடுஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்**
**ஓடும் உயிரெழுந் தோங்கி உதித்திட்**
**நாடுமின் நாதாந்த நம்பெரு மா௱னுகந்(து)**
**ஆடு மிடந்திரு வம்பலத் தானே. 2763**

க–து: இது துவாதசாந்தப் பரவெளியே திருவம்பலம் என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: முடியின் மேல், சுழுமுனை அருவாய் நீடு கின்ற பன்னிரண்டு விரற்கிடைவரை பிராண சத்தி ஓங்கி மீள உதிக்கும்படி மூல மறையை மானதமாகக் கணிக்கும் போது நாடுங்கள்; அப்பன்னிரண்டங்குல உயரத்தில் நாதாந்தத்தில் விரும்பி ஆடும் சிவபெருமானது திருவம்பலம் உள்ளது.

வி–கு: சிவநெறியில் இறைவன் திருவுருவாகக் கொள்ளப்படுவன ஐம்பெருமனுக்கள்; அவன் அருட்குணம் ஆறாகக் கொள்ளப்படுவன ஆறங்க மறைகள்; சிவ சைதன்னிய மாகிய மூலத்தைக் குறிப்பது மூலமறை. இவற்றின் வீரிய வித்துக்

களாய் உள்ளவை முறையே குற்றெழுத்தும், நெட்டெழுத்தும், அளபெடையும் ஆகும். இவற்றை முறையே குறில், நெடிலள பெடையாகப் பிராணாயாமத்துடன் கணிக்க என்பது ஆகமவிதி. குறிலாகக் கணித்தலாவது அம் மறையோசை ஒளிவடிவாய் மூலம் முதல் புருவ நடுவரை செல்வதாக எண்ணி நோக்கிக் கணித்தல்; நெடிலாகக் கணித்தல் முடித்துளைவரை ஒளி செல்வதாகக் கணித்தல். அளபெடுத்துக் கணித்தல் மூலம் முதல் முடிக்கு மேல் பன்னிரண்டு அங்குலம் எழுவதாக எண்ணிக் கணித்தல். முடி வரை சுழுமுனை ஆதாரத்தோடு கூடியதெனவும், முடிக்கு மேல் அதன் தொடர்ச்சி பன்னிரண்டு அங்குலம் நிராதார மாக உள்ளதென்பதும், அதற்கு மேல் மீதானம் எனப்படும் பரவெளியுள்ளது என்பதும் மரபு.

**ஆதாரத் தாரே நிராதாரத் தேசென்று**
**மீதானத் தேசெல்க வுந்தீ பற**
**விமலற் கிடமதென் றுந்தீ பற**

என்னும் சாத்திரம் கருதத்தக்கது. (116)

**வளிமேக மின்வில்லு வானக வோசை**
**தெளிய விசும்பில் திகழ்தரு மாறுபோல்**
**களியொளி யாறுங் கலந்துடன் வேறாய்**
**ஒளியுரு வாகி ஒளித்துநின் றானே.** 2764

க–து: இஃது இறைவன் அத்துவாக்கள் ஆறனுக்கும் பரம ஆதார நிமித்தனாய் நின்று அவற்றிற் பிரிப்பின்றி மறைந் திருத்தல் உணர்த்துகின்றது.

பொ–ரை: பூத ஆகாயத்தில் காற்றும், மேகமும், மின்னும் வானவில்லும் ஓசையும் அடங்கியிருந்து, மக்கள்

அவற்றின் உண்மையைத் தெளியும்படி வெளிப்படுகின்றன. அதுபோல, உயிர்களுக்கு விளக்குப்போலச் சிற்றறிவு விளக்கஞ் செய்யும் ஒளிகளாய் ஆறு அத்துவாக்களும் தம் காரண நிலையில் முதல்வன் திருவருளைச் சார்ந்து அடங்கி நின்று பின் அவன் சத்தி சங்கற்பத்தால் வெளிப்பட்டுத் தோன்றுகின்றன. தோன்றும் அவற்றோடு கலந்து உடனாய் நின்று அவற்றின் ஆற்றல்களை விளக்கும் ஒளியாய் இருந்தும் முதல்வன் விறகில் தீயைப்போல அவற்றில் மறைந்து (தன்னை மறைத்து) நிற்கின்றான்.

வி–கு: ஆறு அத்துவா – எழுத்து, சொல், மறை, கலை, தத்துவம், புவனம் என்பவை. இவை ஒளியெனப்படுதலை,

***வெந்த சாம்பல் விரையென் பதுதம(து)***
***அந்த மில்ஒளி அல்லா ஒளியெலாம்***
***வந்து வெந்தற மற்றப் பொடியணி***
***சந்த மாக்கொண்ட வண்ணமும் சாற்றினார்.***

என்னும் பெரியபுராணச் செய்யுளான் உணர்க. (117)

**தீமுத லைந்தும் திசையெட்டும் கீழ்மேலும்**
**ஆயும் அறிவினும் அப்புறம் ஆனந்தம்**
**மாயைமா மாயை கடந்துநின் றார்காண**
**நாயகன் நின்று நடஞ்செயு மாறே.** 2765

க–து: இஃது எல்லாம் கடந்தவிடத்து ஆனந்தக் கூத்து நிகழுமாறு கூறுகின்றது.

பொ–ரை: மாயை, மாமாயை என்பவற்றின் சார்பைக் கடந்து திருவருட் சார்பு உற்றோர் காணும்படி, உயிர்களை நடத்து வோன் திருவளர் திருச்சிற்றம்பலத்து நின்று திருநடம் புரியு

மாறாவது; ஐம்பூதமும் திசையெட்டும், கீழும், மேலும் என்னும் பொருள் இடங்களும், இவற்றைப் பற்றி ஆராயும் அறிவும் கடந்த இடமும் பேரானந்த விளைவும் உடையது. (118)

**கூத்தன் கலந்திடும் கோல்வளை யாளொடும்**
**கூத்தன் கலந்திடும் கோதிலா ஆனந்தம்**
**கூத்தன் கலந்திடும் கோதிலா ஞானத்துக்**
**கூத்தனுங் கூத்தியுங் கூத்தத்தின் மேலே. 2766**

க–து: இது முதல்வன் தன்னியல்பு பொதுவியல்பு இரண்டினும் அம்மையப்பனாய் (சத்திசிவமாயே) நிற்பன் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: உலகை நடாத்தும் முதல்வன் யாண்டும் அம்மையோடு கூடியே நிற்பன்; அவன் ஞானகுருவாய் வரும் போது ஞானசத்தியுடன் புணர்ந்து நிற்பன்; முத்தர்க்குப் பேரின்பம் அருளும் நிலையில் இன்ப சத்தியுடன் கலந்து நிற்பன்; முதல்வனும் முதல்வியும் தாம் செய்யும் அருட் செயலின் மேல் ஒத்த நோக்கு உடையராயே இருப்பர். ஈசன் எத்திறம் அத்திறம் அவளும் நிற்பள் என்பது கருத்து. (119)

**இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்**
**நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்**
**படங்கொண்டு நின்றவிப் பல்லுயிர் எல்லாம்**
**அடங்கலுந் தாமாய்நின் றாடுகின் றாரே. 2767**

க–து: இஃது உலகம் சத்தி சிவங்களின் இலச்சினையை (அடையாள முத்திரையை) உடையதாமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: இடப்பாகங்கொண்ட முதல்வியும் தானுமாக நின்று உலகினை ஆட்டுமாற்றை யானும் காட்சி யளவை

கொண்டு கருதியுணர்ந்தேன்; படம் போன்று மடிக்கப்பட்டு ஒடுங்கவும் விரிக்கப்பெறவும் வருகின்ற உலகை இடம், உடல், கருவி, நுகர்வாகக் கொண்டுள்ள பலவகை உயிர்களும் மற்றும் எல்லாமாய் நின்று ஆடி ஆட்டுகின்றனர் அவ்விருவரும்.

வி–கு: உயிர்கள் ஆணும் பெண்ணுமாய், வடிவு, குணம், குறி முதலியவை ஒத்தும் ஒவ்வாமலும் இருத்தல் முதலியவையே இலச்சினையாம். (120)

**சத்தி வடிவு சகல ஆனந்தமும்**
**ஒத்த ஆனந்தம் உமையவள் மேனியாம்**
**சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்(டு)**
**ஒத்த ஆனந்தம் ஒருநட மாமே.** **2768**

க–து: இஃது இன்புறு நிலை எல்லாவற்றினும் சத்தியின் கலப்பு உளது என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: பிறப்பு நிலையில் உயிர்க்கு சகல அவத்தையில் உண்டாகும் சத்துவ குண விளக்கமும் சத்தியின் வடிவு ஆம். வீட்டு நிலையில் உயிர் அருளோடு ஒன்றி நிற்கும் அருள் நிலைக்கண் விளங்கும் சுகப்பிரபை (இன்ப ஒளி) இன்ப சத்தியாகிய உமையவள் திருமேனி ஆகும். சத்தி சகள வடிவத்து எழுந்து முதற்பொருள், உயிர் என்னும் இரண்டும் ஒற்றுமைப்பட்டு ஒன்றுதலால் வரும் பேரின்ப அனுபவம் ஒப்பற்ற திருநடத்தால் உளதாவது. இந்நடனம் பரநடனம், அல்லது பரானந்த நடனம் எனப்படும்.

வி–கு: ஒத்தல் – ஒன்றுதல்; அதாவது, காட்சியெனத் தானென காணப்படு பொருளெனத் தான் என இரண்டாதல் இன்றிப் பிரிப்பின்றி நிற்கும் அத்துவித நிலை.

சகள வடிவத்து என்பது சொன்னிலை மாறி வடிவு சகளத்து என நின்றது.

நடத்தின் விளைவை நடம் என்று காரியத்தைக் காரணமாக உபசரித்தார். (121)

**நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி**
**உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம்**
**பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்**
**சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே.** 2769

க–து: இது புருவ நடுவில் உள்ள வெளியே திருச்சிற்றம் பலமாமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: நெற்றியில் சுழுமுனைக்கு நேரே, புருவங்களின் நடுவாகிய இடத்தில் உள்ள வெளிமனம் ஒருங்கி நோக்கும்போது அருளாணையாகிய ஒளியைத் தரும் இடமாகவும், உணர்வு பற்றுவதற்குப் பற்றுக்கோடாய் உள்ள முதல்வன் இருந்து விளங்கும் இடமாகவும் உள்ளது. அதனை திருச்சிற்றம்பலம் என்று கண்டு சேர்ந்து முதல்வன் ஆணையைக் கண்டு கொண்டேன்.

வி–கு: மந்திரம் – வீடு. இருப்பிடம். இருந்த இடம் என்பதில் அகரம் தொக்கது. (122)

**அண்டங்கள் தத்துவ மாகிச் சதாசிவம்**
**தண்டினிற் சாத்தவி சாம்பவி யாதனம்**
**தெண்டினில் ஏழுஞ் சிவாசன மாகவே**
**கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே.** 2770

க–து: இஃது அறிவொளியாகிய சிவன் எல்லாமாகி நின்று உயிர்களை ஆட்கொள்ளுமாறு கூறுகின்றது.

பொ–ரை: இயற்கை முற்றுணர்வினனாகிய முதல்வன் அண்டங்கள் தத்துவங்களாகி, சதாசிவம், யாழின் நரம்பு ஏழு, அம்மை இடங்கொள்ளும் மலை முதலியவை, வானவில்லின் ஏழு நிறம் என்பவற்றைத் தனக்கு ஆசனமாகக் கொண்டு கூத்தாடுதலை உகந்தான்.

தண்டு – யாழ், வில், தெண்டு – தண்டு. சாத்தவி – ஏழாகிய நரம்பி; ஒலியைத் தருவன. சாம்பவி – உமை. ஆதனம் – இருப்பிடம். தெண்டினில் ஏழு – நடு நாடியில் உள்ள ஆறு ஆதாரமும், முடிக்கண் உள்ள ஆயிரம் இதழ்க் கமலமும் ஆம். (123)

**மன்று நிறைந்த விளக்கொளி மாமலர்**
**நன்றிது தானிதழ் நாலோடு நூறவை**
**சென்றது தானொரு பத்திரு நூறுள**
**நின்றது தானெடு மண்டல மாமே. 2771**

க–து: இஃது அருளொளி வட்டங்கள் அளவிறந்தனவாதல் உணர்த்துகின்றது.

பொ–ரை: மன்று நிறைந்த விளக்காகிய சிவபிரானது அருள் ஒளியானாய சிறந்த மலரே நன்று (உறுதி) எனப்படும். இது நால்வகையாதலொடு பலப்பல வகையவாதல் உலகிற் காணப்படும்; ஒவ்வொரு தொகுதியாகிய மலரும் ஒரு நெடுவட்டமாகும்.

வி–கு: நான்கு – அறம், பொருள், இன்பம், வீடு; இவை நாலிதழ் மலராகிய மண்டலம்; பதி, பசு, பாசம் – மூவிதழ் மலர்;

பிறவும் அன்ன. திருப்பதிகம், திருச்சதகம் முதலியவை சொல்லுலகில் பத்திதழ் மலர், நூறிதழ் மலர் முதலியவாகக் கொள்ளப்படும். கலைஞானமும் பொருள் நியமனங்களும் திருக்கூத்தால் மலர்வன என்றபடி, ஒளி மாமலர் – ஒளியால் அலரும் மலர். மேலைப்பாட்டும் இதுவும் கலை. அறிவியல், சமயம் முதலியவை திருக்கூத்தால் தோன்றி நின்று மறைவன என்பது உணர்த்துதல் காண்க. சென்றது – அழிந்த மலர்; நின்றது – தோன்றி நிலைபெறுவது எனினும் அமையும். (124)

**அண்டம் எழுகோடி பிண்டம் எழுகோடி**
**தெண்டிரை சூழ்ந்த திசைகள் எழுகோடி**
**எண்டிசை சூழ்ந்த இலிங்கம் எழுகோடி**
**அண்ட னடஞ்செயும் ஆலயந் தானே.** 2772

க–து: இஃது இறைவன் திருக்கூத்து யாண்டும் நிகழுமாறு கூறுகின்றது.

பொ–ரை: உலகவுருவினனாகிய முதல்வன் திருக்கூத்தியற்றும் இடங்கள் அளவிறந்த அண்டங்களும், உடல்களும், நீராற் சூழப்பெற்ற தீவுகளும், எத்திசையிலும் உள்ள சிவலிங்க வடிவுகளும் ஆகும். (125)

**ஆகாச மாமுடல் அங்கா ர் முயலகன்**
**ஏகாச மாந்திசை எட்டுந் திருக்கைகள்**
**மோகாய முக்கண்கள் மூன்றொளி தானாக**
**மாகாய மன்றுள் நடஞ்செய்கின் றானே.** 2773

க–து: இஃது இறைவன் உலக உருவினனாய் நடஞ்செய்யுமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: பெரிய ஆகாயமாகிய மன்றுள் நின்று திருக்கூத்தியற்றும் முதல்வனுக்கு ஆகாயமே திருமேனி, அழகிய மேகங்கள் முயலகன், மேலாடை கொள்ளும் எண்தோள்கள் எண் திசைகளே ஆகும்; விருப்பத்தைத் தரும் மூன்று கண்களாவன ஞாயிறு, திங்கள், நெருப்பு என்னும் முச்சுடர்களே ஆகும்.

வி–கு: ஏகாசம் – உத்தரீயம். மோகாய – மோகம் ஆய (ஈறு தொக்கது) (126)

**அம்பல மான தகில சராசரம்**
**அம்பல மாவது ஆதிப் பிரானடி**
**அம்பல மாவ தப்புத்தீ மண்டலம்**
**அம்பல மாவ தஞ்செழுத் தாமே.** **2774**

க–து: இஃது இறைவனுக்கு அம்பலமாவன இவை என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: எல்லா இயங்கு நிலைத்திணை உயிர்களும், உலகில் உள்ள நீர், தீ மண்டலங்கள், திருவைந்தெழுத்து என்பவை ஆகும். அவ்வம்பலத்துள் கூத்தியற்றுவன ஆதி சத்தியோடு கூடிய சிவபிரான் திருவடிகள்.

வி–கு: அகக் கருவிகளைச் செலுத்தும் அ, உ, ம, விந்து, நாதம் எனும் சூக்கும பஞ்சாக்கரமே அம்பலம் என்க. சிவயநம என்னும் ஐந்தெழுத்தும் முறையே மணி, பொன், வெள்ளி, செம்பு, ஓவியமன்றமாம் என்பாரும் உளர். (127)

**கூடிய திண்முழ வங்குழ லோமென்ன**
**ஆடிய மானுடர் ஆதிப் பிரானென்ன**
**நாடிய நற்கண மாரம்பல் பூதங்கள்**
**பாடிய வாறொரு பாண்டரங் காமே.** **2775**

க–து: இது பாண்டரங்கக் கூத்தை உணர்த்துகின்றது.

பொ–ரை: ஒப்பற்ற பாண்டரங்கக் கூத்தில் உடனிசைத்த முழவும் குழலும் எழுப்பிய ஓசை ஓம் என்றொலித்தது; மானுடர் கண்டு ஆதிப்பிரான் என்று ஏத்தி ஆடினர்; கண்ட நற்கண வரிசையாகிய பல் பூதங்கள் இறைவன் புகழைப் பாடின.

வி–கு: ஆரம் – வரிசை.

**ஏறமர் கடவுள் மூவெயில் எய்வுழிக்**
**கூறுகூறாகக் கொடியொடும் படையொடும்**
**வேறுவே றுருவின் விண்மிசைப் பரத்தர்**
**அவ்வழி ஒளியொடும் உருவொடுந் தோன்றித்**
**தேர்முன் நின்று திசைதலை பனிப்பச்**
**சுவையுங் குறிப்பும் ஒழிவில தோன்றி**
**அவையவை யல்வழி யாடினன் ஆட**
**மைந்தரு மகளிருந் தந்நிலை யழிய**
**மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக்**
**கடிய காலக் காற்றென வேற்றவன்**
**படிநிலை திரியாப் பாண்டரங் கம்மே.**

என்பது பாண்டரங்கத்தின் இயல்பைத் தெரிவிக்கும். (128)

**அண்டத்தில் தேவர்கள் அப்பாலைத் தேவர்கள்**
**தெண்டிரை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள்**
**புண்டரி கப்பதப் பொன்னம் பலக்கூத்துக்**
**கண்டு சேவித்துக் கதிபெறு வார்களே. 2776**

க–து: இது பொற்றில்லைக் கூத்தின் பொலிவு உணர்த்துகின்றது.

பொ–ரை: அண்டத்திலும் அதற்கு அப்பாலும் கடல் சூழ்ந்த நிலவுலகத்தும் உள்ள தேவர்கள் பொன்னம்பலத்தில் செம்மலர் நோன்றாள் ஒன்றை எடுத்து ஆடுந் திருக்கூத்தைக் கண்டு தொழுது மேற்கதியைப் பெறுவார்கள். (129)

**புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோல்**
**களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்**
**துளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்**
**ஒளிக்குளா னந்தத் தமுதூறும் உள்ளத்தே. 2777**

க–து: இதுவும் அது.

பொ–ரை: புளியைப் பார்த்தபோது ஒருவருக்கு நாவில் நீர் ஊறுவது போல, பரானந்தத்தை விளைக்கும் தில்லைத் திருக் கூத்தைக் கண்டவர்க்கெல்லாம் கண்களில் அன்புநீர் அரும்பும்; ஒருங்கி நிற்கும் உள்ளம் உருகும்; அவ்வுள்ளத்தே அருளொளி யும் அவ்வொளிக்குள் அருளானந்தமாகிய அமுதும் ஊறி மிகும். (130)

**திண்டாடி வீழ்கை சிவானந்த மாவது**
**உண்டார்க் குணர்வுண்டால் உன்மத்தஞ் சித்திக்கும்**
**கொண்டாடு மன்றுட் குளிக்குந் திருக்கூத்துக்**
**கண்டார் வருங்குணங் கேட்டார்க்கும் ஒக்குமே. 2778**

க–து: இதுவும் அது.

பொ–ரை: பிறவியால் வரும் துன்பங்களால் துவண்டு பின் ஒரு தலையாக விழையப்பெறும் நிலைபேறு சிவானந்த மாகும்; அதனைத் தலைப்பட்டு நுகர்ந்தார்க்குத் தெளிவுணர்வும் எப்பொழுதும் நீடும்; அவர்க்கு உலகால் தாக்கப்படாமல் இருக்கும் உன்மத்தமும் கிடைக்கும். மெய்யுணர்ந்தார் பலரும்

உட்கொண்டு பாராட்டும் திருமன்றுள் நிகழும் திருக்கூத்தைக் கண் டார்க்கு இவ்வானந்த நுகர்வும் தெளிவுணர்வும் உலகத்தால் தாக்குண்ணாமையும் உளவாகும்; காண்பார்க்கு வரும் இக் குணங்கள் அதுபற்றிக் காதலால் கேட் பார்க்கும் உளவாகும்.

வி–கு: கண்டார் என்பதன் ஈற்றில் நான்கண் உருபு விகாரத்தால் தொக்கது. (131)

**அங்கி தமருகம் அக்குமா லைப்பாசம்**
**அங்குசஞ் சூலங் கபால முடன்ஞானம்**
**தங்கு பயந்தரு நீல மும்முடன்**
**மங்கையோர் பாகமாய் மாநட மாடுமே.** 2779

க–து: இது ஞான மாநடமாமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: இறைவன் தன் எண்கைகளில் நெருப்பகல், துடி, அக்கமணிமாலை, கயிறு, தோட்டி, முத்தலைவேல், கபாலம், ஞானத்தையும் உலக போகத்தையும் குறிக்கும் நீலமலர் என்ற இவற்றை ஏந்தி, உமையம்மை இடப்பாகத்தில் நின்று காணும்படி சிறந்த திருக்கூத்தை இயற்றுவன்.

வி–கு: அங்கி – அழித்தற்சத்தி; காட்டுதலையும் குறிக்கும். தமருகம் – தோற்றுவிக்கும் ஆற்றல், அக்குமாலை – யோகநிலை கூட்டல். பாசம் அங்குசம் – ஆணவத்தைப் பிணித்து அடக்குதல். சூலம் – மும்மூர்த்திகளைச் செலுத்தும் ஆற்றல். கபாலம் – அழிவின்மையும், உலகை விதித்தலும், தோற்றி நிறுத்தலும் உடையது.

**ஆடல் பதினோ ருறுப்பும் அடைவாகக்**
**கூடிய பாதஞ் சிலம்புகை கொள்துடி**
**நீடிய நாதம் பராற்பர நேயத்தே**
**ஆடிய நந்தி புறமகத் தானே.** 2780

க–து: இஃது இறைவன் அகத்தும் புறத்தும் ஆடுதலை உணர்த்துகின்றது.

பொ–ரை: சிவபிரான் ஆடல் உறுப்பாகச் சொல்லப்படும் அறுவகை நிலை ஐவகைப் பாதம் என்னும் பதினொன்றும் முறையாகக் கூடும்படி திருவடியிற் சிலம்பும் கையிற்கொண்ட துடியும் நீடுதலாகவுள்ள ஓம் என்னும் நாதத்தை எழுப்ப அன்பில் விளைந்து ஆடுவோன். அவன் எல்லா உயிர்களுக்கும் அகத்தும் புறத்தும் உளன்.

வி–கு: பராத்பரம் – மேலானதினும் மேலானது; அது நேயத்திற்கு அடை. உயர்வற உயர்ந்த இறவாத இன்ப அன்பு என்பது கருத்து. (133)

**ஒன்பது மாட ஒருபதி னாறாட**
**அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடனாட**
**இன்புறும் ஏழினும் ஏழைம்பத் தாறாட**
**அன்பதும் ஆடினான் ஆனந்தக் கூத்தே. 2781**

க–து: இது திருக்கூத்து உயிர்களுக்கு யாண்டும் அன்பை விளைவிக்குமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: சிவபிரான் தன் நவந்தருபேதமும், மதியின் கலை பதினாறும், இறையன்பில் உய்க்கும் அறுவகைச் சமய நெறிகளும், எழுவகைப் பிறப்பும் ஏழ் உலகமும், ஐம்பத்தாறு நாடுகளின் வாழ்க்கை நிலையும் இவற்றூடு அன்பும் நிலவுமாறு ஆனந்தக்கூத்து ஆடுவன்.

வி–கு: ஐம்பத்தாறை எழுத்து ஐம்பத்தொன்றும் திருவெழுத்தைந்தும் எனலுமாம். (134)

**ஏழினில் ஏழாய் இகந்தெழுத் தேழதாய்**
**ஏழினில் ஒன்றாய் இழிந்தமைந் தொன்றாய்**
**ஏழினிற் சன்மார்க்கம் எங்கள் பரஞ்சோதி**
**ஏழிசை நாடகத் தேஇசைந் தானே.** 2782

க–து: இஃது இறைவன் ஏழிசையாய் நின்று ஏழிசைச் சூழலை (பண்ணும் பாடற்றொழிலும்) தோற்றுவிக்குமாறு கூறுகின்றது.

பொ–ரை: யாழின் நரம்பிலும் குழலின் துளைகளிலும் ஏழிடங்களில் ஏழிசையாகி, அவ்வரிசையைக் கடந்து மேலும் கீழும் ஏழிசையாகி, மேலே இசையைக் குறிக்கும் எழுத்துக்களில் ஒன்றாய் கீழ் இறங்குகையில் ஆதாரசுருதி எழுத்து ஒன்றாய் இங்ஙனம் எம்பரமன் ஏழிசையால் நன்னெறி தழைக்குமாறு ஏழிசைக் கூத்தில் ஏழிசையாயும் இசைப்பயனாயும் இசைந்து நின்றான்.

வி–கு: ஏழ் எழுத்து: ச, ரி, க, ம, ப, த, நி என இசை குறித்து நின்றவை. (135)

**மூன்றினில் அஞ்சாகி முந்நூற் றறுபதாய்**
**மூன்றினில் ஆறாய் முதற்பன்னீர் மூலமாய்**
**மூன்றினில் அக்க முடிவாகி முந்தியே**
**மூன்றினும் ஆடினான் மோகாந்தக் கூத்தே.** 2783

க–து: இஃது இறைவன் உயிர்களில் ஆடுதல் கூறுகின்றது.

பொ–ரை: முதல்வன் இலயம், போகம், அதிகாரம் எனும் மூன்று நிலைகளில், நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுரம்,

சுத்தவித்தை என்னும் ஐந்தாய் விரியால் பலவகை பேதமாய், முதற்பொருள் எனப்படும் காலம் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்றனுள் ஆறு பெரும்பொழுது சிறுபொழுது என்று ஆகி, பன்னிரண்டு திங்கள் என்று கூறப்படுவதற்கு மூலமாய் (மேடம் முதலிய வீடு பன்னிரண்டாய்) முச்சுடர் என்பதனுள் கண்கள் அடங்குவனவாய், முற்பட்டு மூவகை உயிர்களிடத்து மோகம் முதலிய குற்றங்களை முடிக்கும் திருக்கூத்து ஆடினான். (136)

**தாமுடி வானவர் தம்முடி மேலுறை**
**மாமணி ஈசன் மலரடித் தாளிணை**
**வாமணி யன்புடை யார்மனத் துள்ளெழும்**
**காமணி ஞாலங் கடந்துநின் றானே.** 2784

க–து: இஃது இறைவன் அன்பர்க்கு எளி வந்தும் உலகம் கடந்து நிற்குமாறு கூறுகின்றது.

பொ–ரை: மாலையணிந்த முடியுடைய வானவர் தம் முடிமேல் தங்கும் சிறந்த மணியாகிய ஆண்டவன்; தன் மலர் போன்ற தாளிணை தங்கும் அழகிய அன்பர் உள்ளத்துச் சோதியா யெழும் கற்பகமும் சிந்தாமணியும் போன்றவன்; அவன் உலகத்தைக் கடந்தே நிற்கிறான்.

வி–கு: தாமமுடி என்பது தாமுடி என நின்றது. வாம் – வாவும் விரைந்து விளங்கித் தங்கும். அணி – அழகு. கா – கற்பகம்; தன்னைச் சார்ந்து கேட்பதைக் கொடுப்பது. மணி – சிந்தாமணி நினைத்ததைக் கொடுப்பது. (137)

**புரிந்தவ னாடிற் புவனங்க ளாடும்**
**தெரிந்தவ னாடும் அளவெங்கள் சிந்தை**
**புரிந்தவ னாடிற்பல் பூதங்கள் ஆடும்**
**எரிந்தவ னாடல்கண் டின்புற்ற வாறே.** 2785

க–து: இது திருக்கூத்தால் உலகு இயங்குமாறு கூறு முகத்தால், இறைவன் உலகினுக்கு உயிராய் நிற்றல் கூறுகின்றது.

பொ–ரை: மும்மல காரியங்களாகிய முப்புரங்களை எரித்த சிவபிரான் யாம் கண்டு இன்புற்றவாற்றைக் கூறின், அவன், தன் உள்ளத்தில் எண்ணி ஆடினால் புவனங்கள் தொழிற் படும்; அவன் தன் அறிவாற்றலால் நோக்கும் அளவே எங்கள் சிந்தையின் நினைவு அமைகிறது. உயிர்கள் மாட்டு விருப்பம் வைத்த அவன் திருக்கூத்தால் பல்வகையான உயிர்களும் போகமும் வீடும் உடையவாகின்றன.

வி–கு: எரித்தவன் என்பது எதுகை நோக்கி மெலிந்தது. புரிதல் – விரும்புதல், எப்பொழுதும் மேற் கொள்ளுதல். பூதம் உயிர்கள். சிந்தையின் பின் ஆடும் என ஒரு சொல் வருவிக்க.

(138)

**ஆதி நடஞ்செய்தான் என்பர்கள் ஆதர்கள்**
**ஆதி நடஞ்செய்தல் ஆரும் அறிகிலர்**
**ஆதி நடமாடல் ஆரும் அறிந்தபின்**
**ஆதி நடமாட லாமருட் சத்தியே. 2786**

க–து: இது திருக்கூத்து என்பது இறைவன் அருட்சத்தி சங்கற்பமேயாம் என்றுணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் திருக்கூத்தின் உண்மையை அறிந் தார் சிலரே; அறியாதாரும் அவன் திருக்கூத்து ஆடினன் என்று பொதுவாகக்கேட்டு அறிந்து கூறுவர். அதன் உண்மையை அறிந்த யாரும் அஃது அவன் திருமேனியாகிய அருளொளி வெளியில் உளதாகும் மின்னலின் எழுச்சி போன்றதோர் சக்தி சங்கற்பமாகிய திருநோக்கமே என்பதை உரைப்பர். (139)

**ஒன்பதோ டொன்பதாம் உற்ற இருபதத்**
**தன்புறு கோணம் அசிபதத் தாடிடத்**
**துன்புறு சத்தியுள் தோன்றிநின் றாடவே**
**அன்புறு மெந்தைநின் றாடலுற் றானே.** 2787

க–து: இது திருக்கூத்து உயிரை மலசத்தியின் விடுவித்து ஞேயத்து அழுந்தி நிற்ச் செய்கின்றது என்பதை உணர்த்துகின்றது.

பொ–ரை: தத்துவம் என்னும் இருபதங்களை இணைக்கும் அசிபதப் பொருளில் உயிர் ஒன்றி நடக்க அதனைத் துன் புறுத்தும் மலசத்தியுள் நின்றும் விடுபட்டுத் தத்துவங்களோடு கூடித் தொழிற்படும்படி உயிர்கள் மாட்டுப்பேரன்பு உடையவனாகிய சிவபிரான் திருநடம் புரிகின்றான்.

வி--கு: இருபதம் – தத், த்வம் (அது, நீ) என்னும் பெரு மொழிச் சொற்கள். அன்புறு கோணம் அசிபதம் ஆ[illegible]றச் செய்து அவ்விரண்டையும் இணைக்கும் அஸி [illegible]ாய்) என்னும் சொல். இவை மூன்றும் முறையே முதல்[illegible]ா, திருவருள் என்னும் பொருள்களைக் குறிக்கும். உயிர் அசி[illegible]தத்தில் ஆடுதலாவது, சிவன் நான் எனப் பாவித்து சிவாய என்னும் முத்தி ஐந்தெழுத்தைச் சுத்தமானதமாகக் கணித்து நிற்றல். இது சுத்த நிலைக்கண் நிகழ்வது. துன்புறு சத்தி – துன்பை உறுத்தும் மல சத்தி; இதனுள் ஆடுதலாவது, நம என்னும் ஊன நடனத்துட் படுதல்; இது சகலத்தில் நிகழ்வது.

தத்பதத்தால் குறிக்கப்படும் முதல்வன் நவந்தரு பேதமாய் நடிப்பன்; த்வம்பதத்தாற் குறிக்கப்பெறும் உயிர் ஐம்பொறி அந்தக் கரணம் என்னும் ஒன்பதாய் வேறின்றி நிற்கும். ஆதலினால், ஒன்பதோடு ஒன்பதாம் இருபதம் எனக் கூறினார்; சொற்கும் பொருளுக்கும் உள்ள பிரிவுபடாத் தொடர்பு கருதப்பட்டது. (140)

**தத்துவம் ஆடச் சதாசிவம் தானாடச்**
**சித்தமும் ஆடச் சிவசத்தி தானாட**
**வைத்த சராசரம் ஆட மறையாட**
**அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே. 2788**

க–து: இது திருக்கூத்தால் விளையும் தொழிற்பாடுகளை வகுத்துக் கூறுகின்றது.

பொ–ரை:சகலருக்குப் பந்தமாய் நின்ற ஆன்ம வித்தியா தத்துவங்களும், சதாசிவ தத்துவமும், உயிரின் அறிவும், ஆதி சத்தியும், உலகில் உடலெடுத்த உயிர்களும், மறைகளும் தொழிற்படும்படி உலகத் தந்தையாகிய சிவபிரான் ஆனந்தக் கூத்தாடினன். (141)

**இருவருங் காண எழிலம் பலத்தே**
**உருவோ டருவோ டுருபர ரூபமாய்த்**
**திருவருட் சத்திக்குள் சித்தனா னந்தனன்**
**அருளுரு வாகநின் றாடலுற் றானே. 2789**

க–து: இது திருவம்பலக்கூத்தை விளக்குகின்றது.

பொ–ரை: திருவருளாற்றலாகிய வெளிக்குள் எல்லாம் வல்லவனும் பேரின்பமயனும் ஆகிய சிவபிரான், அழகிய பொன் னம்பலத்தில் அரு, உரு, அருவுரு என்னும் மூன்றுருக் கொண்டு, உண்மையில் அவை மூன்றும் தன் கருணையேயாக, பதஞ்சலி, புலிக்கால் முனிவர் காண வெளிப்பட்டு ஆடுகின்றான். அதனை, உலகீர்! சென்று கண்டு, ஒன்றியிருந்து நினைமின்கள். (142)

**சிவமாடச் சத்தியும் ஆடச் சகத்தில்**
**அவமாட ஆடாத அம்பரம் ஆட**

**நவமான தத்துவ நாதாந்த மாடச்**
**சிவமாடும் வேதாந்த சித்தாந்தத் துள்ளே.** 2790

க–து: இது திருக்கூத்தின் இயல்பு உபநிடதங்களிற் கூறப்பட்டமையை உணர்த்துகின்றது.

பொ–ரை: பரசிவத்தின் சங்கற்பமாகிய திருக்கூத்தால் சிவபேதங்களும் சத்தி பேதங்களும் தொழிற்பட உலகில் உள்ள தீய ஆற்றல்கள்தம் வலிகெட, அசைவற்ற ஆகாயமும் தன்கண் நுண்ணிய அலைகளுக்கு இடங்கொடுத்தது; புதுமையையுடைய நாதம் முடிவான தத்துவ தாத்துவிகங்கள் தொழிற்பட்டன். இது வேதாந்தத்தின் முடிந்த முடிபின் கண்ணது. (143)

**நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்**
**வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவா னந்தமும்**
**தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து**
**நாதப் பிரமம் சிவநடம் ஆமே.** 2791

க–து: இதுவும் அது.

பொ–ரை: உயிர் நாதத்தைத் தனக்கு வேறாக உணர்ந்து அதனைக் கடத்தலும், நல்போத முடிவாகிய உணர்விறந்து உணர்தலும், வேதாந்தத்தின் உண்மைப் பொருளை உணர்தலும், உணர்த்தலும் உண்மையறிவானந்த நிலையைத் தலைப்படுதலும், குற்றமற்ற நல்ல சதாசிவ தத்துவ புவனங்களில் இன்புறுதலும், நாதப் பிரமம் எனப்படும் ஓங்கார அம்பலத்தில் பரசிவம் இயற்றும் திருநடத்தின் பயனே ஆகும்.

வி–கு: சிவம் என்பவற்றில் முன்னையது சித்து (அறிவு) என்னும் பொருள் தருவது. (144)

**சிவமாதி ஐவர்திண் டாட்டமுந் தீரத்**
**தவமார் பசுபாசம் ஆங்கே தனித்துத்**
**தவமாம் பரனெங்குந் தானாக ஆடுந்**
**தவமாங் சிவானந்தத் தோர்ஞானக் கூத்தே.** 2792

க–து: இது ஞானக்கூத்தின் பயன் உணர்த்துகின்றது.

பொ–ரை: சீலம், நோன்பு, செறிவு எனப்படும் தவம் முதிர்ந்த உயிரைப் பிணித்திருந்த பாசங்கள் அதனைவிட்டு நீங்கி சிவம் முதலாக எண்ணப்படும் சிவ தத்துவங்களால் உயிர்க்கு இருந்துவந்த ஐந்தொழிலிற்படும் பிணிப்பு நீங்கும்படி, தவ உருவாகிய சிவபிரான் உயிர் தானாந் தன்மை பெற ஞானக் கூத்து இயற்றுவன்; எகனாகி இறைபணி நிற்கும் உண்மைத் தவத்தின் பயனாகச் சிவானந்தம் நுகர்வோரே அதனை உணர்வர். (145)

**கூடிநின் றானொரு காலத்துத் தேவர்கள்**
**வீடநின் றான்விகிர் தாவென்னும் நாமத்தைத்**
**தேடநின் றான்திக முஞ்சுடர் மூன்றொளி**
**ஆடநின் றானென்னை ஆட்கொண்ட வாறே.** 2793

க–து: இஃது ஆசிரியரை ஆட்கொண்ட வியத்தகு பேரருள் கிளக்கின்றது.

பொ–ரை: இறைவன் உயிர்களோடு அவையே தானே யாய்க் கலந்து நிற்பவன்; ஊழிக் காலத்துத் தேவர் முதல் அனைவரும் அழியத்தான் ஒருவனேயாய் எஞ்சி நிற்பவன்; தேவரும் பிறரும் விகிர்தன் என்னும் திருப்பெயரை எடுத்துச் சொல்லித் தேடும்படி காணப்படாமல் உள்ளவன்; விளங்கும் முச்சுடர்களுக்கு ஒளியைக் கொடுத்து நின்றவன். இத்தகைய முதல்வன் என்னைத் தானே ஆண்டு கொண்டான்.

வி–கு: விகிர்தன் – ஒன்றோடொன்று ஒவ்வா வேடம் புனையும் மாறுபாடு உடையவன். (146)

**நாதந் துவங்கடந் தாதி மறைநம்பி**
**பூதத் துவத்தே பொலிந்தின்பம் எய்தினர்**
**நேதத துவமும் அவற்றொடு நேதியும்**
**பேதப் படாவண்ணம் பின்னிநின் றானே. 2794**

க–து: இது தத்துவ சுத்தியும் மெய்யன்பும் உடையார் சிவப்பேறு எய்துமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: 'தத்துவங்களை நேதிசெய்த நேயமாகிய மெய்யில் நின்றார் நாதமாந் தன்மையைக் கடந்த ஆதியும் மறைகளை உலகிற்குத் தந்தவனும் ஆகிய சிவன் வெளிப்படும் உண்மை நெறியில் விளங்கி நின்று பேரின்பம் எய்தினர்; அவனும் அவர்களோடு பிரிப்பின்றி ஒன்றி நின்றான்.

வி–கு: நே – நேயம். தத்துவம் – உண்மை நேதி – இஃது ஆன்மா அன்று எனக் களைதல். நேதி – நேதத்துவம் என்பவை; அவற்றை உடையாரைக் குறித்து எய்தினர் என்பதற்கு எழுவாய் ஆகி, பின்னரும் சென்று இயைந்தன. நாதத்துவம் – நாதமாய் நிற்கும் தன்மை. பூ – தோன்றுதல். (147)

**ஆனந்த மானந்த மென்பர் அறிவிலர்**
**ஆனந்த மாநடம் ஆரும் அறிகிலர்**
**ஆனந்த மாநடம் ஆரும் அறிந்தபின்**
**தானந்த மற்றிடம் ஆனந்த மாமே. 2795**

க–து: இஃது ஆனந்த நடமாமாறு கூறுகின்றது.

பொ—ரை: ஆனந்த் மாநடத்தின் உண்மையியல்பை அறிந்த யாரும் தற்போத எழுச்சி நீங்கிய இடமே ஆனந்த நடம் நிகழ் இடம் என்பர்.

வி—கு: தான் நந்தம் அற்ற இடம் – தான் என்னும் உணர்வின் எழுச்சிகெட்ட உணர்வு நிலை. (148)

**திருந்துநற் சியென் றுதறிய கையும்**
**அருந்தவர் வாவென் றணைத்த மணிக்கையும்**
**பொருந்தில் இமைப்பிலி யவ்வென்ற பொற்கையும்**
**திருந்நத்தீ யாகும் திருநிலை மவ்வே. 2796**

க—து: இது முதல்வன் திருவைந்தெழுத்தால் திருக் கூத்தி யற்றல் கூறுகின்றது.

பொ—ரை: தன்னைச் சார்ந்தாரை இமையாது காக்கும் முதல்வன்றன் துடியை உதறும்கை சிகாரம்; எடுத்த அடியைக் காட்டி வீசி அணைத்த கரம் வா ஆகும்; அருந்தவர் ஈண்டு வருக என்னும் குறிப்புடையது. நில் அல்லது அமைக என்னும் குறிப்பில் அஞ்சல் அளிக்கும் அழகியகை யகரம் ஆகும்; தீ ஏந்திய இடக்கரம் திருவை அளிக்கும் நகாரம் ஆகும்; முயலகன் மேல் ஊன்றிய திருநிலையை உடைய திருநிலை மகாரம் ஆகும்.

வி—கு: திருந்தத்தீ என்பது இப்பொழுதுள்ள பாடம். (149)

**மருவுந் துடியுடன் மன்னிய வீச்சும்**
**அருவிய அப்பும் அனலுடன் கையும்**
**கருவின் மித்த கமலப் பதமும்**
**உருவில் சிவா்ய நமவென ஓதே. 2797**

க–து: இதுவும் அது.

பொ–ரை: கூத்தப்பிரான் திருவுருவில் துடி மருவு கையும், நிலையாக வீசிய கையும், அவ்விரண்டன் நடுவே அமைந்த அமைத்த கையும், அனல் ஏந்திய கையும், பிறப்பின் மூலமாகிய மலத்தின் அடையாளமாகிய முயலகனை மிதித்த திருவடியும் முறையே சிவாயநம என்னும் ஐந்தெழுத்துக்களாம் என விரும்பிச் செபிக்க. (150)

**அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்**
**அரனங்கி தன்னில் அறையில் சங்காரம்**
**அரனுற் றணைப்பி லணையுந் திரோதாயி**
**அரனடி யென்று மனுக்கிரகம் என்னே.** 2798

க–து: இது முதல்வன் திருவுருவில் ஐந்தொழிற் குறிப்பு உணர்த்துகின்றது.

பொ–ரை: திருக்கூத்தால் ஐந்தொழில் நிகழுமாற்றைக் கட்டுரைக்கின், சிவபிரான் அசைக்கும் துடியில் படைப்பும், அமைப்பில் காத்தலும், அங்கியில் அழித்தலும், முயலகனை எழவிடாமல் கட்டுப்படுத்தும் ஊன்றிய அடியில் மறைத்தலும், எடுத்த பொற் பாதத்தில் என்றும் அருளலும் நிகழ்வன என்க. (151)

**தீத்திரட் சோதி திகழொளி உள்ளொளி**
**கூத்தனைக் கண்டவக் கோமளக் கண்ணினள்**
**மூர்த்திகள் மூவர் முதல்வ னிடைசெல்லப்**
**பார்த்தனள் வேதங்கள் பாடினள் தானே.** 2799



க–து: இதுவும் அது.

பொ–ரை: தீத்திரள்களையுடைய சோதிவடிவத் திருவாசியுள் விளங்கும் ஒளியுருவச் சிவன் ஓங்காரத்து உள் ஒளி. அக்கூத்தப் பிரானை நோக்கி நிற்கும் இளமைச் செவ்வியை யுடைய சிவகாமியம்மை அயன் அரி அரன் என்போர் முதல்வன் அருள்வழி நிற்கச் செய்வதோடு, மறைகளையும் உலகிற்குப் பாடுவித் தருளினள். (152)

**நந்தியை எந்தையை ஞானத் தலைவனை**
**மந்திரம் ஒன்றுள் மருவி யதுகடந்**
**தந்தர வானத்தின் அப்புறத் தப்பர**
**சுந்தரக் கூத்தனை என்சொல்லு மாறே.** 2800

க–து: இஃது இறைவன் அன்பால் உரைக்க எளிவந்தும் உரையைக் கடந்தவன் என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: இன்புருவன், உயிர்களுக்குத் தந்தை மெய் யறிவே வடிவாய தலைவன். இவன் ஓம் என்னும் ஒரு மறையுள் பொருந்தி அதைக் கடந்து நிற்போன்; எவற்றுக்கும் இடங் கொடுக்கும் ஆகாயத்தைக் கடந்து, வேதங்களால் போற்றப்படும் மேலான அழகிய திருக்கூத்து உகந்தவன் அவனைப் போற்றுதல் அன்றி இலக்கண வகையாற் கூறுதல் யார்க்கும் கூடுவதன்று. (153)

**சீய குருநந்தி திருவம்ப லத்திலே**
**ஆயுறு மேனியை யாரு மறிகிலர்**
**தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை**
**யாயுறு மேனி யணைபுக லாமே.** 2801

க–து: இது முதல்வனுக்குத் திருமேனியாமாறு உணர்த்து கின்றது.

பொ–ரை: குருராயனாகிய சிவபிரான் திருவம்பலத்தில் நுணுகிப் பொருந்தும் திருமேனியை அறிந்தார் இலர்; நெருப் பிற்குக் குணமாகவும் வடிவாகவும் உறும் செம்மையும் வெளுப் பும் போல, அவன் திருவருட் சத்தியே அவன் திரு மேனியும் ஆகும். அத்திருமேனி அவனை அணைவதற்கு வாயிலாகிய புகலிடம் ஆகும்.

வி–கு: செம்மை – திரோதான சத்தியையும், வெளுப்பு: – அருட்சத்தியையும் குறிக்கும். அத்தன்மையாய் உறுமேனி எனக் கூட்டுக. (154)

**தானான சத்தியுந் தற்பரை யாய்நிற்குந்**
**தானாம் பரற்கும் உயிர்க்குந் தகுமிச்சை**
**ஞானாதி பேத நடத்து நடித்தருள்**
**ஆனா லரனடி நேயத்த தாமே. 2802**

க–து: இது சத்தியின் இயல்பு உணர்த்துகின்றது.

பொ–ரை: சிவத்தின் வேறாகாத அவனது அருளொளி யாற்றலும் அவனைப் போலவே உயிரைக் கடந்த மேலான ஆற்றலாய் நிற்கும். அது தான் எனப்படும் பரனுக்கும் உயிர்க்கும் விழைவு. அறிவு முதலிய வகைகளாய், முறையே தாதானமிய மாயும், அத்துவிதமாயும் நின்று உயிர்களை நடத்தும். இங்ஙனம் ஆதி (திரோதாயி) யாய் நடித்து, உயிரின் முதிர்ந்த நிலையில் அருளேயாய் மாறி நிற்பின், அஃது உயிர்க்குச் சிவனடியைச் சேர்ப்பிக்கும் அன்பைத் தருவதாய் நிலையுறும். (155)

## 9. ஆகாசப்பேறு

அஃதாவது அருள்வெளியைப் பெறுவதற்கு உரிய முறை. ஆகாசம் – பரமாகாசம் எனப்படும் அருள் வெளி.

ஒளியையுடையது – ஒளிக்கு இடந்தருவது என்பது அச்சொல் இயல்பு.

**உள்ளத்துள் ஓமென ஈசன் ஒருவனை**
**உள்ளத்து ளேஅங்கி யாய ஒருவனை**
**உள்ளத்து ளேநீதி யாய ஒருவனை**
**உள்ளத்து ளேயுடல் ஆகாச மாமே.** 2803

க–து: இது மாயையின் ஆக்கப் பொருள்களைச் சார்ந் துள்ள உயிர் அவற்றை நீத்து அருளொளியைச் சார்தற்கு உபாயம் கூறுகிறது.

பொ–ரை: உயிர்களை ஆளும் முதல்வனை, அவற்றின் உள்ளத்தில் ஒளியாய் நிற்கும் ஒப்பற்றவனை, உள்ளத்துள் தங்கி நின்று அறவுணர்வை விளக்கி, அறத்தின் பயனைப் பெயராது நுகர்விக்கும் தான் ஒருவனே எல்லாமாய் நிற்கும் சிவபிரானை, ஒருவன் தன் உள்ளத்துள் 'ஓம்' என உணர்ந்து வழிபட்டு வரின் புருட தத்துவத்திற்கும் உள் எனப்படு காரணவுடல் அருளொளி யாய்விடும்.

வி–கு: ஒருவனை உள்ளத்துளே ஓம் என உடல் ஆகாசம் ஆம் என முடிக்க. உள்ளம் நான்காம் அடிக் கண்ணது புருட தத்துவம் என்னும் பொருளது. (156)

**பெருநில மாயண்ட மாயண்டத் தப்பால்**
**குருநில மாய்நின்ற கொள்கையன் ஈசன்**
**பெருநில மாய்நின்று தாங்கிய தாளோன்**
**அருநிலை யாய்நின்ற ஆதிப் பிரானே.** 2804

க–து: இது முதல்வனுக்கும் உலகிற்கும் உள்ள இயைபு கூறும் முகத்தால் மேற்கூறிய உண்மையை வலியுறுத்துகின்றது.

பொ–ரை: உயிர்களால் அறிதற்கு அரிய நிலையில் நின்ற தலைவன், கலப்பால் பெரிய நிலமாயும் அதனை அகப் படுத்தும் அண்டமாயும் அண்டங்களைக் கடந்து வேறாய், அவற்றிற்குத் தாரகமாய் விளங்கி நிற்கும் சத்தியாய் உள்ளனன்; அவன் தாள் எனப்படும் திருவருளாற்றல் எல்லாரையும் எப் பொருளையும் தாங்கி நிற்கும் பரம ஆதாரமாய் உள்ளது.

வி–கு: நிலம் – சார்பு, ஆதாரம். (157)

**அண்ட ஒளியும் அகண்ட ஒளியுடன்**
**பிண்ட ஒளியாற் பிதற்றும் பெருமையை**
**உண்ட வெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது**
**கொண்ட குறியைக் குலைத்தது தானே. 2805**

க–து: இது மேற்கூறியவாறு ஆகாசப்பேறு உற்றார்க்குப் பூதவுடலும் பெயரும் நீங்குமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: அளவுபடாத ஒளியாகிய திருவருளுடன் கூடிநின்று உடம்பில் ஒளியாகிய அறிவால் இறைவனைப் பற்றி அறிந்த அளவில் உரைக்கும் சிறுமையை அண்ட ஒளியாகிய அங்கி உண்டு, பிண்டத்தை வெளிக்குள்ளும், அறிவொளியைச் சிவ ஒளிக்குள்ளும் மறையச் செய்தது. இவ்வாற்றால், வினைக் கீடாகக் கொண்ட உருவையும் அதனைக் குறிக்கும் பெயரையும் கெடச் செய்தது அவ்வண்ட ஒளி.

வி–கு: அண்ட ஒளி பெருமையை உண்டு, அவ்வண்ட வெளிக்குள் ஒளிக்குள் ஒளிப்பித்தது, குலைத்தது என முடிக்க. உம்மை சிறப்பு. (158)

**பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே**
**பயனுறும் ஆதிப் பரஞ்சுடர்ச் சோதி**

**அயனொடு மாலறி யாவகை நின்றிட்(டு)**
**உயர்நெறி யாயொளி ஒன்றது வாமே.** 2806

க–து: இஃது இறைவன் பிறப்பு வீடு இரண்டினும் உபகரித்தல் கூறுகின்றது.

பொ–ரை: ஆடவருக்குத் தரும் இன்பப் பயனைத் தாமும் உறும் கன்னியர்தம் சிற்றின்ப நுகர்வின்கண், வினைப் பயனை அளந்து உறுவிக்கும் ஆதி சத்தியோடு கூடிய, மேலான சுடரும் அகண்டப் பேரொளியாயும் நின்றவன். தன் முனைப்பு உள்வழி அயனொடு மாலுக்கும் அறியப்படாமல் நின்றான்; அவனே, அன்பால் நினைந்துருகுவார்க்கு வீட்டு நெறியாகவும் அதனை விளக்கும் ஞான ஒளியாகவும் நிற்பன். (159)

**அறிவுக் கறிவாம் அகண்ட ஒளியும்**
**பிறியா வலத்தினிற் பேரொளி மூன்றும்**
**அறியா தடங்கிடில் அத்தன் அடிக்குள்**
**பிறியா திருக்கிற் பெருங்காலம் ஆமே.** 2807

க–து: இஃது ஆகாசப் பேற்றிற்கு வாயிலாகிய சிவயோக நிட்டை கூறுகின்றது.

பொ–ரை: உயிர்க்கு உயிராகிய சிவ ஒளியும் அதனை விட்டு நீங்காத இச்சை ஞானக் கிரியை என மூன்றாய்க் கிளைக் கும் ஆதி சத்தியும் தனக்கு வேறு பிரிந்து தோன்றா வண்ணம் அறிவு அடங்கி நிற்கில், அஃதாவது சிவனடிக்கீழ் ஒன்றி உறைந் திடில், பெரிதாகிய காலதத்துவம் ஒருவன் வயப்படும். (160)

**ஆகாச வண்ணன் அமரர் குலக்கொழுந்(து)**
**ஏகாச மாசுண மிட்டங் கிருந்தவன்**

**ஆகாச வண்ணம் அமர்ந்துநின் றப்புறம்**
**அகாச மாயங்கி வண்ணனும் ஆமே. 2808**

க–து: இது சிவபிரானுடைய தன்னியல்பு பொது வியல்பு வேறுபடுத்து உணர்த்துகின்றது.

பொ–ரை: பரமாகாசம் எனப்படும் திருவருளாற்றலையே தன் வண்ணமாகக் கொண்டு இறவா நிலையினர் குலக்கொழுந்தாயுள்ளவன்; சிவதத்துவம் எனப்படும் ஐந்து தலைகளையுடைய மாமாயையாகிய பேரரவைத் தோள்மேல் ஆடை (ஏகாசம்) யாக இட்டு இருந்தவன். இங்ஙனம் கடந்த நிலையில் பரமாகாச வண்ணத்தையே விரும்பி நின்ற முதல்வன் இப் புறமும், பூத வெளியாயும் பொங்கழல் உருவனாயும் நின்று அன்பர்க்கு எளிவந்து அருள்வன். (161)

**உயிர்க்கின்ற வாறும் உலகமும் ஒக்க**
**உயிர்க்கின்ற உள்ளொளி சேர்கின்ற போது**
**குயிற்கொண்ட பேதை குலாவி யுலாவி**
**வெயிற்கொண்டென் உள்ளம் வெளியது வாமே. 2809**

க–து: இது குண்டலி யோகத்தால் அம்மை அருள் பெற்று இருவினை தீருமாறு கூறுகின்றது.

பொ–ரை: உயிர்த்தலும் அது பற்றி உலக உணர்வும் ஒக்கக் கெடும்படி சுழுமுனையில் தொழிற்பட்டு மேல் ஏறும் உள்ளொளி பிராணசத்தியுடன் சேரும் போது, குயில் வாங்கிக்கொண்ட இனிமையை உடைய அஞ்சொல் அம்மை என் உள்ளத்தில் விளங்கி உலாவுதலால், அவள் தன் கருணை ஒளியைக் கொண்டு என் உள்ளம் இருளும் வினையும் நீங்கி வெளி ஆகும். (162)

**நணுகில் அகல்கிலன் நாதன் உலகத்**
**தணுகில் அகன்ற பெரும்பதி நந்தி**
**நணுகிய மின்னொளி சோதி வெளியைப்**
**பணியின் அமுதம் பருகலும் ஆமே.** 2810

க–து: இஃது இறைவனைச் சார்ந்து இன்புறுமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: நம் தலைவன் தன்னை மனமொழி மெய்களால் நண்ணுவார்க்கு அணியன்; உலகத்தைச் சார்ந்து ஒழுகுவோர்க்கு அப்பேரிறைவன் சேயனாவன். அவரவர் பக்குவ நிலைக்கு ஏற்ப மின்னொளியாக, சோதியாக, பரம ஆதாரமாக விளங்கும் முதல்வனது அருள்வழி நிற்பின், சிவத்துவ விளக்கம் பெறுதல் கூடும். (163)

**புறத்துளா காசம் புவனம் உலகம்**
**அகத்துளா காசமெம் மாதி யறிவு**
**சிவத்துளா காசம் செழுஞ்சுடர்ச் சோதி**
**சகத்துளா காசம் தானஞ் சமாதியே.** 2811

க–து: இஃது ஆகாசவகைகள் உணர்த்துகின்றது.

பொ–ரை: புறத்து உள்ள ஆகாயம் புவனங்களுக்கும் உலகத்திற்கும் இடந்தருவது; அகத்தே உள்ள ஆகாசமாவது முதல்வனது ஞானசத்தியே ஆகும்; சிவத்தால் உளதாகும் ஆகாசம் செழுஞ்சுடராகிய தனுவைப் பயக்கும் சோதிக்கு நிலைக் களமாகிய மாமாயை (சுத்தமாயை). சகத்தில் அவ்வாகாசங்களைப் பெறுவதற்கு வாயிலாவது நிட்டை நிலையே ஆகும்.

வி–கு: தானம் – இடம்; ஈண்டு வாயில் என்னும் பொருள்பட நின்றது. (164)

# 10. ஞானோதயம்

இவ்வதிகாரம் மெய்யுணர்வின் தோற்றத்தைப் பற்றிக் கூறுவது.

**மனசந் தியிற்கண்ட மன்னன வாகும்**
**கனவுற வானந்தங் காண்ட லதனை**
**வினவுற ஆனந்த மீதொழி வென்ப**
**இனமுற்றா னந்தியா னந்தம் இரண்டே.** 2812

க–து: இஃது இன்பமாவது மீதொழிவே என்பதும் அஃதிருவகைப்படும் என்பதும் உணர்த்துகின்றது.

பொ–ரை: மனம் புறப் பொருள்களைப் பொறி வாயிலா கவும், உட்கருவிகளோடும் சந்தித்தற்கண் (ஆன்ம சிற்சத்தி) கண்ட நிலையான உணர்வு நனவின்கண் வரும் உணர்வாகும்; அவ்வுணர்வின் விளைவைக் கனவின் தன்மை உறும்படி மனம் சந்தித்தல் இன்றிக் காணுதல் ஆனந்தமாகும். இதன் இயல்பை ஆராயின், இன்பமாவது மீதொழிவு ஆகும். இன்பம் என்னும் பொதுமை தோன்ற, இன்புறுதற்குரிய உயிர் பெறும் இன்பம் உலகவின்பம், சிவானந்தவின்பம் என இரண்டாகும்.

வி–கு: அதனைக் கனவுறக் காண்டல் ஆனந்தம் ஆம் என இரண்டாமடியை மாறிப் பொருள் உரைக்க. காகத்தின் கண்மணிபோல். மனம் பொறிவாயிலாகப் புறப் பொருளினும், அகத்தே உற்றது சிந்திக்கும் சிந்தையினும் சார்ந்து புறப்பொருள் களை முறையே நிருவிகற்பமாயும் சவிகற்பமாயும் அறிதற்குத் துணையாகும். இவ்விரண்டு உணர்வுகளே இங்கு நனவு எனப் பட்டன. நனவு – நனவின்கண் நிகழும் உணர்வைக் குறித்தலின் ஆகு பெயர்.

இங்ஙனம் இரு வகையாற்கண்ட பொருளின் தன்மை சத்துவம் முதலிய குணங்கள் மூன்றனுள் ஒன்றாகப் புத்தியின்கண் பரிணமித்துத் தோன்ற, அதனை ஆன்ம அறிவு இஃது இன்பம், இது துன்பம் இது மயக்கம் என மூன்றனுள் ஒன்றாக அறிந்து அழுந்தும்; இங்ஙனம் அழுந்தியறிதல் தன்வேதனை எனப்படும். இங்குக் கருவியாவன அராகம், வித்தை, கலை என்பவை; இவை உள்ளம் எனப்படும் உயிரைப் பிரிந்து நில்லாதவை. இவ்வாறு அந்தக் கரணங்களைக் கடந்த நிலையிற் காணும் தன்வேதனைக் காட்சியினையே 'அதனைக் கனவுறக் காண்டல் ஆனந்தம்' என்றார் ஆசிரியர். தன் வேதனை இன்பம், துன்பம், மயக்கம் என மூன்றாயினும் ஈண்டைக்கு ஏற்புடைய இன்பம் ஒன்றே குறிக் கொள்ளப்பட்டது. மீதொழிவு என்றது தான் அல்லாத பிரகிருதி குணம் தன்மீது மேம்பட்டுத் தோன்ற அதனை அழுந்தி அறிதல்; அஃதாவது, தன்னையும் பிறவற்றையும் நோக்குதலின்றி இன்ப குணம் ஒன்றே தன் அறிவில் விளங்க நிற்றல் இக் கருத்துப் பற்றியே இது 'மீதொழிவு' எனத் திருமூலதேவராற் குறிக்கப் பட்டது.

இதனாற் போந்தது யாதோ எனின், உலகவின்ப அனுப வமும் முற்பட நிகழும் காட்சிப் பயனாதல் போல, சிவானந்த வின்ப அனுபவமும் அவனருளே கண்ணாக அவனைக் காணும் ஞானத்தின் பயனாம் என்பதும், அது முதல்வனுடைய எண் குணங்களும் ஆன்மாவின் மாட்டு மேம்பட்டு நிற்ப ஆன்மா அவற்றைக் காண்பான் காட்சி காட்சிப்பொருள் என்னும் பகுப்பு இறந்து நின்று அழுந்தி அறிதலேயாம் என்பதும் ஆம் என்க. இதனை 'ஞானோதயம்' என்னும் தலைப்பானும் உணர்ந்து கொள்க. (165)

**கரியட்ட கையன் கபாலங்கை யேந்தி**
**எரியும் இளம்பிறை சூடுமெம் மானை**

**அரியன் பெரியனென் றாட்பட்ட தல்லால்**
**கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே. 2813**

க–து: உயர்ந்தோர் பலரும் கூறியவாற்றான் உணர்ந்து ஆட்படுவார்க்கே இறைவன் திருவருள் கிடைக்கும்; அங்ஙன மன்றி முன்னர் அவன் உண்மை நிலையை உணர்த்தும் என்றல் கூடாது எனக் கூறுகின்றது இப்பாட்டு.

பொ–ரை: தன்னைச் சரண் அடைந்தோரைக் காத்தற் பொருட்டுக் கயன் என்னும் யானை வடிவ அசுரனைக் கொன்று அவன் தோலைப் போர்த்துக் கொண்டவன், அயன் தன் செருக்கு நீங்கும்படி அவன் ஒரு தலையைக் கிள்ளி அதன் தசை நீங்கிய ஓட்டைக் கையில் ஏந்தியவன், தண்ணென்று கதிர் வீசும் இளம் பிறையை முடிக்கு அணியாகக் கொண்டவன், யார்க்கும் காண அரியன், ஆயினும் எல்லாமாய் நிற்பவன் என்று உயர்ந்தோர் பலரும் கூறுதல் கொண்டு ஆட்பட்டு வழிபடுவதல்லது அவன் கரியன் என்றோ செம்மேனி உடையான் என்றோ கண்டு அவனை அணுகவில்லை. (166)

**மிக்கார் அமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்**
**தக்கார் உரைத்த தவநெறியே சென்று**
**புக்கால் அருளும் பொன்னுரை ஞானத்தை**
**நக்கார் கழல்வழி நாடுமின் நீவிரே. 2814**

க–து: உயர்ந்தோர் கண்டு கூறிய முறையின் வழிபடின் இறைவன் தன்னை உணரும் அருள் ஞானத்தைத் தானே அருளுவன்; ஆதலால் அவனை மேற்கூறியபடி வழிபடுக என்று உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ–ரை: முதல்வன் தம் வலியைப் பெரிது என்று எண்ணித் தன்னை வழிபடாது மிகைசெய்த வானவர் தம்

சிறுமையை உணர்ந்து சரண்புக்க போது அவர் அமுது உண்டு இன்புறும்படி தான் நஞ்சைத் தன்மிடற்றில் அடக்கிய அமுத மயன்; அவனை உயர்ந்தோர் கூறிய தவநெறியில் நின்று வழி பட்டுவரின், அவன், செம்பு போன்ற உயிரைச் செம்பொன் ஒத்த சிவமாக்கவல்ல தன் திருவடி உணர்வைக் கொடுத்தருள்வன்; ஆதலினால், விளங்கி ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடி நெறியை நாடிக் கடைப்பிடித்து ஒழுகுவீர்களாக.

வி–கு: இறைவன் நஞ்சுண்ட வரலாறு அவன் தம் குற்றம் உணர்ந்து அடைந்தாரைக் காக்குமாறும், உயிர்களுக்கு வரும் கடப்பரும் இன்னல்களை அவன் ஒருவனே கடப்பிக்க வல்லவன் ஆமாறும், அவன் ஒருவனே மாறுபடாத பேரொளி இன்ப வடிவினனா மாறும் உணர்த்துவது என்று உணர்க. 'திருநீல கண்டம்' என அல்லது 'ஓம் நமோ நீலகண்டாய' என எண்ணுவார் எவ்வகை இன்னலையும் நீங்கி உய்வர் என்பது கண்டு கொள்க. (167)

**விளக்கைப் பிளந்து விளக்கினை ஏற்றி**
**விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி**
**விளக்கில் விளக்கை விளக்க வல்லார்க்கு**
**விளக்குடை யான்கழல் மேவலும் ஆமே.** 2815

க–து: இது மெய்யுணர்வு விளங்கி மெய்ப்பொருளைக் காணுமாறும் அதன் பயனும் உணர்த்துகின்றது.

பொ–ரை: ஒருவன் தன் அறிவுக்கு விளக்குப் போன்று உதவும் மாயை காரியங்களைப் பற்றாது நீக்கி, நல்லக விளக்கு ஆகிய திருவைந் தெழுத்தினை உள்ளத்தில் விளங்கச் செய்து, அதன் பொருளைச் சிந்திக்கும் ஆற்றால் அறிவொளியாகிய ஆன்மாவின்கண் மறைந்துள்ள திருவருள் ஒளியை மேம்படச்

செய்து அவ்வுயிர்க்கு உயிராகிய திருவருள் ஒளியை விளங்கச் செய்து கொள்ள வல்லார்க்கு, அத்திருவருளுக்கு முதலாகிய சிவபிரானது திருவடியெனப்படும் பேரின்ப சத்தியை நுகர்தல் கூடும்.

வி–கு: விளக்கு – முதலாவது தத்துவாத்துவிகங்கள்; இரண்டாவது நன்னெறியின் வாசகமாகிய திருவைந்தெழுத்து. அதனை ஏற்றுதல் – அதன் பொருளுணர்ந்து கணித்தல். விளக்கினுக்குள்ளே விளக்கு என்றது அறிவினுள் மறைந்துள்ள திருவருள். அதைத் தூண்டுதல் – அதனைக் கலக்குமாற்றால், அது மறைப்பாற்றலாயிருந்தது அருளொளியாய் மாறி உபகரிக்கச் செய்து கொள்ளுதல். மூன்றாம் அடிக்கண் உள்ள விளக்கில் விளக்கும் அது; அதை விளக்குதலாவது, அதில் அறிவடங்கி நிற்றல்.

விளக்கு உடையான் – தத்துவம். திருவைந்தெழுத்து ஆதிசத்தி, அருளொளி என்னும் ஒளிகளை உடையவன். அவன் கழல் என்றது பேரின்ப சத்தியை. மேவல் – அன்பால் நுகர்தல்.

விளக்குள் விளக்கைத் தூண்டுதல் தவம் எனவும், விளக்கில் விளக்கை விளக்குதல் யான் எனது அற நிற்றல் எனவும் வேறுபாடு கண்டு கொள்க. (168)

**தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு**
**தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை**
**தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்தபின்**
**தத்துவ னங்கே தலைப்படுந் தானே. 2816**

க–து: இது தத்துவஞானம் பெற்றார்க்கு முதல்வனைத் தலைப்படுதல் கூடும் என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வனால் ஆக்கப்பட்ட தத்துவங்கள் உள்ள யாண்டும் இறைவன் அவற்றிற் கலந்தே உளன். அவை இல்லாத இடமும் இல்லை இல்லாத இடமும் இன்று இறைவன் தத்துவ ஞானத்தின் இயல்பை ஒருவர் அறியின், இறைவன் அங்கே வெளிப்பட்டருள்வன்.

வி–க: தத்துவம் என்பது அதன் தன்மை எனப் பொருள் தந்து உண்மை எனவும், தன் தன்மை ஊழிவரை மாறாதுள்ள தத்துவங்கள் எனவும் இரு பொருள்தரும். முப்பத்தாறு தத்துவங் களையும் அவற்றின் தொழிற்பாடு, பயன், தோற்றமுறை, அவை சடப்பொருளாதல் என்பவற்றால் உணர்தல் தன்னை உணர்தற்கு ஏதுவாம்; தன்னை நோக்கி உணர்வார்க்கு முதல்வன் உயிர்க் குயிராய் நின்று தெளிவிக்கும் அறிவாய் விளங்குவன். (169)

**விசும்பொன்று தாங்கிய மெய்ஞ்ஞானத் துள்ளே**
**அசும்பினின் றூறிய தாரமு தாகும்**
**பசும்பொன் திகழும் படர்சடை மீதே**
**குசும்ப மலர்க்கந்தம் கூடிநின் றானே.** 2817

க–து: இறைவன் உண்மை அறிவின்பமாய் நிற்றலும், அவன் திருவுரு உலக உருவாதலும் கூறுகின்றது.

பொ–ரை: யாண்டும் நிறைந்து எவற்றினுக்கும் சார்பா யுள்ள விசும்பு (ஆகாயம்) போன்ற இறைவனிடத்து அவன் குணமாய் அமைவது அவன் தன் அருண்ஞானவொளி; அவ் வொளியினின்று, மணற்கேணியினின்றும் நீர் ஊறுமாறுபோல, மேன் மேலும் பெருகி வருவது சிவானந்த இன்பமாகிய அரிய அமுது. அவன் திருமேனி கொள்ளுங்கால், பசிய பொன்னொளி யினையுடைய படர்ந்த சடை மீது குசும்ப மலர் மணத்தோடு பொருந்தித் திகழும்.

வி–கு: குசும்ப மலர் – செங்கழுநீர் என்ப. படர்சடை ஆகாயத்தினையும், மலர் அதில் தோன்றி மறையும் பிருதிவி முதற் பூதங்களையும் குறிப்பான் உணர்த்தும். (170)

**முத்தின் வயிரத்தின் முந்நீர்ப் பவளத்தின்**
**கொத்தும் பசும்பொன்னின் தூவொளி மாணிக்கம்**
**ஒத்துயர் அண்டத் துள்ளமர் சோதியை**
**எத்தன்மை வேறென்று கூறுசெய் வீரே.** 2818

க–து: இறைவன், குணியும் குணமும்போல எங்கும் பிரிப்பின்றி நிறைந்துளன் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் முத்து, வயிரம், பசும்பொன் கடலில் உண்டாகும் பவளத்தொகுதி, தூய ஒளியுள்ள மாணிக்கம் என்பவையும் அவற்றின் ஒளிகளும் பிரிப்பின்றி உடனாய் நிற்றல் போல, தன் படைப்பாகிய அண்டத்துள் ஒத்து அமர்கின் றான். அப்பேருணர்வுப் பொருளை எவ்வாறு ஒருவன் பிரித்து உணர்தல் கூடும்? கூடாது என்பதாம்.

**நானென்றுந் தானென்றும் நாடினேன் நாடலும்**
**நானென்று தானென் றிரண்டில்லை என்பது**
**நானென்ற ஞான முதல்வனே நல்கினான்**
**நானென்று நானும் நினைப்பொழிந் தேனே.** 2819

க–து: இஃது ஆய்வுநிலைக்கண் என்னின் வேறாக கண்டு அடைந்த முதல்வன், அனுபவ நிலைக்கண் என்னை விழுங்கத் தானேயாய் நின்றனன் எனக் கூறுகின்றது.

பொ–ரை: நூல்களாலும் சற்குரவன் அறிவுறுக்கும் உறுதி மொழியாலும் யான்வேறு முதல்வன் வேறு எனக்

கொண்டு, சாதனங்களில் நின்று முதல்வனை என்அறிவில் தலைப்பட்டு உணர்ந்தபோது, அவனே நான் என்னும் புணர்ப்பு நிலையை, முன்னெல்லாம் நான் என்னும் உணர்வைக் கொடுத்து வந்த முதல்வனே நல்கினான். அங்ஙனம் என்னை வேறு பிரித் துணர்தலின்றி அவன்கண் அடங்கி இன்புறும் நிலையில், நான் என்னும் பகுப்புணர்வைக் கடந்து நின்றேன். (172)

**ஞானத்தின் நன்னெற நாதாந்த நன்னெறி**
**ஞானத்தின் நன்னெறி நானென் றறிவோர்தல்**
**ஞானத்தின் நல்யோக நன்னிலை யேநிற்றல்**
**ஞானத்தின் நன்மோன நாதாந்த வேதமே.** 2820

க–து: இது ஞானநெறியின் இயல்பும் பயனும் உணர்த்து கின்றது.

பொ–ரை: ஞானமெய்ந் நெறியாவது ஒருவனது ஆய்வுணர்வை நாதமாகிய முடிவரை கொண்டு உய்க்க வல்ல நன்னெறி ஆகும்; அதன் இயல்பாவது நான் எனத் தன்னை நோக்கியுணரும் தற்பிரகாசத்தை ஆராய்ந்து செல்வது. அங்ஙனம் சென்று நன்னிலை எனப்படும் திருவருளோடு ஒன்றி நிற்றல் நன் ஞானத்தின் யோகம்.எனப்படும்; அங்ஙனம் ஒன்றி நின்று அந் நெறிக்கண் நன்மோன நிலை நாதாந்தத்தின் கண்ணதாகிய முதற் பொருள் தலைப்பாடு ஆகும்.

வி–கு: நன்மோனம் – உயர்வற உயர்ந்த நன்மையாகிய சிவானந்தம் பயக்கும் மௌன நிலை. மௌனம் – ஞான ஞாதுரு ஞேயப் பகுப்பைக் கடந்து நிற்கும் இன்புறு நிலை. இது சிவபோகம் எனப்படும்.

இப்பாட்டு தத்துவ ஆய்வு, ஆன்ம தரிசனம், சிவ யோகம், சிவபோகம் என்பவற்றைக் குறிப்பான் உணர்த்துதல்

காண்க. கேட்டல், சந்தித்தல், தெளிதல், நிட்டை என்பவற்றை உணர்த்தியது எனினும் ஆம்.

ஞானத்தின் நன்னெறி – ஞானமாகிய சன்மார்க்கம்; சாரியைகள் அல்வழிக்கண் வந்தன.

வேதம் – அறிதற்குக் கருவி என்னும் பொருளது; ஈண்டு ஆகு பெயராய் தலைப்பாடு உணர்த்திற்று.

**உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே**
**உய்யவல் லார்கட் குயிர்சிவ தெய்வமே**
**உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்**
**உய்யவல் லாரறி வுள்ளறி வாமே.** 2821

க–து: இது சிவஞானம் , சிவன் என்னும் தெய்வம், அவனை உணர்த்தும் பிரணவம், அவன் தன்னியல்பாகிய அறி வின்ப வடிவு என்பவையே மெய்யுணர்ந்தார்க்கு உயிர்போற் சிறந்தனவாம் என உணர்த்துகின்றது.

பொ–ரை: பிறவியைக் கடக்கவல்ல மெய்யுணர் வினர்க்கு உயிர்போற் சிறந்தவை சிவஞானமும், அதனை அருளவல்ல சிவன் என்னும் தெய்வ உருவும் ஆகும்; அவர்க்குக் கருவிகளை ஒடுங்கவைக்கும் உயர் மறை பிரணவமாகும்; அவர்தம் அறிவு உள்ளறிவாகிய சிவமே ஆகும்.

வி–கு: அறிவு என்பது நடத்துவது என்னும் பொருளில் வந்தது. (174)

**காணவல் லார்க்கவன் கண்ணின் மணியொக்கும்**
**காணவல் லார்க்குக் கடலின் அமுதொக்கும்**
**பேணவல் லார்க்குப் பிழைப்பிலன் பேர்நந்தி**
**ஆணவல் லார்க்கே அவன்றுணை யாமே.** 2822

க–து: இது ஞானம் அன்பு என்னும் இரண்டும் உடையார்க்கே இறைவன் அருள்புரிவன் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: தொன்றுதொட்டு வரும் மெய்ந்நெறி நின்று அறியவல்லார்க்கு இறைவன் கண்மணி போன்று அறிவிப்போனாகவும் கடலமுது போன்று இன்பங்கொடுத்து மாறா நன்னிலை அருள்வன். அன்பு செய்து தொழுவார்க்கு அவன் அருள்புரிதலின் தவிரான். நந்தி என்னும் பெயர் உடையன். அன்பு செய்வார்க்கு அவன் பிறப்பு வீடு என்னும் இருநிலையினும் பெருந்துணை ஆவன்.

வி–கு: ஆணம் – அன்பு. ஆண – அன்பு செய்ய.

**ஓமெனும் ஓரெழுத் துள்நின்ற ஓசைபோல்**
**மேனின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்**
**சேய்நின்ற செஞ்சுடர் எம்பெரு மானடி**
**ஆய்நின்ற தேவர் அகம்படி யாமே.** 2823

க–து: இஃது இறைவன் திருவடி சேயதாயினும் ஆய்வார்க்கு அணியது என உணர்த்துகின்றது.

பொ–ரை: ஒப்பற்ற மறையாகிய ஓம் என்னும் ஓசையை எல்லோரும் விரும்பி ஏற்றுக் கொள்ளுதல் போல, அதன் விழுப்பொருளாகிய சிவபிரான் மேல் நிலைக்கண் நின்ற தேவர் எல்லாரானும் விரும்பப்படுவன்; எம்பெருமானாகிய அவன்றன் திருவடி தொலைவில் உள்ள ஞாயிற்றைப் போல எல்லாவுயிர்க்கும் பாதுகாவலாய் உள்ளது. அஃது ஆராய்ந்து உணரவல்ல தேவர்க்கு அகத்திற் பொருந்தி உள்ளது ஆகும்.

வி–கு: செஞ்சுடர் – ஞாயிறு. ஆய்நின்ற – ஆய்ந்து நின்ற. அகத்திற் படிந்து நிற்பது அகம்படி எனப்பட்டது. (176)

# 11. சத்திய ஞானானந்தம்

இவ்வதிகாரம் முதற்பொருள் உண்மை அறிவு இன்பம் என்னும் தன்னியல்பு உடையதாதலை விளக்குகின்றது.

**எப்பாழும் பாழும் யாவுமாய் அன்றாகி**
**முப்பாழும் கீழுள முப்பாழு முன்னியே**
**இப்பாழும் இன்னவா றென்ப திலாவின்பத்**
**தற்பரஞா னானந்தந் தானது வாகுமே.** 2824

க–து: இது முதற்பொருளின் தன்னியல்பும் அது சத்தியென நின்று யாவுமாய் அல்லதுமாய் நிற்குமாறும் உணர்த்துகின்றது.

பொ–ரை: தன்முன் முனைந்து நிற்கமாட்டாத எவ்வகைக் காரியங்களும். அவற்றின் காரணமாகிய மாயையும் தானே என்னும்படி கலந்து நின்றும் பொருட்டன்மையால் அவற்றின் வேறாகி மாமாயை மாயை, மூலப்பகுதி என்பவற்றையும் அவற்றின் கீழ் உள்ள மூவகைக் காரியங்களையும், உயிரின்கண் தோன்றி ஒடுங்கும் அவத்தைகளையும் நிகழுமாறு சங்கற்பித்து விருத்தி, பரிணாமம், விவர்த்தம் எனப் பாகுபடுத்த வாராத, உயிர்களுக்கு இன்பந்தரும் இலயபோக அதிகாரம் என்னும் அந்நிலையைக் கடந்துள்ள, அறிவின்ப இயல்பினதே அது எனக் கூறப்படும் முதற்பொருள் ஆகும்.

வி–கு: முப்பாழும் கீழ் உள்ள முப்பாழும் இப்பாழும் முன்னி என மாறுக. இப்பாழ் என்றது ஆன்மாவின் உணர்வு நிலைகளாகிய மூவகை ஐந்தவத்தைகள். இன்னவாறு என்பதிலா இன்பம் என்றது முதற்பொருளின் தடத்த நிலையாகிய இலய போக அதிகார நிலைகள்; தற்பரம் என்றது அத் தடத்த நிலைக்கு அப்பாற்பட்டது என்றபடி.

முன்னுதல் – சங்கற்பித்தல்.

மாயை, மாயேயம் முதலியவற்றைப் பாழ் என்ற தன் தாற்பரியத்தை ''யாவையுஞ் சூனியம் சத்தெதிராகலின் சத்தே அறியாது'' என்னும் மெய்கண்ட மறைகொண்டு உணர்க. (177)

**தொம்பதம் தற்பதம் சொன்ன துரியம்போல்**
**நம்பிய மூன்றாந் துரியத்து நன்றாகும்**
**அம்புவி யுண்ணா அதிசூக்க மப்பர்லைச்**
**செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே.** 2825

க–து: இது சற்குரவனாவான் நின்மல துரியத்துத் தனக்குச் சார்பாய் நிற்கும் திருவருளின் உருவே என உணர்த்து கின்றது.

பொ–ரை: நீ, அது எனப்பிரிந்து தோன்றும் கேவல துரியம் சகல துரியம் என்பவற்றிற் போல, உயர்ந்ததோர் விரும்பும் நின்மல துரியத்தில் நன்மையே ஆக்கும். உலக நுகர்ச் சிக்கு ஏதுவாக நில்லாத மிகு நுண்ணியதும், உயிரின் அறிவைக் கடந்ததுமாகிய செம்பொருள் எனப்படும் திருவருளே, நம்மை ஆட்கொண்டு சிவஞானத்தை அருளும் சிறப்புடைய திருநந்தி எனப்படும் அருட்குரவன் ஆகும்.

வி–கு: கேவல துரியத்தும், சகல துரியத்தும் புறவுலகிற் செல்லுதல் இல்லை; அதுபோல நின்மல துரியத்து புறஞ் செல்லல் இன்று என்க. முன்னையவற்றில் பிரகிருதி குணங்களை நுகர்தல் உண்டு. மூன்றாந் துரியத்து உலக நுகர்ச்சி இன்று என்க. (178)

**மன்னும்சத் தியாதி மணியொளி மாசோபை**
**அன்னதோ டொப்பம் இடலொன்றா மாறது**

**இன்னிய உற்பலம் ஒண்சீர் நிறமணம்**
**பன்னிய சோபை பகர் ஆறு மானதே. 2826**

க–து: இது சிவமும் சத்தியும் குண குணிகள் போன்று தாதான்மியத்தான் இருமை தோன்ற நிற்கும் ஒரு பொருள் என்றும் சத்தியை ஐந்தாகக் கொள்ளும்போது பொருள் ஆறு எனவும் படும் என்றும் உணர்த்துகின்றது.

பொ–ரை: நிலைபெற்ற சத்தியோடு கூடிய முதற் பொருள், மணியும் ஒளியாகிய சோபையும் என்பதனோடு ஒப்பிட்டுக் கூறுவதற்கு இயைந்த ஒரு பொருளாம் தன்மையை யுடையன். அவ்வொரு பொருள் கண்ணிற்கினிய கருங்குவளை, அதன்ஒளி சிறப்பு, நிறம், மணம், கூறப்படும் விளக்கம் என்றாற் போல, சிவம், பரை, ஆதி, அறிவு, விழைவு, செயல் என்னும் ஆறு ஆகவும் உள்ளது.

வி–கு: ஆதி – முதற்பொருள் என்னும் பொருள் தந்து நின்றது. (179)

**சத்தி சிவன்பர ஞானமும் சாற்றுங்கால்**
**உய்த்த அனந்தம் சிவமுயர் ஆனந்தம்**
**வைத்த சொரூபத்த சத்தி வருகுரு**
**உய்த்த உடலிவை உற்பலம் போலுமே. 2827**

க–து: இது முதற்பொருள் சத்தி சிவம் எனக் கருதப்படுமாற்றைத் தெரித்து உணர்த்துகின்றது.

பொ–ரை: சத்தி சிவம் என்பவற்றை வேறுபாடு விளங்கக் கூறும்போது, சத்தியாவது சிவனைக் காட்டும் மேலான உண்மை ஞானமாகும். அதனைத் தன் கரணமாகச் செலுத்திய

முடிவில்லாத பெருநிலையே சிவமாவது; அஃது உயர் ஆனந்தமே வடிவானது. அச்சிவத்தின் சொரூபம் என வைக்கப்பெற்ற சத்தியே தவமுதிர்ச்சிக்கண் சிவத்தையுணர்த்த வெளிப்பட்டு வரும் சற்குரவனும் ஆகும்; மேலும், முத்தி நிலைக்கண் உயிர்க்கு உடல் போன்று நின்று உபகரிப்பதும் அதுவே. சத்தி சிவம் என்னும் இவை தன் நிறம் வண்ணம் முதலியவற்றின் வேறாகாத நீலோற்பலம் போல் வைத்து உணரப்படும்.

வி–கு: வைத்த சொரூபத்த சத்தி – சிவத்தின் சொரூபமாக வைத்து எண்ணப்படும் சத்தி. ''ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம'' என்பது தைத்திரீயத் தொடர். (180)

**உருவுற் பலநிற மொண்மணஞ் சோபை**
**தரநிற்ப போலுயிர் தற்பரந் தன்னின்**
**மருவச் சிவமென்ற மாமுப் பதத்தின்**
**சொரூபத்தன் சத்தியா தோன்றநின் றானே.** 2828

க–து: இது பரமுத்தி நிலையில் உயிர் தான் சிவம் எனவே உணர்ந்து நிற்றற்குக் காரணங் கூறுகின்றது.

பொ–ரை: அழகிய கழுநீர்மலர் தன் நிறம் மணம் அழகு என்பவை தன் கண் அடங்கக் கொண்டு நிற்பதுபோல, உயிர் ஞானயோக சாதனையால் தனக்கு மேலாய முதற்பொருளைச் சார்ந்து அடங்கி நிற்ப சிவம் என்று உயர்த்துக் கூறப்படும், சிறந்த முப்பதம் எனப்படும் மாவாக்கிய வடிவில் நிற்போனது சத்தியாகவே விளங்க நின்றான்.

வி–கு: உயிர் மருவுதலால் சத்தியாக்த் தோன்ற நின்றான் என முடிக்க. நின்றான் என உயிரை ஆடூஉ அறிசொல்லாற் கூறியது வடமொழி மதம். சத்தியாத் தோன்றல் – சிவன்றன் சத்தி

எனப்படும் எண்குணங்களும் தன்கண் தோன்றச் சிவமாயே விளங்குதல். முப்பதம் – சிவாய அல்லது சிவத்துவ மஸி என்னும் ஒரு வார்த்தை; முதல்வன் உயிரையும் திருவருளையும் தன்கண் அடங்கக் கொண்டு சிறத்தலின் மாமுப்பதத்தின் சொரூபத்தன் என்றார்.

சத்தியா என்றதனை சத்தியமா என்பதன் திரிபாகக் கொண்டு சத்தியமாத் தோன்ற நின்றான் எனினும் அமையும்; இப்பொருட்குச் சொரூபத்தன் இயல்பாகிய சத்தியமாக என முன் சொல்லோடு இயைக்க. (181)

**நினையும் அளவின் நெகிழ வணங்கிப்**
**புனையில். அவனைப் பொதியலு மாகும்**
**எனையுமெங் கோனேந்தி தன்னருள் கூட்டி**
**நினையும் அளவில் நினைப்பித் தனனே. 2829**

க–து: இது சிவத்தை மருவிய முத்தர்க்கு அவன்றன் அருட்குணங்களைச் சொற்செய்து வைத்தலும் கைகூடும் என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: மேற்கூறியபடி சிவத்தைச் சார்ந்தோர், சிவமயமாகிய தம் மனத்தால் நினையும் அவ்வெல்லையில் அவனை நினைந்துஅன்பால் தொழுதிறைஞ்சி, தாம் புனையும் அருட்செம்பாக்களில் அவன் தன் பொருள்சேர் புகழைஅமைத்து வைத்தலும்அவன் அருளால் ஆகும். எம் முதல்வன் திருநந்தி திருவருள் செய்த அடியேனையும் அம் முதல்வனை மனத்தால் நினைந்து வழிபடும் அளவில் நினைப்பித்து இந்நூலை இயற்றும்படி செய்தான்.

வி–கு: நினையும் அளவில் என்றது நினைக்க வராத முதல்வனை நினைக்கும் அளவில் வரக்கண்டு என்றபடி. புனை

– புனையப்படும் சொன்மாலை. பொதிதல் – அதன்கண் அவனியல்பு அடக்குதல். (182)

**பாலொடு தேனும் பழத்துள் இரதமும்**
**வாலிய பேரமு தாகு மதுரமும்**
**போலுந் துரியம் பொடிபட வுள்புக**
**சீல மயிர்க்கால் தொறுந்தேக் கிடுமே.** 2830

க–து: இது துரிய அருள் நிலைக்கண் நிகழும் மெய்ப்பாடு கூறுகின்றது.

பொ–ரை: துரிய அருள்நிலைக்கண் சிவபிரான் தன்னை நினைப்பித்து உள்புகுதலான்; பாலோடு கலந்த தேனின் இனிமையும், பழத்தின் இன்சுவையும் தூய அமுதின் இன்சுவையும், கண்ணீரரும்பவும், உடலம் புளகங்கொள்ளவும் உள் நிறைந்து பொழிந்தெழுந்தாற்போல், மயிர்க்கால்தோறும் இனிமை தோன்றும்.

வி–கு: பொடிபடல் – உடலம் புளகங் கொளல்; கண்ணீர் அரும்பலும் ஆம். துரியம் உள்புக – துரிய நிலைக்கண் இறைவன் சிந்திதனாய் அகம்புகுந்து இனிக்க. (183)

**அமரத் துவங்கடந் தண்டங் கடந்து**
**தமரத்து நின்ற தனிமையன் ஈசன்**
**பவளத்து முத்தும் பனிமொழி மாதர்**
**துவளற்ற சோதி தொடர்ந்துநின் றானே.** 2831

க–து: அசிந்திதனாகிய முதல்வன் சிந்திதனாய் வருமாறு கூறுவது இது.

பொ–ரை: அமரர் நிலையினையும் அண்டங்களின் இயல்பையும் கடந்து நாத தத்துவத்தில் நின்ற தனிநிலை உடையவன் முதல்வன்; குறைவற்ற சோதியாகிய அவன் பவளம் போன்ற வாயினையும் முத்துப் போன்ற பற்களையும் குளிர்ச்சி பொருந்திய மொழியையுமுடைய மாதராளாகிய உமையம்மை யுடன் கலந்து நின்றான்.

வி–கு: தமரம் – ஊசை, நாதம். (184)

**மத்திமம் ஆறாறு மாற்றி மலநீக்கிச்**
**சுத்தம தாகுந் துரியத் துரிசற்றுப்**
**பெத்த மறச்சிவ மாகிப் பிறழ்வுற்றுச்**
**சத்தியஞா னானந்தஞ் சார்ந்தனன் ஞானியே. 2832**

க–து: இது நிட்டையின் இயல்பு கூறுகின்றது.

பொ–ரை: மலத்தான் உளதாகும் கேவல அவத்தை வாராமற் காத்து முப்பத்தாறு கருவிகளான் வரும் இடைநிலை யாகிய சகல நிலையினையும் கடந்து சுத்த நிலைக்கண் திருவரு ளோடு ஒன்றி நிற்றலாகிய குற்றமும் நீங்கி, பிறப்பு நிலை நீங்கும் படி சிவமேயாய் விளங்கிச் சத்திய ஞானானந்த சொரூப நிலையைத் தலைப்பட்டவன் ஞானி எனப்படுவன்.

வி–கு: மலம் நீக்கி ஆறாறு மத்திமம் மாற்றி என மாறுக. பிறழ்வுற்று விளங்கி சார்ந்தனன் ஞானி என ஞானியின் செய லாகக் கூறினும், சார்வோனே ஞானி என்பது கருத்தாகக் கொள்க. இது துரியாதீத ஆனந்த நிலை. துரியத்தின் இன்ப ஒளி தோன்றுத லன்றிப் பேரின்ப அநுபவம் உளதாகாமையின், அது நோக்கிஅதனைத் துரியத் துரிசு என்றார். துரிசு -- குற்றம்.
(185)

**சிவமாய் அவமான மும்மலந் தீர**
**பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்**
**தவமான சத்திய ஞானானந் தத்தே**
**துவமார் துரியஞ் சொரூபம தாமே.** 2833

க–து: இது துரிய அருள்நிலை நிற்கவே, திருவருளால் தன் முயற்சியின்றி, அதீத ஆனந்தநிலை கைகூடும் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: பிறவிக்குக் காரணமான பிராகிருதம், மாயேயம், வைந்தவம் என்னு முப்பாழ்ப் பற்று அறும்படி திருவருளைச் சார்பாகக் கொள்ள இருமை தோன்ற நிற்கும் அத்துரிய அருள்நிலையே சிவமாய் அவத்தில் உய்க்கும். மும்மல வாதனை தீரும்படி உண்மை அறிவின்பத்தே நிற்ற லாகிய தன்னியல்பு நிலையாக மாறி நிற்கும்.

வி–கு: சிவமாய் மும்மல வாதனை தீரும்படி சொரூபமது ஆம் எனக்கூட்டுக. தவமான – தவ முதிர்ச்சியால் ஆதற்கு உரிய, முப்பாழை என்புழி ஐ சாரியை. பற்றுதற்குச் செயப்படுபொருள் அவாய் நிலையான் வருவிக்கப்பட்டது. சொரூபம் – தன் இயல்பு. துவம் – இருமை; அஃதாவது, ஞாதுரு ஞான ஞேயப் பகுப்பு; அப்பகுப்பு இலது அதீத நிலை. துரியம் சொரூபமது ஆக்கும் என்க. ஆம் என்றது ஆக்கும் எனப் பிறவினைப் பொருள் பயந்து நின்றது.

## 12. சொரூப உதயம்

இவ்வதிகாரம் அணைந்தோர் உலகமுகப்படும் போது யாங்கணும் சிவசொரூப விளக்கத்தைக் காணுமாறு உணர்த்து கின்றது.

**பரம குரவன் பரமெங்கு மாகித்**
**திரமுற எங்கணுஞ் சேர்ந்தொழி வற்று**
**நிரவு சொரூபத்துள் நீடுஞ் சொரூபம்**
**அரிய துரியது தணைந்துநின் றானே.** 2834

க–து: இது பரமகுரவனைச் சிவம் எனத் தெளிந்து வழிபடுமாறு கூறுகின்றது.

பொ–ரை: மேலான ஞான குரவன் எங்கும் உள்ள பரம் எனப்படும் திருவருளேயாகி, உயிர்கள் உறுதி கூடும்படி யாங்கணும் ஒழிவற நிறைந்து, அதுவதுவேயாய் நிற்கும் ஆன்ம சொரூபத்தில் என்றும் நீங்காத சொரூபம் உடையனாய், எய்துதற் கரிய துரிய நிலைக்கண் உயிர்க்குத் துணையாக அணைந்து நின்றான்.

வி–கு: நிரவுதல் – அதுவதுவே யாதல், சொரூபம் – சிறப்பியல்பு (தன்னியல்பு). (187)

**குலைக்கின்ற நீரிற் குவலய நீரும்**
**அலைக்கின்ற காற்றும் அனலொடா காசம்**
**நிலத்திடை வானிடை நீண்டகன் றானை**
**வரைத்து வலஞ்செயு மாறறி யேனே.** 2835

க–து: இது முதல்வன் எங்கும் உளன் என்பது உணர்த்து கின்றது.

பொ–ரை: முதல்வன், தம்மையும் பிறவற்றையும் அழிக்கும் தன்மையுடைய மண்ணும், நீரும், இயங்கும் காற்றும், அனலும், ஆகாசமும் ஆகி, நிலனும் வானும் ஆகிய இடங்களில் நீண்டும் அகன்றும் நிறைந்தவன்; அவனை அங்ஙனம் உணர்ந்து

உருகி நிற்றலன்றி வரையறை செய்து வலஞ்செய்து, வழிபடு மாற்றை யான் அறியேன் குவலயம் – மண். (188)

**அங்குநின் றானயன் மால்முதல் தேவர்கள்**
**எங்குநின் றாரும் இறைவனென் றேத்துவர்**
**தங்கிநின் றான்றனி நாயகன் எம்மிறை**
**பொங்கிநின் றான்புவ னாபதி தானே.** 2836

க–து: இஃது இறைவன் உயிர்கள் வழிபட்டு உய்யுமாறு அவை நினைந்த உருவில் நிற்குமாறு கூறுகின்றது.

பொ–ரை: புவனங்களைக் காக்கும் முதல்வன் உயிர்கள் அன்பு செய்து ஏத்தும் இடங்களில் விளங்கி நிற்பன்; அதனால் அயன் முதல் தேவர்களும், மற்று எங்குள்ளாரும் அவனை விளங்கக் கண்டு தொழுவர். தனி நாயகனாகிய அவனும் தொழும் இடங்களில் மேம்பட்டு விளங்கியருள்வன்.

வி–கு: அங்கு – பண்டறி சுட்டு; அன்பால் நினைந்த விடத்து நினைந்த உருவில் என்றபடி. (189)

**சமையச் சுவடும் தனையறி யாமற்**
**கமையற்ற காமாதி காரணம் எட்டும்**
**திமிரச் செயலும் தெளிவுட னின்றோர்**
**அமரர்க் கதிபதி யாகிநிற் பாரே.** 2837

க–து: இது சிவமாய் நிற்போருக்கு ஆகாத குற்றங்களை வகுத்துக் கூறுகின்றது.

பொ–ரை: பொதுப்பட ஒழுகாமல் சமையத்திற்கு ஏற்ப நடத்தலும், தன் இயல்பு உணரவொட்டாத பரபரப்பும், காமம்

முதலாகக் கூறப்படும் பிறவிக்குக் காரணமான விகாரங்கள் எட்டும், இருள் மலத்தின் செயலாகிய யான் எனது என்னும் செருக்கும் கெடும்படி ஞானத்தெளிவுடன் திருவருள் வழி நின்றவர்கள் வானவர்க்கு முதல்வனாகிய சிவனோடு ஒப்பர்.

வி–க: சமையச் சுட்டு என்றது சமையஞ் சுட்டி நெறி யல்லதன் கண் செல்லுதலைக் குறித்தது. தனையறியாமற் கமையற்ற என அடையாகக் கூறினும், தனை அறியாமையும் கமை (பொறுமை) அறுதலும் குற்றங்களுள் வைத்து எண்ணப் படுதல் ஆசிரியர் கருத்தென்க. காமாதி காரணம் எட்டு – காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பை, அசூயை என்பவை; இவை விகாரம் எட்டு என வழங்கப்படும். இவற்றை, காமம், செற்றம், இவறன்மை, மயக்கம், தன்னை மதித்தல், அழுக்காறு, துன்புறுதல், புறங்கூறல் என மொழி பெயர்த்துக் கொள்ளல் ஆம். திமிரம் – இருள். மூலமலம், கெடும்படி என ஒருசொல் வருவிக்க. ஆகிநிற்பார் என்பதில் ஆகி என்பது உவமவுருபு. (190)

**மூவகைத் தெய்வத் தொருவன் முதலுரு**
**வாயது வேறா மதுபோல் அணுப்பரன்**
**சேய சிவமுத் துரியத்துச் சீர்பெற**
**ஏயும் நெறியென் றிறைநூ லியம்புமே. 2838**

க–து: இது சிவசாமியம் பெற்ற ஆன்மா சிவமாகக் கருதப்படுவதன்றி ஏனைச் சீவர்களுள் ஒன்றாக வைத்துக் கருதப் படாமை வேதாகம வழக்கு என்று உணர்த்துகின்றது.

பொ–ரை: அயன், அரி, அரன் என்னும் முத்தொழிற்கு உரிய முத் தெய்வங்களுள், ஒருவன் என்றோதப்படும் அரன், ஏனை இருவரையும் தன்கண் தோற்றுவிக்கும் முதல் உருவின

னாதல் அவனிடத்துள்ள சிறபபியல்பு பற்றியே ஆகும்; அது போல, சீவன் என்னும் பெயர் நீங்கிச் சிவன் என நிற்கும் அணு வாகிய பரன் (முத்தான்மா) உயிரினத்தின்பால் வைக்கப்படினும் பெத்தான்மாக்களின் வேறாதல் கேவல துரியம், சகல துரியம், சுத்த துரியம் என்னும் மூன்றனுள், சேய்மைக்கண் உள்ள சிவ துரியத்து அவன் சிறப்புப் பெறும்படி பொருந்திய நெறியால் என இறைவனூல் எனப்படும் வேதாகமங்கள் முழங்கும்.

வி–கு: வேறாதல் என்னும் பொதுத்தன்மையைப் பொருளினும் கூட்டி உரைக்க.

சேய சிவ முத்துரியத்து, முத்துரியத்துச்சேய சிவ துரியத்து என. துரியத்து என்பது முன்னருஞ் சென்று இயையும். சிவம் என்பது சுத்தம் என்னும் பொருள் பயந்து நின்றது.

சீர் – சிறப்பு, வீடு.

அரனை மூவருள் ஏனை இருவரோடு ஒப்பவைத்துக் கருதுதல் பாவச் செயல் என்பதைப் பின்வரும் திருவாசகத்தான் உணர்க.

***சாவமுன் னாட்டக்கன் வேள்வித்***
***தகர்தின்று நஞ்சமஞ்சி***
***ஆவவெந் தாயென் றவிதா***
***விடுநம் மவரவரே***
***மூவரென் றேயெம் பிரானொடும்***
***எண்ணிவிண் ணாண்டு மண்மேல்***
***தேவரென் றேயிறு மாந்தென்ன***
***பாவந் திரிதவரே.***

அயன், அரி முதலாய தேவர்கள் தாம் சாவ நேரும்படி தக்கன் வேள்வித் தகர்தின்று, நஞ்சம் அஞ்சி, ஆ! ஆ! எந்தாய்! என்று முறையிட்ட நம்மவர் (உயிர் வருக்கத் துட்பட்டோர்);

அவரையே மூவர் என்றல் பற்றிச் சிவபிரானொடும் ஒப்ப வைத்து எண்ணிச் சிலர், விண்ணாளக் கருதித் தம்மை மண்மேல் தேவர் (பூசுரர்) என்று கூறி இறுமாந்து மிகுபாவஞ் செய்து திரிதருவர் எனப் பொருள் உரைக்க.

ஆண்டு – ஆளக்கருதி. திரிதருர் என்பது திரிதவர் என வந்தது. எண்ணி, ஆண்டு, இறுமாந்து திரி தருவர்! என்ன பாவம்!! எனினும் அமையும்.

**உருவன்றி யேநின் றுருவம் புணர்க்கும்**
**கருவன்றி யேநின்று தான்கரு வாகும்**
**மருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்**
**குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே.** 2839

க–து: இது முதல்வனைத் தலைப்பட்டு உணர்தல் அவன் குருவாய் வந்து ஆட்கொண்டாலன்றிக் கூடாது என்று உணர்த்து கின்றது.

பொ–ரை: இறைவன் மாயை காரிய உருவைக் கொள்ளாமல் நின்றே உயிர்களுக்கு மாயை காரிய உருவங் களைச் சேர்ப்பவன்; தனக்கு ஓர் காரணமின்றியே எல்லாப் பொருள்களுக்கும் பரம ஆதார நிமித்த காரணமாய் உள்ளவன்; பிற பொருள்களின் விகாரங்கள் தன்னைப் பொருந்துதல் இன்றியே, அவை யெல்லாமாய் உடனாகி நிற்கும் வியத்தகும் இயல்பினன்; இத்தகைய முதல்வனை அவன் திருவருள் உருவாகிய குருவருள் இன்றித் தலைப்படுதல் ஒருவர்க்கும் இயலாது.

**கருவினா லன்றியே கருவெலா மாயவன்**
**உருவினா லன்றியே யுருவுசெய் தானிடம்**

**பருவநாள் விழவொடும் பாடலோ டாடலும்**
**திருவினால் மிகுபுகழ்த் தென்குடித் திட்டையே.**

என்னும் ஆளுடைய பிள்ளையார் அருண்மொழியை ஒப்பிட்டுக் காண்க. (192)

**உருவ நினைப்பவர்க் குள்ளூறுஞ் சோதி**
**உருவ நினைப்பவர் ஊழியுங் காண்பர்**
**உருவ நினைப்பவர் உம்பரும் ஆவர்**
**உருவ நினைப்பார் உலகத்தில் யாரே. 2840**

க—து: இறைவன் திருவருள் உருவை நினைந்து வழிபடுவதன் பயன் உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ—ரை: இறைவன் மெய்யன்பர்கட்குக் காட்டி அருளிய திருவுருவத்தை உளங்கொண்டு நினைந்து வழிபடுவோர்க்கு மெய்யுணர்வாகியஅகவொளி வெளிப்படும்; அவர் ஊழிகளின் இயல்பை உணரும் ஆற்றல் பெறுவர்; மற்றுந் தேவரும் ஆவர். ஆயின், அவன் திருவுருவை உண்மையான் உணர்ந்து வழிபடுவோர் உலகில் அரியராகவே உளர். (193)

**பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றாப்**
**பரஞ்சோதி என்னுட் படிந்ததற் பின்னைப்**
**பரஞ்சோதி யுண்ணான் படியப் படியப்**
**பரஞ்சோதி தன்னைப் பறையக்கண் டேனே. 2841**

க—து: இது முதல்வனை உணர்ந்து நிற்குமாறும் அதன் பயனும் உணர்த்துகின்றது.

பொ—ரை: மேலான அறிவொளியாக விளங்கும் இறைவனை அடியேன் பற்றாகக் கொண்டேன்; அவனும் என்

உள்ளத்தில் பதிந்து நின்றான்; பின், அவன் அருள் ஒளியில் யான் அறிவடங்கி நின்றேன். கற்றுணர்ந்து அடங்கலாகிய இந்நிலை முதிர முதிர, பரம்பொருளாகிய அவன் தன்னியல்பை வெளிப் பட உணர்த்தியருளினன்.

வி–கு: பறைதல் – கிளந்து உரைத்தல். (194)

**சொரூபம் உருவம் குணந்தொல் விழுங்கி**
**அரியன உற்பலம் ஆமாறு போல**
**மருவிய சத்தியாதி நான்கு மதித்த**
**சொரூபக் குரவன் சுகோதயத் தானே. 2842**

க–து: இது பரம்பொருளே சற்குரவன் ஆவன் என்பதை உவமை முகத்தான் உணர்த்துகின்றது.

பொ–ரை: பிரித்தற்கு அரியனவாகிய, இயல்பாக உள்ள தன்னியல்பும், நிறமும் மணமாகிய குணமும் என்பவற்றை உட்கொண்டு கழுநீர்மலர் விளங்குதல் போல, பொருந்திய சத்தியம் முதலிய நான்கு இயல்பும் அடங்கியுள்ளன எனக் கருதிய வடிவுள்ள சற்குரவனே உயிர்க்குப் பேரின்பத்தைத் தோற்றுவிக்க வல்லவன் ஆவன்.

வி–கு: அரியன தொல் சொரூபம் உருவம் குணம் விழுங்கி உற்பலம் ஆமாறுபோல எனக் கூட்டியுரைக்க. சத்திய மாதி நான்கு என்பது ஈறு குறைந்து நின்றது; நான்காவன, சத்தியம், ஞானம், அநந்தம், ஆனந்தம் என்பவை. சத்தியாதி எனவே கொண்டு அருள், உண்மை, அறிவு, இன்பம் எனினும் அமையும்.

அரியன, தொல் என்னும் உவமை அடைகளைப் பொருளுக்குங் கூட்டி, காண்டற்கு அரியனவாகிய அநாதியே

யுள்ள சத்தியமாதி நான்கு என உரைத்துக் கொள்க. சொரூபம் – வடிவு. உருவம் – நிறம். குணம் – மணம், மென்மை (இனிமை). (195)

**உரையற்ற ஆனந்த மோன சொரூபத்தன்**
**கரையற்ற சத்தியாதி காணில் அகார**
**மருவுற் றுகார மகாரம தாக**
**உரையற்ற தாரத்தில் உள்ளொளி யாமே. 2843**

க–து: இது உரையிறந்த முதற்பொருளை, அவன்றன் ஆதிசத்தியின் வைத்து உணருமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: உரையைக் கடந்த மோன நிலையின் ஆனந்த இயல்பினனாக நுகரப்படும் முதல்வனை, பெத்த நிலைக்கண் அவன்றன் எல்லையற்ற ஆதிசத்தியின் வைத்துக் காணலுறின், அகார உகார மகாரமாக மருவுற்று உரைத்தல் இல்லாத தாரம் (பிரணவம்) எனப்படும் நாதவிந்து (உ) சேர்க்கையின் உள் ளொளியாக உறைவன்.

வி–கு: நான்காம் அடியில் உறையற்ற என்பதில் உரை முதனிலைத் தொழிற்பெயர். தாரம் – பிரணவம். நாத விந்துக் களின் சேர்க்கையே பிள்ளையார் சுழியும் சிவலிங்கமும் ஆதல் உணர்ந்து கொள்க. சுத்த வித்தையில் உள்ள அயன் அரி அரன் என்போர் அகர கலை முதலியவற்றால் அகங்கார முதலிய மூன்றனையும் செலுத்துமாறும், ஈசன், சதாசிவன் என்போர் விந்து, நாத கலைகள் மூலம் சித்தத்தையும் புருடனையும் செலுத்துமாறும் மேல் உணர்த்தப்பட்டது. இவர்தம் உள்ளொளியே பரம் பொருள் என்பது. மோன ஆனந்த சொரூபத்தன் என மாறி உரைக்க. சொரூபத்தன் – இயல்பினன். சத்தி ஆதி – ஆதியாகிய சத்தி. (196)

**தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து**
**முலைநின்ற மாதறி மூர்த்தியை யானும்**
**புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து**
**கலைநின்ற கள்வனிற் கண்டுகொண் டேனே. 2844**

க–து: இது முதல்வனது உண்மையறிவின்பப் பிழம்பாம் இயல்பை ஆசிரியர் ஞான குரவன் அருளால் தலைப்பட்டு உணர்ந்தமையைக் கூறுகின்றது.

பொ–ரை: பரதக் கண்டத்தின் தலையாக நின்ற இமையத் தாழ்வரையில் கன்னியாகிய உமையம்மை தவம் செய்து கண்ட முதல்வன் வடிவை, அடியேனும், கலைகளின் பயனாய் நின்ற, தன் உண்மை உருவை மறைத்து வந்த கள்வனாகிய சற்குருவின் அருளால் கண்டு கொண்டு ஊன் உடம்போடு பொருந்தும் இன்பந்தராத பிறவியைக் கடந்தேன்.

வி–கு: இங்கு உரைத்தமை பற்றி சொற்கள் இயையுமாறு உய்த்துணர்க. (197)

**ஆமா றறிந்தேன் அகத்தின் அரும்பொருள்**
**போமா றறிந்தேன் புகுமாறும் ஈதென்றே**
**ஏமாப்ப தில்லை இனியோ ரிடமில்லை**
**நாமா முதல்வனும் நனென லாமே. 2845**

க–து: இதுவும் அது.

பொ–ரை: சற்குருவின் திருவருளால் புறப் பொருள்களில் அழுந்தி அவையேயாய் நின்ற யான், உயிர்க்குயிராய் நின்ற வேறு காண்டற்கரிய பொருளாகிய சிவத்தில் அழுந்திச் சிவம் ஆமாறு அறிந்தேன்; அந்நிலை கைகூடுவதற்கு அருள்

வழிப் போமாறு இது வென்றும், பின் சிவத்தில் அறிவடங்கிப் புகுமாறு இதுவென்றும் அறிந்தேன். இனி, புறப் பொருள்களைப் பற்றி இன்புறுவதில்லை; சிவத்தை அன்றிச் சார்வதொரு பொருள் வேறில்லை; இந்நிலைக்கண் நாம் என்பதை விழுங்கித் தானே யாகும் முதல்வனை, அத்திருவருள் உரிமை பற்றி நான் எனலும் ஆகும்.

வி—கு:

***நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்***
***தன்செயல் தானேயென் றுந்தீபற***
***தன்னையே தந்தானென் றுந்தீ பற.***

என்னும் திருவுந்தியைப் புடைபட வைத்துக் காண்க. (198)

## 13. ஊழ்

ஊழாவது ஒருவன் செய்த வினை பக்குவப்படும் போது அவனையே சென்று அடைந்து தன் பயனை அவன் அறிவின் கண் விளைக்கும் நியதி. வினை செய்யப்படும்போது ஏறுவினை யென்றும், பின் அருவாய்ச் செய்தவன் புத்தியில் தங்கி நிற்கும் போது கிடைவினை என்றும், ஏனைத் துணைக்காரணங்களோடு கூடித் தன் பயன் விளைக்க வரு நிலையில் வருவினை என்றும் குறிக்கப்படும். இவற்றை முறையே ஆகாமியம், சஞ்சிதம், பிரா ரத்தம் என வழங்குவர். இவற்றுள் சிவஞானிகளுக்குக் கிடை வினை அறுவழிச் சோதனையான் அழிந்துபடும்; வருவினை உடல் முகந்ததாகலின், அஃது உள்ளவரை உடம்பும் உளதாகும். சிவஞானிகள் சிவமாய் நிற்றலால் அவ்வினை உடலூழாய்க் கழியும்; தன் முனைப்போடு அதனை அவர் நுகர்தலின்மையின் ஏறுவினையும் இன்றாம். இங்ஙனம் வருவினை நுகர்ச்சியும் அது பற்றி ஏறுவினையும் இல்லையாமாறு சிவஞானிகள் நிற்கு மாற்றைக் கூறுவதே இவ்வதிகாரம்.

*மும்மை தரும்வினைகள் மூளாவாம் மூதறிவார்க்(கு)*
*அம்மையும் இம்மையே யாம்*

*ஏன்ற வினையுடலோ டேகுமிடை ஏறும்வினை*
*தோன்றில் அருளே சுடும்*

என்னுந் திருவருட்பயன் குறட்பாக்கள் சிந்திக்கத்தக்கவை.

**செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்**
**மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென்**
**வித்தகன் நந்தி விதிவழி யல்லது**
**தத்துவ ஞானிகள் தன்மைகுன் றாரே. 2846**

க–து: இது மெய்யுணர்ந்தோர் இறைவனுக்கு உடல் பொருள் ஆவி மூன்றையும் கொடுத்து அவன் அருள்வழி நிற்போர் ஆதலின், உடலுக்கு பிறர் செய்யும் நன்மை தீமைகளால் தம் தன்மை திரியார் என உணர்த்துகின்றது. இவ்வதிகாரம் முழுவதும் இதனை உய்த்துக் கொள்க.

பொ–ரை: சதுரப்பாடு உடைய திருநந்தியின் அருள் வழி நிற்பதல்லது, மெய்யுணர்ந்தோர் தம் தன்மையில் குறைதல் இலர். ஆதலால், அவர் தம் பூதவுடலைப் பிறர் நெருக்கியும் செதுக்கியும் துன்புறுத்தினும், சந்தனக்கலவை பூசி இன்புறுத்தினும், தலை யில் உளியை நாட்டிப் பிளப்பினும் அவற்றைப் பொருட் படுத்தார்.

வினைப்பயனும் முதல்வன் அருள்வழி வரும் என்பது அவர்தம் துணிபு. (199)

**தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்**
**வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை**

**கோன்முன்னம் சென்னி குறிவழி யேசென்று**
**நான்முன்னஞ் செய்ததே நன்னில மானரே.** 2847

க–து: இஃது ஊழின் இயல்பு உணர்த்துகின்றது.

பொ–ரை: ஓர் உயிர் முன் செய்த தன் பயனை இறைவன் விதித்த வழியில் தானே நுகர்வதன்றி வெறு வெளியில் முன்னரே பிறர் ஒருவர் செய்து வைத்ததாகிய பொருளின் சேர்க்கை யில்லை. இறைவன் யான் செய்த வினைக்கீடாக என் தலையில் விதித்த விதி வழியே சென்று, யான் என்னும் முனைப்புடன் யான் செய்த வினையே நன்னிலத்தில் ஊன்றிய விதை விளையுமாறு போல விளைவைத் தருவதாயிற்று.

வி–கு: ஆனது – போன்றது. குறிவழி செல்லுதல். மற்றுந் துணைக்காரணங்களுடன் கூடிப் பக்குவப்படுதல். (200)

**ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே**
**கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை**
**நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்**
**பேறிட்டென் னுள்ளம் பிரியகி லாவே.** 2848

க–து: இதுவும் அது.

பொ–ரை: ஆற்றுவெள்ளம் செய்த மேடுபள்ளமாகிய நுண்ணிய மணலை அவ் ஆறே சுமந்து பின்வரும் நீர்த்தேக்கத் திற்கு எல்லையாகக் கொள்ளும். அம்மேடு பள்ளங்களைப் பிறர் பகிர்ந்து சுமந்து அதனால் பயன் எய்துவதில்லை. அது போன்று ஒருவர் முன் செய்த நல்வினை தீவினைகள் அருவாய் அவர் புத்தியின்கண் கிடந்து பின் அவர் அறிவு இன்பத் துன்பங்களை நுகர்வதற்குக் காரணமாய் நிற்கும். இங்ஙனமாகலின் வினையின்

நின்று நீங்குதற்பொருட்டு என் உள்ளம் திருநீறு அணிந்த திருமேனியையுடைய சிவன் திருவுருவையே பேறாகக் கொண்டு அவனைப் பிரியாது நிற்கும். (201)

**வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்**
**கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென்**
**தானொன்றி மாருதஞ் சண்டம் அடிக்கிலென்**
**நானொன்றி நாதனை நாடுவேன் நானே. 2849**

க–து: இது மெய்யுணர்ந்தோர் உலக உற்பாதங்களைக் கருதாது யான் என்னும் செருக்கின்றி சிவம் ஒன்றையே உணர்ந்து ஒன்றி நிற்பர் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: வானத்தில் நின்று இடி முழங்கினும் பெரிய கடல் நிலத்தின் மேல் பொங்கிவரினும், காற்றோடு கலந்த நின்ற மிக்க தீக்கொழுந்து உலகப் பொருள்களை அழிக்கப் புகினும், காற்று ஒருப்பட்டு மிகு வேகமாக வீசினும் அடியேன் அவற்றால் மனம் கலங்காது யான் என்னும் செருக்கின்றி இறைவன் திருவடிகளையே உணர்ந்து நிற்பேன்.

வி–கு: சண்டம் – வேகம். கால் நின்ற என்றும் பிரிக்க. கால் – காற்று. நான் – முதலாவது யான் என்னும் செருக்கை உணர்த்தி நின்றது. (202)

**ஆனை துரக்கிலென் அம்பூ டறுக்கிலென்**
**கானத் துழுவை கலந்து வளைக்கிலென்**
**ஏனைப் பதியினில் எம்பெரு மான்வைத்த**
**ஞானத் துழவினை நானுழு வேனே. 2850**

க—து: இதுவும் அது.

பொ—ரை: மதங்கொண்ட கொல் யானை என்னைத் துரத்திவரினும், வீரன் விட்ட அம்புஎன் மார்பின் வழி உட் புகினும், காட்டில் வாழும் புலி தலைப்பட்டு என்னை வளைத்துக் கொள்ளினும் யான் அஞ்சேன்; என் உள்ளம் திருவருள் ஆகிய உலகின் முதற்பொருளைக் கண்டு இன்புறுவதாகிய நிட்டை நிலையில் நிற்பேன்.

வி—கு: ஞானத்து உழவு – அழுந்தி நின்று அறிதலாகிய செயல். (203)

**கூடி கெடின்மற்றோர் கூடுசெய் வானுளன்**
**நாடு கெடினும் நமர்கெடு வாரில்லை**
**வீடு கெடின்மற்றோர் வீடுபுக் காலொக்கும்**
**பாடது நந்தி பரிசறி வார்க்கே. 2851**

க—து: இஃது உயிர் நித்தமாமாறும் உடம்பே இறக்கும் போது அழிவது என்பதும் உணர்த்துகின்றது.

பொ—ரை: சற்குரவன் திருவருட் பரிசால் உலகின்கண் நிகழ்வதை உள்ளவாறு அறிவார்க்கு பறவைக்குக் கூடு போன்ற தாகிய இவ்வுடம்பு கெடின், வேறோர் உடம்பை உயிரின் வினைக் கீடாக அமைத்துக் கொடுக்கவல்ல முதல்வன் உண்ணாது உறங்காது என்றும் உளன்; போர், மிகுமழை முதலியவற்றால் ஒரு நாடு கெடின் அதன்கண் வாழ்ந்தோர் வேறு நாடு புகுந்து வாழ்வர்; அதுபோல், உடம்பு கெடின் உயிர்க்குக் கேடில்லை; அவ்வுயிர், அவ் வுடம்பை விட்டு வேறோர் உடம்பிற்புகுதல் ஒரு வீடு சிதைந்தால் வேறு நல்ல வீட்டில், அவ்வீட்டில் உள்ளார் சென்று குடிபுகுவதையும் ஒக்கும். (204)

# 14. சிவதரிசனம்

அஃதாவது முதற்பொருளாகிய சிவத்தை ஒருவன் தன் அறிவின்கண் தலைப்பட்டு உணருமாறு கூறுதல்.

இவ்வதிகாரம், முதல்வன் உயிர்க்குயிராய் நிற்றலின், அவனைத் தனக்கு வேறாகச் சுட்டிக் காணல் உறாது தான் அவனேயாய் நின்று காணும் முறைமையினை உணர்த்துகின்றது. முதல்வன் உயிரின் அறிவைக் கடந்து நிற்றலும், அவ்வறிவிற்குச் சார்பாய் வியஞ்சகம் ஆதலும், அவ்வறிவேயாய் நிற்றலும் உடன் கூறப்படுகின்றன. முதல்வனுக்கு உயிர்களோடு உள்ள இந்நால் வகை இயைபும் வேதங்களால் முறையே விசுவாந்தரியாமி, விசுவாதிகன், விசுவகாரணன், விசுவரூபி என்னும் தொடர்களாற் குறிக்கப்படும்.

**சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை**
**சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படும்**
**சிந்தை தெளியத் தெளிவல் லார்கட்குச்**
**சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே.** 2852

க—து: இம்மந்திரம் சிவன் ஒருவன் அறிவிற்கு வேறாய் நில்லாது, அவ்வறிவிற்கறிவாய் வெளிப்படுமாறு உணர்த்து கின்றது.

பொழிப்புரை: ஒருவன் உணர்வும் அவ்வுணர்வால் உணரப்படும் முதற்பொருளும் என இரண்டாக அறியப்படுவது இன்று. சந்தனத்தில் தட்பமும் மலரில் மணமும் அப்பொருள் களில் அடங்கி நின்று வெளிப்படுமாறு போல ஒருவனது உணர்வில் முதற்பொருளும் மறைந்து நின்று, பக்குவ முதிர்ச்சிக் கண் அறிவாய் இன்பமாய் அளவிறந்து தோன்றும். மெய்ந்நூற் பொருளைக்கேட்டுச் சிந்தித்து அப்பொருளினுடைய இணைப்பு

நிலையை திருவைந்தெழுத்தின் வைத்து இடையறாது எண்ணு தலால் ஒருவனது உணர்வு அறியாமைப் பிணிப்பின் நீங்கி திரிபு ஐயங்களின் நீங்கிய தெளிவை எய்தும். இங்ஙனம் தெளியவல் லார்க்குச் சிவன் அத்தெளிவுணர்வில் இயல்பாய் விளங்குவன்.

இது விறகைக் கடைந்தபோது அதினின்றும் எழுந்து சுடரும் அழலைப்போலும்.

வி–கு: சிந்தை தெளிதலாவது ஒருவனது அறிவு அறியாமைப் பிணிப்பின் நீங்கித் திரிபு ஐயங்களாகிய மாசு அகன்று மலர்தல். சிந்தை – அறிவு, உணர்வு: உள்ளம் எனக் கொண்டு உரைப்பினும் அமையும். திரிபாவது ஒரு பொருளை வேறு பொருளாக அறிதல். ஐயமாவது அதனை இதுவோ அதுவோ என இரட்டுற அறிதல்.

இது முதல்வன் விசுவாந்தரியாமி (உயிர்க்குயிராய் நிற்றல்) ஆதலைக் குறிக்கொண்டு உணர்ந்து அவனைத் தலைப்படவேண்டும் என்பது உணர்த்திற்று.

***பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்***
***செம்பொருள் காண்ப தறிவு.***

என்னும் அருமைத் திருக்குறள் இம்மந்திரத்தோடு உடன் வைத்து உணரத்தக்கது. விசுவம் – உலகு, உயிர். அந்தரியாமி – உள்ளிருந்து உணர்த்தி நடத்துவோன். (205)

**வாக்கு மனமு மறைந்த மறைப்பொருள்**
**நோக்குமின் நோக்கப் படும்பொருள் நுண்ணிது**
**போக்கொன்றும் இல்லை வரவில்லை கேடில்லை**
**ஆக்கமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே. 2853**

க–து: இது ஞேயமாகிய முதற்பொருள் நால்வகை வாக்கிற்கும் மன உணவிற்கும் அடி நிலையாய் உள்ள நுண் பொருள் என்பதும் அது விகாரமில்லது என்பதும், அதனை நுணுகி உணர்வார்க்கே ஆக்கம் உளதாகும் என்பதும் உணர்த்து கின்றது.

பொ–ரை: உயிர்கட்கு அத்தனாக உள்ள முதற்பொருள் அவற்றின் சொல்லாற்றலுக்கும் நினைவு ஆற்றலுக்கும் அடி நிலையாய் அவற்றின் அறிவில் மறைந்துள்ள நுண்பொருள் ஆகும். அஃது உள் நோக்கி உணரத்தக்கது. போதல், வருதல் என்னும் சலனமும், தோன்றல், கெடுதல் என்னும் விகாரமும் இல்லாதது. அதனை உள்நோக்கி நுணுகி உணர்வில் கொள் வார்க்கே ஆக்கம் உண்டாகும்.

வி–கு: உண்டாகும் என்பது சொல்லெச்சம். கேடில்லை எனவே தோற்றம் இல்லை என்பதும் உடன் கொள்ளப்பட்டது. ஆக்கம் – மேன்மேல் வளர்தல்; அஃதாவது பக்குவத்தான் உயர்ந்து சீவன் முத்த நிலை, பரமுத்தி என்பவற்றைப் பெற்று இன்புறுதல். மறைந்த மறைப்பொருள் எனவே அடி நிலையாய் நிற்றல் பெற்றாம். நால்வகை வாக்குக்களாவன – சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்பன. இவற்றுள் மத்திமை உன்னலும் வைகரி செப்பலும் ஆகும். இவையே வேறோராற்றான் நாதம், விந்து, மகரம், உகரம், அகரம் என ஐவகைக் கலைகளாகவும் கொள்ளப்படும். இவற்றுள் நாதம் உள்ளம் என்னும் புருடனையும், விந்து பிரகிருதி யாகிய சித்தத்தையும், அகரம் ஆங்காரத்தையும் செலுத்தும் நாதம் முதலியவற்றிற்கு அதி தெய்வங்கள் முறையே சதாசிவன், ஈசன், பரமன், மால், அய்ன் என்போர் ஆவர். இவ் ஐவர்க்கும் உள்ளொளியாய் நிற்பவனே முதல்வன். இஃது,

ஓதியஐந்து ஓங்காரத்து
உள்ளொளிக்கும் உள்ளொளியாய்
ஐந்தொழிற்கும் நீங்காத
பேருருவாய் நின்றோனே.

என்னும் பெரியார் வாய்மொழி பற்றியும், மெய்கண்ட நூல்களானும் உணரப்படும். இதனால் வாக்கும் மனமும் மறைந்த மறைப்பொருள் என்னும் தொடரின் பொருள் இனிது விளங்கும். இங்ஙனம் உயிர்க்குயிராய் நின்றும் கரணங்களைச் செலுத்தியும் உணர்த்தும் செயல் அதிசூக்கும பஞ்சகிருத்தியம் எனப்படும். ‘உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா’ என்னும் திருவாசகத் தொடரும் எண்ணத்தக்கது. ஓங்காரத்தையே இறைவன்திருநடம் புரியும் மன்று என்பர் பெரியோர். இன்னும் ‘துஞ்சும் போதும் சுடர்விடு சோதியை – நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை’ என்னும் அப்பர் அருள்மொழியும் சிந்திக்கத் தக்கது. அத்தன் – முதல்வன் அல்லது தந்தை. ஆய்ந்து கொள்ளுதல். நுணுகி உள்நோக்கி உணர்ந்து வெளிப்படக் காண்டல். இதனால் சிவதரிசனத்தின் இன்றியமையாமையும் பயனும் உணர்த்தப்பட்டன. (206)

**பரனாய்ப் பராபர னாகியப் பாற்சென்(று)**
**உரனாய் வழக்கற்ற வொண்சுடர் தானாய்த்**
**தரனாய்த் தனாதென வாறறி வொண்ணா**
**அரனா யுலகில் அருள்புரிந் தானே. 2854**

க–து: இது முதல்வனுடைய பொது இயல்பைத் தொகுத்து உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் மேலானவன்; மேலானவர்க்கும் மேலானவன். உயிர்க்ளின் அறிவைக் கடந்து நின்று தான் திண்ணி

யனாய் என்றும் வழங்குதல் நீங்காத ஒள்ளிய சுடரொளியாய் நிலைபெற்றவன்; எப்பொருட்கும் சார்பாய் நின்றவன். எவ்வுயிரும் தனக்கு உரியதென ஒருநெறியைக் காணவொண்ணாத நிலையில் அவ்வுயிர்களின் பாசத்தை அரிப்பவன். இங்ஙனம் அவன் உலகோடு தொடர்புடையனாய் உயிர்களுக்கு அருளை இடையறாது அன்பினால் வழங்கி வருகின்றான்.

வி–கு: பரன் பராத்பரன் என்றமையால் முதல்வன் விசுவசேவியன் (தொழப்படுவோன்) என்பது உணர்த்தப்பட்டது. அப்பாற்சென்று என்றதனால் விசுவாதிகன் என்பது உணர்த்தப் பட்டது. உரனாய் வழக்கறா வொண்சுடராய் என்றமையால் விசுவகாரணன் என்பது உணர்த்தப்பட்டது. ஆறறிவொண்ணா அரனாய் அருள்புரிந்தான் என்றமையால் விசுவாந்தரியாமி என்பது உணர்த்தப்பட்டது. ஆறு – நெறி; அறிவொண்ணா – அறிதல் கூடாத. அரன் – தளையை அரிப்பவன். தரன் – ஆதாரமாய் நின்று தாங்குபவன். பொதுவியல்பாவது பிறபொருட் சார்பு பற்றி ஒரு பொருட்குக் கூறப்படும் இயல்பு. இதனை வட நூலார் தடத்தலக்கணம் என்பர். தடத்தம் – அணிமைக்கண் உள்ளதில் நிற்பது. அவ்வாறு நிற்கும் இலக்கணம் தடத்தலக்கணம். இப்பாட்டு தன்னியல்பு கூறும்அடுத்த அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்கின்றது. (207)

## 15. சிவசொரூப தரிசனம்

அஃதாவது பேரின்பப் பிழம்பாகிய முதல்வனது தன்னியல்பைத் தலைப்பட்டுணர்தல். சிவம் – இன்பம். தூய்மை, இயற்கையுணர்வு என்னும் பொருள்களைத் தரும் மறைமொழி. சொரூபம் – தன்னியல்பு; சுவ – தன். ரூபம் – இயல்பு. ஒரு பொருட்குப் பிற பொருட் சார்பு பற்றாது அதன்கண் உள்ளதாய இயல்பு தன்னியல்பு. இது சொரூபலக்கணம் என்வும், உண்மை

இயல்பு எனவும் குறிக்கப்படும். இவ்வதிகாரம் முத்தான்மா முதற்பொருளின் தன்னியல்பு உணர்ந்து தலைக்கூடி இன்புறும் இயல்பு உணர்த்துகின்றது. இங்கு உணர்த்தப்படும் அனுபவ நிலை சிவபோகம் எனவும், இன்புறு நிலை எனவும், நின்மல துரியாதீத நிலை எனவும் குறிக்கப்படும். இந்நிலையே நிட்டை எனவும் படும். மேல் தெளிதல் உணர்த்தி இங்கு நிட்டை உணர்த்துதலின், இவ்வதிகாரத்தின் இயைபு முறைமை பற்றிய இயைபு ஆகும்.

**ஓதும் மயிர்க்கால் தொறும்அமு தூறிய**
**பேதம் அபேதம் பிறழாத ஆனந்தம்**
**ஆதி சொரூபங்கள் மூன்றகன் றப்பாலை**
**வேதகம் ஓதும் சொரூபிதன் மேன்மையே.** 2855

க–து: இது முதல்வனது தன்னியல்பு கூறுகின்றது.

பொ–ரை: முதல்வனுக்கு உலகப் படைப்பின் தொடக்கத்தில் உள்ள இலயம், போகம், அதிகாரம் என்னும் மூன்றனையும் கடந்து வேதம் ஓதும் தன் இயல்புள்ள சுத்த சிவத்தின் மேன்மையாவது தன்னைத் தலைப்பட்டு உணர்ந்தார்க்கு அவர்தம் மயிர்க்கால் தோறும் அமுதம் ஊறி இனிக்கச் செய்யும் மாறுபடாத ஆனந்தம் ஆகும். அவ்வியல்பு பேதத்தினும் அபேதத்தினும் பிறழாது நிற்பதொன்று.

வி–கு: சொரூபிதன் மேன்மை மயிர்க்கால் தொறும் அமுதூறிய ஆனந்தம் எனக் கூட்டி முடிக்க. பேதத்தினும் அபேதத்தினும் பிறழாத ஆனந்தம் எனக் கூட்டுக. மூன்றாம் அடியில் வந்துள்ள சொரூபங்கள் என்னும் சொல், இயல்புகள், அவத்தைகள் என்னும் பொருளில் வந்துள்ளது. மூன்றும் என முற்றும்மை வருவிக்க. சொரூபிதன் மேன்மை என்பது மேன்மையான

தன்னியல்பு என்னும் கருத்தில் வந்துள்ளது. ஆனந்தம் கூறவே சத்து, சித்து என்பனவும் உடன் கொள்ளப்படும். சத்தியம், ஞானம், அனந்தம் ப்ரஹ்ம என்னும் தைத்திரீய உரை ஒப்பு நோக்கத்தக்கது. மயிர்க்கால் தொறும் அமுதூறிய என்றது முதல் வனது தன்னியல்பைத் தலைப்பட்டார்க்கு உண்டாகும் மெய்ப் பாடு கூறியபடி. ஓதும் என்றது ஓதப்படும் என்னும் பொருட்டு.

**தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர்**
**உள்ளத் தேறல் அமுத ஒளிவெளி**
**கள்ளத்தேன் கடியேன் கவலைக்கடல்**
**வெள்ளத் தேனுக் கெவ்வாறு விளைந்ததே.**

எனவரும் சிவானுபவம் பெற்ற பெரியார் திருமொழி உன்னத்தக்கது. அபேதம் என்றது சிவத்தோடு, ஒன்றிய சுத்த ஆன்மாவை; பேதம் என்றது அதன் கருவி கரணங்களை. (208)

**உணர்வும் அவனே உயிரும் அவனே**
**புணரும் அவனே புலனு மவனே**
**இணரும் அவன்தன்னை எண்ணலு மாகான்**
**துணரின் மலர்க்கந்தம் துன்னிநின் றானே. 2856**

க–து: இது முதற்பொருளுக்கு உயிரோடு உள்ளதாகிய பிரிப்பற்ற சம்பந்தம் உணர்த்துகிறது.

பொ–ரை: முதல்வன் உயிர்களோடு கலந்துள்ள கலப்பினால் உயிரும் அதன் உணர்வும் தானே எனும்படி நிற்கின் றான். உயிர் முதல்வனைப் புணர்ந்து நிற்றலும் தானே, காட்சிப் பொருளும் தானே என்னும்படி அவ்வுயிரை நடத்துகின்றான். உயிரோடு நெருங்கி ஒன்றி நிற்கும் அவன் தன்னைச்சோகம் என

பாவிக்க வெளிப்படுவதன்றி வேறாக எண்ணவாரான். கொத்தாக மலரும் மலரின்கண் உள்ள வாசம்போல உயிரோடு பிணைந்து நிற்பது அவன் இயல்பு.

வி-கு: சிவம் அத்வைதம் எனவரும் உபநிடதப் பொருள் இதனால் விளக்கப்பட்டது. சோகம் என்பது அவன் நான் என்னும் அபேத பாவனையைக் குறிக்கும் மறைமொழி. சிவாய என்னும் முத்தி பஞ்சாக்கரமும் இப்பொருளையே கொண்டது. சிகாரம் ஞேயத்தையும், யகாரம் ஞாதிருவையும், வகாரம் அவ்விரண்டின் பிரிப்பறு நிலையை உணர்ந்து நிற்கும் ஞானத்தையும் குறிக்கும் என்பர் சிவஞானிகள். (209)

**துன்னிநின் றான்தன்னை உன்னிமுன் னாவிரு**
**முன்னி யவர்தங் குறையை முடித்திடும்**
**மன்னிய கேள்வி மறையவன் மாதவன்**
**சென்னியுள் நின்றதோர் தேற்றத்த னாமே.** 2857

க-து: இம்மந்திரம் கலைஞானம் தெளியப் பெற்றும் நிட்டை கைவரப் பெறாதார் நிற்கத் தகும் உறுதிநிலை உணர்த்து கின்றது.

பொ-ரை: உயிர்க்குயிராய் நெருங்கிப் பிணைந்து நிற்கும் முதல்வனை நினைந்து அவன் திருமுன்பு இரு. தன்னை நினைந்து நிற்போர்க்கு வேண்டிய குறைகளை முதல்வனே முன்னின்று முடித்தருளுவன். நிலைபெற்ற கேள்வியையுடைய அயன், திருமால் என்போருடைய சிரத்தில் தெளிபொருளாய் நிற்பவன் சிவனே ஆவன்.

வி-கு: முன்னாக இருத்தலாவது புற உலகு இறைவ னால் நடைபெறுவதென்று உணர்ந்து அவன் அருளால் அன்றி

ஒன்றையும் அறியாதும் செய்யாதும் இருத்தல். இஃது இறைபணி நிற்றல் எனுந் தொடரால் உணர்த்தப்படும். மந்திரத்தின் பின் இரண்டு அடிகளுக்கு நிலைபெற்ற கேள்வியாகிய மறையைக் கொடுத்தவனும் சிறந்த தவப்பயனாய் உள்ளவனும் உயிர்களின் சென்னி எனப்படும் அறிவு செயல்களை நடத்துவோனும் முதல்வன், எனப் பொதுப்படக் கொண்டு உரைத்தலும் பொருந்தும். (210)

**மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலும்**
**தன்னுற்ற சோதித் தலைவன் இணையிலி**
**பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியை**
**என்னுற் றறிவனான் என்விழித் தானே. 2858**

க–து: இது சிவதரிசனத்தின் பின் ஆன்ம சுத்தி பெறுமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: யான் – நான் ஆர் என நாடிச் சென்று மின்னலின் தன்மை பொருந்திய என்னறிவு திகைத்து நின்றேன்; திகைத்தபோது அவ்வறிவுள் அறிவாக நின்று உணர்த்திவந்த இறைவனைத் திருவருள் என் அறிவுக்கு அறிவாய் என்னைத் தெளியச் செய்தது.

வி–கு: சோதித் தலைவன் இணையிலி. பொன்னுற்ற மேனி புரிசடை நந்தியை எனக்குற்ற அறிவு அன்னானாய் என்னை விழிப்பித்தான் என முடிக்க. ஈண்டுத் திருவருள் முதல்வனாக உபசரித்துக் கூறப்பட்டது. விழித்தான் என்பது பிறவினைப் பொருள் பயந்து தெளிவித்தான் என்னும் பொருளைத் தந்து நின்றது. சிந்தை விழித்தேன் என்பதில் விழித்தல் மேற்செல்லாது மயங்கி நிற்றலைக் குறித்தது.

*முகத்தி லொன்றதா அவ்வெழுத் துடையதோர் முருகன்*
*நகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளெனநவில*
*மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்*
*திகைத்திருந்தனன் கண்டிலன் அப்பொருட் டிறனே!*

என்னும் கந்தபுராணச் செய்யுளிற் போல.

மின்னுற்ற சிந்தை – தோன்றி மறையும் மின்னல் போன்று சகல கேவலமாய் விளங்கியும் மறைந்தும் வரும் அறிவு. விழித்தலும் என்னும் உம்மை பின்வரும் நிகழ்ச்சிக்கு இடையீ டின்மை உணர்த்தி நின்றது. தன்னுற்ற – அவ்வறிவின்கண் பிரிப் பின்றிப் பொருந்திய. என் உற்ற அறிவனான் – உயிர்க்குயிராய்; அகரம் – தொகுத்தல் விகாரம்.

உயிர்க்குயிராய்த் திருவருள் உள்ளது என்னும் துணிவு சிவதரிசனமாகும். சிவன் முதலே யன்றி முதலில்லை என்றும், சிவனவனது என்னறிவென்றும் தெளிவதே ஆன்மசுத்தி. (211)

**சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தன்**
**சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி**
**சுத்தப் பிரம துரியந் துரியத்துள்**
**உய்த்த துரியத் துறும்பே ரொளியே.** 2859

க–து: இது பரம்பொருள் ஆனந்தம் என்னும் ஞேய மாகவும் அவ்வானந்தத்தை ஆன்ம உணர்வில் விளக்கும் அரு ளொளியாகவும் இரட்டுற நிற்றல் உணர்த்துகின்றது.

பொ–ரை: உண்மை அறிவுப் பிழம்பாய்த் தனக்குவமை இல்லாத முதற்பொருள் பேரின்பமே வடிவாயது. ஆன்ம அறிவில் அடங்காது அவ்வறிவை விரியச் செய்து அதன்

உள்ளும் புறம்புமாய்த் தேங்கும் சிவானந்தத்தை விளக்கும் பேரொளியாவது, நின்மல ஞான துரியத்தில் அனுபவப்படுவ தாய், அத்துரியத்துள் ஆன்ம அறிவைச் செலுத்துவதாய், அந் நிலைக்கண் உடன் நிற்பதாய் உள்ள அருளொளி ஆகும்.

வி—கு: முதற்பொருள் அறிவும் இன்பமுமாய் அனுபவப்படுவது. அறிவாய் ஒளியாய் நிற்கும் நிலையே திரு வருள் எனப்படும் சத்தி ஆகும். இன்பாய் நுகரப்படும் நிலையே சிவம் எனப்படும். இவற்றுள் சிவம் ஞேயமும், சத்தி ஆன்ம ஞானத்தின் வியஞ்சகமும் ஆகும். ஆன்மா ஞாதிரு எனப்படும். இப்பாட்டில் ஞேயமாகிய சிவத்தைச் சத்தியஞானத் தனிப் பொருள் ஆனந்தன் எனவும், ஆன்மஞான வியஞ்சகமாகிய சத்தியைச்

***சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி***
***சுத்தப் பிரம துரியம்***
***துரியத்துள் உய்த்த துரியத்து உறும்பேரொளி.***

எனவும் குறித்தனர்.

துரியம் என்னும் சொல் உயர்நிலை என்னும் பொருள் பயந்து ஆன்ம உணர்வின் தன்மயமாய் நிற்கும் நிலையை உணர்த்தி நின்றது. சுத்த பிரமத் துரியம் என்னும் தொடர் பிறபொருட் சார்பின்றி தன்னியல்பில் நிற்கும் பரம்பொருட் சார்பு விளங்கும் உயர்நிலை என்னும் பொருட்டாய் நின்றது.

'துரியம் துரியத்துள் உய்த்த துரியத்துறும் பேரொளியே' என்பது துரிய காரணமாய் அத்துரியத்தின் கண் உய்த்து அத்துரியத்தின்கண் உடனுள்ள பேரொளி என்னும் பொருள் பயந்து, சிவானந்தப் பேரொளி எனும் எழுவாய்க்குப் பயனிலை ஆயிற்று. பின்வரும் துரியம் இரண்டிற்கும் அகரச்சுட்டு வருவித்

துரைக்க ஞானநெறிக்கண் அருள் பட்டாங்கு உணரப்படும் தெளிவு நிலையைத் துரியநிலை அல்லது அருள்நிலை எனவும், சிவம் அனுபவப்படும் நிட்டை நிலையை அதீத நிலை, இன்புறு நிலை எனவும் கூறுதல் தொன்று தொட்டுவரும் மரபு.

மெய்ப்பொருள் அருள் எனவும், இன்பம் எனவும் இருவகைப்பட அனுபவப்படும் என்னும் பரம சித்தாந்தத்தைப் 'போதானந்தப் பொருளாம் மெய்காட்டும் மெய்கண்டாய்' என மனவாசகம் கடந்த தேவநாயனார் கூறி உள்ளமை பற்றியும் உணர்ந்து கொள்க. ஒரு பொருளை உணரும் உணர்வு நிலையில் உணர்வோனும் உணர்வும் உணரப்படு பொருளும் அப் பொருளை உணர்த்தும் பொருளும் ஆகிய நான்களையும் காண்பான் காட்சி காணப்படுபொருள் காட்டு என்னும் சொற்களால் மெய்ந்நூல்கள் குறிக்கும்; முத்தி நிலையில் காண்பான் என்றது ஆன்மா; காட்சி என்பது அவ்வான்மாவின் அறிவு; காணப்படு பொருள் என்பது பேரின்பமய சிவம்; காட்டு என்பது அதனோடு ஒற்றித்து வேறுபடாது நிற்கும் அருளொளி. இங்ஙனம் நான்கு இருப்பினும் காண்பான் காட்சி என்னும் இரண் டையும் தன்கண் அடங்கக் கொண்டு நுகரப்படும் இன்ப ஒளியாய் விளங்குவது சிவப்பொருள்.

ஆதலினால் இங்ஙனம் ஏனையவற்றைத் தன்னுள் அடக்கித் தான் ஒன்றே சிறந்து நிற்றல் பற்றி முதற் பொருள் சிறப்பு எனக் குறிக்கப்படும். இக்குறியீட்டை, 'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு' எனத் தெளிதல் பற்றி எழுந்த அருமைத் திருக்குறளில் கண்டு கொள்க. காட்டைக் காட்சியின் அடங்கக் கொண்டு ஞாதிரு ஞானம் ஞேயம் என முப்புடையே கூறுவதும் உண்டு. அஃது இதனொடு மாறுபடாமை அறிக. இதனால் சிவத்தின் சொரூபம் சத்தியஞான ஆனந்தம் என்பதும், ஞானம் என்பது பேரொளியாய்

ஆன்ம அறிவைக் கலந்து நின்று துரியநிலைக்கண் வெளிப்பட்டு அவ்வறிவைத் தன்கண் அடங்கக் கொண்டு அதீத நிலைக்கண் உய்ப்பது என்பதும் உணர்த்தியவாறு அறிக. (212)

**பரனல்ல நீடும் பராபர னல்ல**
**உரனல்ல மீதுணர் ஒண்சுட ரல்ல**
**தரனல்ல தானவை யாயல்ல வாகும்**
**அரனல்ல ஆனந்தத் தப்புறத் தானே. 2860**

க–து: இஃது இறைவன் இயல்பை இனைத்தென வரை செய்து உணர்த்துதல் கூடாது என்று உணர்த்துகின்றது.

பொ–ரை:· மேல் முதற் பொருளை அவன் ஒவ்வொர் இயல்புப் பற்றிப் பரன் என்றும், பராபரன் என்றும், உரன் என்றும், மீதுணர் ஒண்சுடர் என்றும் தரன் என்றும், அரன் என்றும், ஆனந்தன் என்றும் குறித்தோம். அம்முதற் பொருள் அவ் வளவின் அன்றி மேலும் இந்நிலைகளைக்கடந்துளது; ஆதலி னால் அதனை இவையேயாயும், இவை அலலதாயும் கூறுதல் தகும்.

வி–கு: 'மந்திரப் பொருள்வயின் ஆஅகுநவும் – அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே' என்னும் சொல்லதிகார விதி பற்றி ஆடுஉ அறிசொற்கள் அல்ல எனும் பயனிலை கொண்டன. அல்லன் என்பதும் பாடம் ஆகலாம். பரன் என்னும் சொல் மேலோன் எனப் பொருள்பட்டு மும்மூர்த்தியுள் வைத்து அரனையும், மும்மூர்த்திகட்கும் மேம்பட்ட ஈசனையும் குறிக்கும். நீடும் பராபரன் என்றது பரையோடு கூடிய முதல்வன்' எனவும், மேலான பொருள்களினும் மேலானவன் எனவும் பொருள்படும். பரா – பரை, பராசத்தி. பின்னைய பொருளுக்குப் பராத்பரன் என்பதன் திரிபாகக் கொள்ளப்படும் பரமாகவும் அபரமாகவும்

உள்ளவன் என்னும் பொருளிற் கொண்டு தாவர லிங்கம் அருட் குரு எனினும் அமையும். மீதுணர் ஒண்சுடர் – உலக இருளைக் கடந்து நின்று உணரப்படும் ஒள்ளியசுடர்; 'அண்டமார் இருளூடு கடந்தம்பர் – உண்டுபோலும் ஓர் ஒண்டர் – அச்சுடர் – கண்டிங் காரறிவார்; அறிவாரெல்லாம் – வெண்திங்கட்கண்ணி வேதியன் என்பவே' என்னும் தேவாரத்தான் உணர்க. தரன், அரன் என்ப வற்றின் பொருள் மேலே உணர்த்தப்பட்டன. அரன் என்பது ஒடுக்குபவன் என்னும் பொருளில் வந்தது எனினும் ஆம். இம்மந்திரம்,

**கடல் அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்**
**கடலளக்க வாராதாற் போலப் – படியில்**
**அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்**
**கருத்துக்குச் சேயனாய்க் காண்**

என்னும் திருக்களிற்றுப் படியோடு ஒப்புநோக்கத்தக்கது. (213)

**முத்தியுஞ் சித்தியும் முற்றிய ஞானத்தோன்**
**பத்தியுள் நின்று பரந்தன்னுள் நின்றுமா**
**சத்தியுள் நின்றோர்க்குத் தத்துவங் கூடலாற்**
**சுத்தி யகன்றோர் சுகானந்த போதரே.** 2861

க–து: இது குறைவிலா நிறைவாம் பேரின்ப நெறியைத் தெளிவிப்போனது இயல்பு உணர்த்துகின்றது.

பொ–ரை: உயர்ஞானம் உள்ள அருட்குரவனிடத்து உண்மை அன்பு செய்து அவன் கூறும் வழி நின்று முதல்வனுக்கு அன்பு செய்து இவ்விரண்டானும் விளங்கும் திருவருளைக் கண்டு அதன்கண் ஒன்றி அடங்கி நிற்பார்க்கு மெய்ப்பொருளாம் தத்துவம் கைகூடும். ஆதலின் மேற்சொல்லியவாறு மலமாசு

கழிக்கும் சுத்த நெறிக்கண் நின்று தம் வியாபக நிலையை எய்தினாரே குறைவிலா நிறைவாம் ஆனந்த நிச்சயம் உணர்த்த வல்லோர் ஆவர். அருட்குரவன் முத்தியின் படி நிலைகளும் சித்தியின் திறங்களும் தன் அனுபவத்தால் முற்றும் அறிந்தோன் ஆவன்.

வி–கு: முத்தியும் சித்தியும் முற்றிய ஞானத்தோன் பத்தி எனக் கூட்டுக. முத்தித் திறங்களும், சித்தித் திறங்களும் முற்றும் உணர்ந்த உயர்ஞானிகட்குச் செய்யும் அன்பு அல்லது சேவை என்றபடி. இப்பத்தியுள் நின்றார்க்குப் பரம் எனப்படும் முதற் பொருட்கண் செய்யும் வழிபாடு கைகூடும். அதுவே பரத்துள் நிற்றலாம். அவ்வழிபாட்டின் பயனாக வெளிப்படுவது பேரொளி எனப்பட்ட மாசத்தி. அதனைக்கண்டு ஒன்றி அடங்கி அதன்வழி நிற்பின், அது சிவத்தில் உய்க்கும். தத்துவம் என்னும் சொல் அதனது தன்மை என்னும் பொருள் பயந்து, உண்மை என்னும் பொருள் குறித்து நிற்கும். அஃது இங்கு மேல் போதானந்தமெய் எனக் குறிக்கப்பெற்ற மெய்ப்பொருளைக் குறித்து நின்றது. சுத்தி அகன்றோர் – சுத்த நெறிக்கண் நின்று மாசகன்றோர், சுத்த நெறிக்கண் நின்று தம் வியாபக நிலை அணுகப் பெற்றோர் என்னும் இரு பொருளும் ஒருங்கே அமைய நின்றது. சுகம் – இன்பம். ஆனந்தம் – நிறைவு. போதம் – பொருள் நிச்சயம் உணர்த்தல்; எனவே சத்திய ஞானானந்த முதற்பொருளை உணர்த்தவல்ல சற்குரவர் என்றபடி. (214)

**துரிய அதீதஞ் சொல்லறும் பாழாம்**
**அரிய துரியம் அதீதம் புரியில்**
**விரியுங் குவியும் விள்ளா மிளிர்ந்தென்**
**உருவந் திரியும் உரைப்பதெவ் வாறே.** 2862

க–து: இது நின்மல துரியம் துரியாதீதம் என்னும் இரு நிலைகளில் நிற்கும் சீவன் முத்தர் இயல்பு கூறுகின்றது.

பொ—ரை: சுத்த நிலைக்கண், பசு பாச ஞானங்களைக் கடந்து ஏகனாகி இறைபணி நிற்கும் துரியம் எனப்படும் அருள் நிலையைக் கடந்ததாகிய அதீதம் எனப்படும் ஆனந்த நிலை அனுபவித்து உணரப்படுவது அன்றி இவ்வாறு இருந்தது என்று சொல்லொணாத வெறுநிலையாம். எய்தற்கு அரிய துரியமும் அதீதமும் என்னும் இரு நிலைகளுள் இடையறாது நிற்பின் அவ்வாறு நிற்போனது உணர்வு விரிந்து வியாபகமாய் நிற்கும்; முதல்வன் திருவருளால் அவ்விரிவு நீங்கி அருள் மயமாய் நின்று உலகிற்குப் பரமார்த்தத்தை உணர்த்துதற் பொருட்டுக் குவிந்தும் நிற்கும். இங்ஙனம் விரிந்தும் குவிந்தும் நிற்கும் நிலைகளில் தன்னியல்பு செம்பு பொன்னாதல் போல முன்னைப் பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கி நிற்கும். இவ்வியல்பு இன்னது என உரைத்தல் கூடாததொன்று.

வி—கு: என்னுருவம் என்றது என் இயல்பு என்றபடி. அது திரிதலாவது முன் இருளாய் இருந்தது இப்பொழுது ஒளியாய் நிற்றல். விரியும் என்றது முத்தனது அறிவு குறியிறந்து நின்ற முதல்வனது வியாபக நிலையைத் தலைப்பட்டு இன் புறுதல். குவியும் என்றது அவ்வறிவு குவிந்து நின்று உலகிற்கு அபர ஞானத்தை உணர்த்தலும், முன் மாதிரியாக நடந்து காட் டலும் ஆகும். அந் நிலையில் அவர் பெற்ற சிற்றின்பமும் பேரின் பமாக முற்றப்பெறும். இவை அளவை முறையின் வைத்து உணர்த்தப்படாதன ஆதலின் உரைப்பது எவ்வாறு என்றனர்.

***விரிந்துங் குவிந்தும் விழுங்குவர்கண் மீண்டுந்***
***தெரிந்துந் தெரியாது நிற்பர் – தெரிந்துந்***
***தெரியாது நிற்கின்ற சேயிழைபா லென்றும்***
***பிரியாது நின்றவனைப் பெற்று.***

என்னும் திருக்களிற்றுப்படி வெண்பா புடைபட வைத்து உணரத் தக்கது. (215)

பாழ் – உரு குணம் குறிகளின்மையின் சொல்லொ ணாதது.

## 16. முத்திபேதம், கரும நிருவாணம்

இவ்வதிகாரம் இருவகை முத்தி நிலைகளையும் தற்போதச் செயலின் நீங்குதலையும் உணர்த்துகின்றது. பேதம் ஈண்டு வகை என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. நிருவாணம் ஓய்வு அல்லது செயல் அறுதி கரும நிருவாணம் – கருமத்தினின்றும் ஓய்வு. முத்தி நிலை என்பதும் பாடம் எனத் தெரிகின்றது.

**ஓதிய முத்தி யடைவே உயிர்பர**
**பேதமி லச்சிவம் எய்துந் துரியமோ(டு)**
**ஆதி சொரூபம்; சொரூபத்த தாகவே**
**ஏதமி லாநிரு வாணம் பிறந்ததே.** **2863**

க–து: இது சீவன்முத்தி பரமுத்தி நிலையை விளக்கு கின்றது.

பொ–ரை: உயர்ந்த நூல்கள் ஓதிய உயர் முத்தியின் முறைமையாவது உயிர் பரத்தினின்றும் வேறுபடாத, சுட்ட றிவைக் கடந்த சிவத்தை எய்தும் துரியத்தோடு, அவ்வாதியாகிய சிவத்தின் சொரூபமாயே நிற்றல் ஆகும்.

துரியத்தின் பின்னர்த்தாகிய சொரூபநிலையே தன் நிலையாக மாறின்றிப் பெறவே குற்றமற்ற நிருவாணம் உண்டா யிற்று.

வி–கு: உயிர், பரபேதமில் அச்சிவம் எய்தும் துரியத் தோடு ஆதி சொரூபம் (எய்தல்) என்பது வரை சீவன் முத்தி

இயல்பு கூறிற்று. சொரூபத்ததே ஆக நிருவாணம் பிறந்தது என்னும் தொடர் பரமுத்திநிலை குறித்தது இதனால் சிவம் பரத் தினின்றும் வேறுபடாதது என்பதும், அச்சிவம் சுட்டறிவைக் கடந்தது என்பதும், அதனை எய்தும் முதற்படி துரியநிலை எனப் படும் என்பதும், முடிநிலை ஆதி சொரூபத்தைத் தலைப்பட்டு நிற்றல் என்பதும், இவ்விரு நிலைகளே சீவன் முத்திக்கண் உள்ளவை என்பதும், இவற்றுள் பிற்றை நிலை ஆன்மாவிற்குக் கூடி நிற்கையில் பூதவுடல் பிரிவதே பரிபூரண நிலையாகிய முத்தி என்பதும் நுண்ணுணர்வால் உணர்ந்து கொள்ளப்படும். சித்தாந்த சைவத்தில் சீவன் முத்தி நிலைக்கும் பரமுத்தி நிலைக்கும் வேறுபாடு இன்று. சீவன் முத்தி நிலைக்கண் உடம்பு இருத்தலின் அவ்வுடம்பு முகந்த பிராரத்த வாதனை பற்றி உலகமுகப்படுதல் உளதாகும். அந்நிலையிலும் முத்தர்கள் அதீத நிலையின் நீங்கி வருதல் அன்றித் துரிய அருள் நிலையின்கீழ்ச் செல்லார். பரம் – திருவருள். பரத்தோடு பேதமில்லாத அச்சிவத்தை எய்தும் துரியமோடு கூடிய ஆதிச் சொரூபம் என்றமையின், உயிர் முன்னர்ப் பரத்தைப் பற்றிஅதன் பின்னர் அப்பரத்தின் உதவியால் சிவத்தைப் பற்றி அழுந்தும் என்னும் படிநிலைகள் உணர்த்தப் பட்டன. சொரூபத்ததே ஆக என மாற்றி வைத்து உரைக்க. உரைக்கவே, சொரூபமாதல் அதீதம் ஆகிய இன்புறு நிலை என்பதும், சொரூபத்ததே ஆதல் உடம்பின் நீங்கி முன்னிருந்தபடி இருக்கும் பரிபூரண நிலை என்பதும் பெறப்படும். அடைவு – முறைமை, வரிசை; அடைதல் எனத் தொழிற் பெயராகக் கொண்டு உரைப்பினும் அமையும். சொரூபம் – உண்மை அறிவின்பமாகிய தன்னியல்பு. இது முதல்வனுக்கு என்றும் உள்ளது; உயிர்க்கு முத்திக்கண் உள்ளது. உயிர்க்கு ஆணவச் சார்பு பற்றி உளதாகும் அறியாமையும் மாயையின் சார்பு பற்றி உளதாகும் சிற்றறிவும் ஆகிய கேவல சகலங்கள் உபாதி பற்றி வருவன ஆகலின் செயற்கை எனப்படும். முதற்பொருளோடு ஒன்றிச் சத்திய ஞானானந்த மயமாய் நிற்றல் ஆற்று நீர்

கடல்நீரோடு கலந்து நிற்குமாறு போல அதற்கு இயல்பாதலின் இயற்கை எனப்படும். (216)

**பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்**
**கற்றற் றவர்கற்றுக் கருதிய கண்ணுதல்**
**சுற்றற் றவர்சுற்றி நின்றஎன் சோதியைப்**
**பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரே. 2864**

க–து: இது சிவஞானிகள் கரும நிருவாணம் பெற்று மோனிகளாய் நிற்பர் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் யான் எனது என்னும் பற்று அற்ற திருஉடையவர்களால் சார்பாகப் பற்றப்படும் பரம் பொருள் ஆவன்; அரிய நூல்களைக் கற்று ஆசு அற்றவர்கள் அருட்குரவன் திருவருளால் கேட்டுத் தியானிக்கும் நுதல் விழி நாட்டத்து இறைவனும் அவனே; பிறபொருள்களைத் தமக்குச் சூழலாகக் கொள்ளாத துறவோர் தம் மல இருள் தீரச் சூழ்ந்து நிற்கின்ற அருட்பெரும் சோதியும் ஆவன். இத்தகைய முதல்வனை சற்குரவன் திருவருள் பெற்று அடைந்தவர்கள் அவனை உணர்ந்து நிற்றலும் அவன் புகழைத் தக்கார்க்கு எடுத்துரைத்தலுமன்றிப் பிற செயல்களில் ஈடுபடார். அவர்களே பேசா அனுபூதிச் செல்வர்களாகிய மோனிகள் எனப்படுவர்.

வி–கு: பிதற்றுதல் – சிற்றறிவிற்குப் புலப்படும் கருத்தொழுங்குகளை முன்பின் முரணுமாறு பிறர்க்கு எடுத்துரைத்தல்.

'மோன மென்பது ஞான வரம்பு' என்னும் ஔவையார் வாய்மொழி உடன் வைத்து உணரத்தக்கது.

இதுகாறும் ஞான நெறியும் அதன் பயனும் உணர்த்தி, இனி இவற்றின் ஒழிபாக உள்ளனவற்றைக் கூறலுறுகின்றார் திருமூலர். (217)

## 17. சூனிய சம்பாஷணை
## (மறைபொருட் கூற்று)

ஒன்பதாம் தந்திரத்தின் மிக நீண்டதாகிய இப்பகுதியில் பற்பல பொருள்களையும் கலந்து பொருள் எளிதில் விளங்காத குறிப்பு உருவங்களில் வைத்து ஆசிரியர் மொழிகின்றார். அது பற்றி இப்பகுதிக்குச் சூனிய சம்பாஷணை என்னும் தலைப்பைப் பெரியோர் கொடுத்துள்ளனர். சூனியம் என்பது இன்மை, வரைந்து கூறப்படாமை என்னும் பொருளிலுள்ளது. இங்கே அது எளிதிற் புலப்படாமையை உணர்த்தி நின்றது. இதில் வரும் மந்திரங்களுக்குக் கருத்து இது தான் என வரை செய்தல் கூடா மையின், இவற்றிற்குப் பொழிப்புரையும் விசேடக் குறிப்பும் மட்டும் கொடுக்கப்படுகின்றன. அறிஞர்கள் மேலும் ஆய்ந்து உணர்க. இப்பகுதியின் பொருளைத் தெளிய உணர்ந்தோனே நூலை நண்கு உணர்ந்தோன் ஆவன் என்பது ஆசிரியர் கருத்துப் போலும்.

**காயம் பலகை கவறைந்து கண்மூன்றா**
**ஆயம் பொருவதோர் ஐம்பத்தோ ரக்கரம்**
**ஏய பெருமா னிருந்து பொருகின்ற**
**மாயக் கவற்றின் மறைப்பறி யேனே.** 2865

பொ—ரை: மக்கள் தம் உடம்பிலிருந்து வாழும் வாழ்க்கை இருவர் இருந்து ஆடும் கவறாட்டமாக உள்ளது. உயிருக்கு எதிராக மறைந்திருந்து ஆட்டத்தை ஆடுபவன் முதல்வன். இருவருக்கும் பொதுவாக உள்ள கவறாடும் பலகை

உடம்பாகும். அதில் கவறாடு கருவிகள் ஐந்துள்ளன (ஐம்பொறி கள்). இருந்தாடும் இடங்கள் மூன்று. அவை புருவ நடு, கழுத்து, இதயம் என்பவை (நனவு, கனவு, உறக்கம் என்னும் நிலைகள்). அகக்கருவிகளின் கூட்டம் இயங்குதற்கு நிலைக்களமாகிய அறை கள் எழுத்து ஐம்பத்தொன்றாகும். யான் ஐம்பத்தோர் அக்கரங் களாக விரியும் பைசந்தி, மத்தியமை, வைகரி என்னும் வாக்குக் களால் உண்டாகும் உணர்வு பற்றிப் பொறிகள் முதலிய கருவிக ளோடு இயங்கி வருவதை ஓரளவு அறியினும் என்னுள் மறைந் திருந்து இவற்றைக் கொண்டு எனக்கு எதிராக இறைவன் ஆடும் சூதாட்டத்தினை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை.

வி–கு: கண்மூன்று என்றவை நனவு கனவு உறக்கம் என்னும் மூன்று அவத்தைகளுக்கு இடனாகக் கூறப்படும் புருவ நடு, கழுத்து, நெஞ்சம் எனக் குறிக்கப்படுகின்றன. இந்நிலை களில் சித்தத்தின் இடமாகப் பைசந்தி வாக்கும், மனம் புத்தி அகங்காரங்களின் இட்னாக உன்னல் எனப்படும் மத்தியமை வாக்கும், பிராண வாயுவோடு வாக்கு எனப்படும் தொழிற் பொறியினால் வெளிப்படும் செப்பல் எனப்படும் வைகரியும் ஒருவாறு நம்மனோரால் அறியப்படுதலின், ஏனைய இரண் டனையும் ஒழித்துக் கண் மூன்று என்றனர். உயிர் இவ்வாக்குக்கள் மூலம் கருவிகளை இயக்கி இருவினைகளைச் செய்து அவ் வினைகளுக்கு ஈடாக இன்பத் துன்பங்கள் துய்த்துப் பிறந்திறந்து வருகின்றது. தன்கண் மறைந்துள்ள முதல்வனை உள் நோக்கிக் கண்டு அவன் கருத்தின்படி தன் செயல் அற்று நடப்பின், வினை நீங்கிப் பிறப்பிறப்பைக் கடக்கும்.

**கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்**
**வெள்ள வெளியாமென் றுந்தீபற**
**வீடு மெளிதாமென் றுந்தீபற**

என்னும் திருவுந்தியின் பொருளைக் கருதுக.

ஐம்பத்தோர் அக்கரம் என்றாரேனும், பதம், மந்திரம் என்பனவும் கொள்க. கவறு ஐந்து என்றது உபலக்கணம் ஆகலின், ஏனை அந்தக் கரணம், அக அந்தக் கரணம், தாத்து விகங்கள் என்பனவும் கொள்க.

கண் – மூன்று – இருந்தாடும் இடம் அகம், புறம் இரண்டன் உள் என மூன்று; ஒவ்வொருவனும் அகத்தை இடமாகக் கொண்டு எதிரில் உள்ளோனைப் புறத்தவனாகக் கண்டு கவறு பொருகின்றான். ஆயின் முதல்வன் அகம்புறம் என்னும் ஈரிடத்தும் உள்நின்று செலுத்துவோனாய் அவ்வக் கவற்றைத் திரோதான சத்தி ரூபமாய் நின்று ஆடுகின்றான். ஒவ்வொருவனும் எதிரில் உள்ள பொருளின் இயக்கத்தை மட்டும் கண்டு, தங்கண்ணும் எதிர் பொருளின் கண்ணும் மறைந்து நின்றாடும் முதல்வன் செயலைக் கண்டிலன் என்றலும் ஒன்று; இருவர் ஆடுகையில் மூன்றாம் ஒருவன் ஈரிடத்தும் நின்று ஆடுதலைக் கண்டிலர் என்றபடி. ஆயம் – வட்டம், மூவர் கூட்டம். (218)

**தூறு படர்ந்து கிடந்தது தூநெறி**
**மாறிக் கிடக்கும் வகையறி வாரில்லை**
**மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு**
**ஊறிக் கிடந்ததென் உள்ளன்பு தானே.** 2866

பொ–ரை: ஞானமெய்ந்நெறியாகிய திருவைந்தெழுத்து ஐய உணர்வு விபரீத உணர்வு என்னும் சிறு புதரால் மூடப் பெற்றுத் தன் இயல்பு திரியாது அன்றும் இன்றும் உள்ளது. அத் திரிபு ஐயங்களின் மாறி, அது காட்டும் நெறியில் நிற்கும் வகையை அறிவார் உலகத்தில் பலராக இல்லை. மாறி அந்நெறி நிற்கும் அறிவை ஆளும் அன்பர்க்கு என் உள்ளத்தில் எழும் அன்பு உள்ளூறிப் பெருகி நிற்கும்.

வி–கு: தூநெறி, நன்னெறி சன்மார்க்கம், ஞான மெய்ந் நெறி என்பன ஒரு பொருட் கிளவி. நன்னெறியாவது நமச்சி வாயவே, நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே, ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம் என்னும் மெய் உணர்ந்தோர் துணிபு பற்றித் தூநெறி என்பதற்குத் திருவைந் தெழுத்து எனவே பொருள் கொள்ளப்படும். தூறு ஆவன அதுவே மெய்ந்நெறி என்னும் தெளிவுணர்வை மயங்கச் செய்யும் வகையில் பிற மறைத் தொடர்களுக்குப் பலரும் கொடுத்துவரும் உயர்வு. மாறி என்பது அப்புதரை மாற்றி எனவும், சிவமுன்னாக மாறி எனவும் இரு பொருள் பயந்து நின்றது. கிடத்தல் – நிற்றல்.

**ஏதும் ஒன்றும் அறிவிலர் ஆயினும்**
**ஓதி அஞ்செழுத்தும் உணர்வார் கட்குப்**
**பேதமின்றி அவரவர் உள்ளத்தே**
**மாதும் தாமும் மகிழ்வர் மாற்பேறரே.**

என்பர் ஆசிரியர். ஆதலின் மாறி உணர்ந்து நிற்பவர் சிவனடியார் ஆதல் பற்றி என் உள் அன்பு ஊறி நிற்கும் என்றார்.

**ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியில்**
**சாறு படுவன நான்கு பனையுள**
**ஏறற் கரியதோர் ஏணியிட் டப்பனை**
**ஏறலுற் றேன்கடல் ஏழுங்கண் டேனே.** 2867

பொ–ரை: வேதாந்தம், சித்தாந்தம், யோகாந்தம், போதாந்தம், கலாந்தம், நாதாந்தம் என்னும் ஆறு வீதிகளும் சந்திக்கும் சந்தியில் சிவானந்தமாகிய சாற்றைத் தம்கண் கொண்டுள்ள காண்பான், காட்சி, காணப்படுபொருள், காட்டு என்னும் நான்கும் பிணைந்த பனைமரங்கள் உள்ளன. ஏறுதற்கு

அரியதாகிய சற்குருவின் உறுதிமொழி என்னும் ஏணியை அப்பனையின் மிது சார்த்தி ஏறிக் கண்டேன். கண்டது எழுகடல் அனைய பேரானந்தம் ஆகும்.

வி–கு: எழுகடல் என்பது ஆறாக வழங்கும் சமய நெறிகளும் அவற்றின் மேம்பட்ட சுத்தாத்துவித சித்தாந்த ஞான நெறியும் எனினும் அமையும். பிறவிக் கடல் ஏழு என்பாரும் உளர். இதற்குப் பிறர் எல்லாரும், ஆறுதெரு ஆறு ஆதாரம் எனவும், அகப்பட்ட சந்தி மூலாதாரம் எனவும், நான்கு பனை மூலாதாரத் தில் உள்ள நாலிதழ்த் தாமரை என்றும், ஏணி என்றதுசுழுமுனை என்றும் உரைப்பர். அவை உருவகத்திற்கு ஒவ்வாமை உணர்க. ஒருவர் நான்கு சந்தி என்றது புருவ நடுவிலுள்ள நாலிதழ்த் தாமரை எனவும் கூறத் துணிந்தனர். ஆறு தெருக்களை அறு சமய நெறி எனவும், அவற்றின் சந்தியிலுள்ள நான்கு பனையைச் செய்வான், செய்வினை, வினைப்பயன், சேர்ப்பான் என்னும் விதிப்பொருள் நான்கன் இணைப்பு எனவும், ஏணி என்றது சிவன்அருள் எனவும் கொண்டு உரைப்பினும் அமையும். அவ்வுரைக்குக் கடல் ஏழு என்றது பிறவிக் கடல் ஏழன் தன்மை என்றாவது, எழுகடலனைய சிவானந்தம் என்றாவது உரைத்தல் அமையும். காணுதல் – உண்மைப் பெற்றியை அறிதல் அல்லது கண்டு நுகர்தல். (220)

**வழுத்தலை வித்திடப் பாகல் முளைத்தது**
**புழுதியைத் தோண்டினேன் பூசனி பூத்தது**
**தொழுகொண் டோடினார் தோட்டக் குடிகள்**
**முழுதும் பழுத்தது வாழைக் கனியே.** 2868

பொ–ரை: பலரும் குடியிருந்த என் தோட்டத்தில் புகுதி யைத் தோண்டினேன்; பின் அக்குழியில் வழுதலை முளைத்தற் குரிய வித்தை வித்தினேன். அதிலிருந்து பாகற்கொடி படர்ந்து

பூசனிப்பூ மலர்ந்தது. அங்குக் குடியிருந்தோர் தமக்கு அது கெடுவது காட்டும் குறி என எண்ணித் தம் சிறு தெய்வங்களைத் தொழுதுகொண்டு ஓடிவிட்டனர். பின்னர் அம்மலரினின்றும் இன்பத்தைச் செய்யும் வாழைக்கனி பழுத்தது.

வி–கு: இங்குத் தோட்டம் என்றது தமது உணர்வாகிய நெஞ்சக் கமலம். அங்குள்ள புழுதியைத் தோண்டுதலாவது அவ்வுணர்வுகளைப் பயந்துவரும் தத்துவங்களின் இயல்பை ஆராய்ந்து காணல். வழு தலையை வித்துதலாவது வாசி யோகத் தோடு திருவைந்தெழுத்தை உள் ஊன்றி நிற்றல். பாகல் என்றது அநித்தியப் பொருள்களிற் பற்றுவையாமை. பூசனி பூத்தது என்றது திருவருள் விளக்கம். தோட்டக்குடிகளாவார் அஞ் ஞானத்தை உணர்த்தும் சிறப்பிலாரும் உலக விடயங்களும் ஆகும். வாழை பழுத்தது என்றது சிவப்பேறு. விதை ஒன்று விதைக்க வேறான கொடி அதனின்றும் தோன்றி, அதனின் வேறான பூ பூத்து, அதனின் வேறான பழம் பழுத்தது என்றது உலகத்திற் காணவொண்ணாத திருவருள் நிகழ்ச்சி என்பது உணர்த்தியபடி.

*ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்*
*ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்து*
*ஏனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்*
*ஆன கெடுப்பன அஞ்செழுத்துமே.*

என்னும் சம்பந்தர் திருமொழி இதனோடு ஒப்பித்துக் காணத் தக்கது. (221)

**ஐயென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர்**
**செய்யுண்டு செய்யின் தெளிவறி வாரில்லை**
**மையணி கண்டன் மனம்பெறின் அந்நிலம்**
15 **பொய்யொன்று மின்றிப் புகளளி தாமே.** 2869

பொ–ரை: நொய்மை என்னும் வித்திலிருந்து ஆனை விளையச் செய்துவரும் ஒரு நிலம் உள்ளது. அந்நிலத்தின் தெளி நிலையை அறிவார் இல்லை. திருநீலகண்டனை எண்ணும் மனத்தை ஒருவன் பெற்றால் அந்நிலமே பொய்த்தல் ஒன்றும் இல்லதாகிப் புகுதற்கும் எளிதாகி நிற்கும்.

வி–கு: இங்கு ஐ என்பது ஐது, நுண்ணிது என்னும் பொருளில் வந்தது. அஃதாவது மிக நுண்ணிதாகிய மாயை. ஆனை என்பது ஆனையை எனவும், ஆன் ← ஆன்மா, ஆனை ஆன்மாவை எனவும் பொருள்படும். செய் என்றது முதல்வனது திரோதான சத்தி எனப்படும் மறைப்பாற்றல். இறைவனது திருவடி எனப்படும் ஆற்றலை இடமாகவும் தாரகமாகவும் கொண்டு நிற்பனவே ஆன்மாவும் அதனோடு கூடியுள்ள மாயையும் ஆகும். ஆன்மா கேவல நிலையில் உள்ளபோது தன் இருப்பு உணரப்படாதது. இறைவன் திருவருள் மாயையைத் தொழிற்படுத்த அதன் காரியங்களை ஆன்மா பற்றி நின்று சகல நிலையை எய்தும்போது, ஆன்மாவின் இருப்பு உணரப்படுவ தோடு அதன் பக்குவ நிலையும் வளர்கின்றது. இக்கருத்தை 'ஐயெனும்வித்தில் ஆனை விளைப்பதோர் செய்யுண்டு' என்றனர் ஆசிரியர். சகல நிலையை எய்தி நின்ற ஆன்மாக்கள் இவ்வுண்மையினை உணர்ந்து இறைவனது உருவம் அருவுருவம் அருவம் என்னும் தடத்த நிலைகளை உட் கொண்டு வழிபட்டுவரின், அதுகாறும் தன்கண் மறைந்து நின்று தன் அறிவை வளர்த்து வந்த அத்திருவருள் ஆற்றல் தன் மறைப்பு நீங்கி அருளொளியாக, கருணையாக வெளிப் படும். உயிர் அவ்வருள் ஒளியைத் தனக்குச் சார்பாகப் பெற்று ஒன்றி நிற்பின், அந்நிலையே துரிய அருள்நிலை ஆகும். இத்துரிய அருள் நிலையையே புகல் எளிது ஆமே என்றனர். ஐ என்பதை ஐம்பூதம் எனக் கொள்வாரும் உளர். இம்மந்திரம்,

முத்தி முதலுக்கே மோகக்கொடி படர்ந்து
அத்தி பழுத்ததென் றுந்தீபற
அப்பழம் உண்ணாதே யுந்தீபற.

என்னும் திருவுந்தியாரோடு உடன் வைத்து உணரத்தக்கது. மாயையின் காரியங்களோடு கூடியே உயிர் அறியப்படுதலின், உயிரை மாயையாகிய வித்தினின்றும் விளைந்தது என்றார். எனினும் மாயையும், உயிரும் உயிர்க்கு ஆதாரமாகிய திருவருளும் அனாதி நித்தியப் பொருள்கள் என்பது கடைப்பிடிக்கத் தக்கது. (222)

**பள்ளச்செய் யொன்றுண்டு பாடச்செய் இரண்டுள**
**கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது**
**உள்ளச்செய் யங்கே யுழவுசெய் வார்கட்கு**
**வெள்ளச்செய் யாகி விளைந்தது தானே.** 2870

பொ—ரை: பிற வயல்களிலிருந்து தண்ணீரைப் பெறும் நிலையில் பள்ளத்தில் உள்ள வயல் ஒன்று உண்டு; என்றது சித்தம் மட்டும் உள்ள உறக்க நிலையை. அதற்குத் தண்ணீரைத் தருவன வாய் மேட்டில் உள்ள ஒளியுடைய வயல்கள் இரண்டு உள்ளன. பாடம் – ஒளி, என்றது மனம், புத்தி, ஆங்காரம் என்பவற்றின் தொழிற்பாடுகள் உள்ள கனவும், நனவும் என்பன. இம்மூன்றினிடத்தும் மறைந்து உள்நிற்கும் கள்ளச்செய் ஒன்று உளது, இஃது உறக்கம், கனவு, நனவு என்னும் மூன்று நிலைகளிலும் முறையே விந்து, அகர, உகர, மகர மூலமாகச் சித்தம் முதலிய அந்தக் கரணங்களைச் செலுத்தி நிற்கும் முதல்வனது திரோதான சத்தி; இது மேலைச் செய்யுளிலும் குறிக்கப்பட்டது. உள்ளம் எனப் படும் மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்பவற்றைச் சமப் படுத்தல், எருவிடுதல், நீர் பாய்ச்சல், வித்தல், களைகட்டல் என்னும் உழவுத் தொழிலைச் செய்வார்க்கு அம் மூன்றும்

பரமானந்த வெள்ளம் நிறைந்து சிவபோகம் விளையும் விளை நிலங்களாகிவிடும்.

வி–கு: உள்ளச்செய் யங்கே – ஆங்குள்ள உள்ளமாகிய வயலின்கண், அக்கள்ளச்செய் வெள்ளச் செய்யாகி விளைந்தது எனக் கொண்டு பொருள் உரைக்க. (223)

**மூவணை யேரு முழுவது முக்காணி**
**தாமணி கோலத் தறியுறப் பாய்ந்திடும்**
**நாவணை கோலி நடுவிற் செறுவுழார்**
**காலணை கோலிக் களருழு வாரே. 2871**

பொர்–ரை: மூன்றாக அணையும் ஏர் உழுநிலம் முக்காணியாகும். அவை முறைப்படுத்தப்படுதலால் தறியின்கண் பொருந்தும்படி பாயவல்லவை. நாவாகிய அணையைச் செய்து நடுநாடியில் உள்ள வயலில் உழாதவர் காலத்திற்கு அணைகோலுவாராய்க் களர் நிலத்தை உழுவோர் ஆவர்.

வி–கு: மூவணை ஏர் என்றது இடை, பிங்கலை, சுழுமுனை என்னும் மூன்றினும் அணையும் ஏர் என உயிர்ப்பையும், மூன்றாகிய பகடு அணைக்கப்பெற்ற ஏர் எனவும் பொருள்பட்டு நின்றது. முக்காணி என்றது மூன்றுகாணி என்னும் அளவினையும் முக்கோண வடிவாக உள்ள மூலாதாரத்தையும் குறித்தது. முறைப்படுத்துதலாவது உட்கொள்ளல் நான்கும் வெளிப்படுத்தல் எட்டும், அடக்குதல் பதினாறும் என்னும் கால அளவில் இடைகலையால் பூரித்துச் சுழுமுனையில்நிறுத்திப் பிங்கலையால் வெளிப்படுத்தலாகும். இங்ஙனம் செய்யின் குண்டலி சத்தி சுழுமுனை நாடியில் மேற் சென்று பல சித்திகளையும் அளவிற்கு எட்டாத உணர்வையும் தரும். நா அணை கோலலாவது நாவை வளைத்து நாநுனியால் மூச்சுக் குழாயை அடைத்தல் என்பர்.

அங்ஙனம் அன்றி நா அடியில் மூச்சைத் தடுத்து எனலும் ஆம். காலம் என்பது கால் என நின்றது. இதனால் தக்காரிடம் முறையறிந்து வாசியோகம் செய்வார் ஆயுள் நீளப் பெற்றுப் பிறவிப்பயன் எய்துவர் என்பதும், ஏனையோர் பயனில செய்து காலத்தை வீணே கழிப்பர் என்பதும் கூறப்பட்டன.

**ஏற்றம் இரண்டுள ஏழு துரவுள**
**மூத்தான் இறைக்க இளையான் படுத்தநீர்**
**பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடில்**
**கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே.** 2872

பொ–ரை: உடம்பின் ஆற்றலை இழப்பிக்கும் உயிர்ப்பின் செலவை நெறிப்படுத்தும் மூக்குத்துளைகளாகிய இரண்டு ஏற்றங்கள் உள்ளன. உடம்பின் ஆற்றல் குவிந்துள்ள பெருங்கிணறுகள் ஏழுள்ளன. மூத்தவனாகிய ஆங்காரம் என்னும் தத்துவம் அம் மூச்சை நடத்துகின்றது. அவ்வாங்காரத்தினின்றும் தோன்றிய மனம் விழைவு: வடிவத்தில் நின்று அம் மூச்சுப் பயனை உலக விடயங்களில் சேர்ப்பிக்கின்றது. இதனால் பெறலரும் நீர் போன்ற உயிர்ப்பு ஆற்றல் உறுதிப்பயனை வளர்த்துக் கொள்ள உதவாமல், வீணே செலவாகின்றது. இச்செயல் கூத்தாடும் தொழிலைக் கொண்ட விலைமகள் வளர்த்துவரும் கோழிக்குஞ்சு போல நிறைவு நிலையைப் பெறாமலும் வளர்த்தவட்குப் பயன்படாமலும் போதல்போல வீணே கழிகின்றது.

வி–கு: கூத்தி வளர்க்கும் கோழிக் குஞ்சுகள் அவளுக்கு விலை கொடுக்கும் கயவர்களின் மனம் போன போக்கில் அழிக்கப்படும். ஆதலின், அதனை உவமையாகக் கூறினார். இயமம், நியமம், இருக்கை, பிராணாயமம், தியானம் முதலிய யோக முறைகளைப் பின்பற்றுவோர்க்கு உயிர்ப்பாற்றல்

வீணாகாமல் உறுதி பயக்க வல்லதாம் என்பது கருத்து. மூத்தோன் என்றது இடைகலை எனவும், இளையோன் என்றது பிங்கலை எனவும் உரைப்பர். அது பொருந்துவதாகத் தோன்றவில்லை. பிராணவாயு ஆங்காரத்தால் செலுத்தப்படுவது என்பதும், வாயு அலைய மனம் அலையும், வாயு நிற்ப மனம் நிற்கும் என்பதும் நூல்களுள் கூறப்படுதலின், அவற்றையே மூத்தோன் இளை யோன் எனக் கொள்ளுதல் பொருத்தமாம். இனி ஹம்ஸம் என்னும் பேசா மறையில் ஹகாரம் உயிர்ப்பை விடும் என்றும், ஸகாரம் அடக்கும் என்றும் நூல்கள் கூறுதலின், மூத்தோன் என்றது ஹகாரம் எனவும், இளையோன் என்றது ஸகாரம் எனவும் கொள்ளுதலும் பொருந்துவதாம்.

ஹகாரம் சிவாட்சரமும் ஸகாரம் சத்தி அட்சரமும் ஆதலின், மூத்தோன் இளையோன் என்னும் உருவகம் பொருந் துதல் காண்க. ஏழு துரவு என்றது உயிர்ப்பாற்றல் குவிந்து நிற்கும் இடங்களை. அவை ஆறு ஆதாரங்களும் தலையும் என்பர். உடம்பின் மூலப் பொருள்களாகிய ஏழு தாதுக்களை அல்லது வாய், இரைப்பை, கணையம், கல்லீரல், சிறு குடல் என்பவற்றில் உள்ள ஐந்து சுரப்பிகளும் உடல் வளர்க்கும் பல்வகைச் சுரப்பி களும் இசைச் சுரப்பியும் எனக் கொள்ளுதல் அறிவியலுக்கு ஒத்ததாகுமா என்று அறிஞர்கள் சிந்திக்க. இருக்கை (ஆசனம்) என்னும் யோகப் பயிற்சி சுரப்பிகளை நெறிப்பத்திக் குருதி ஓட்டத்தையும் உயிர்ப்பின் இயல்பையும் நெறிப்படுத்துவதாகத் தெரிகின்றது. பேசாமறை உயிர்ப்பை யடக்கி நினைப்பாகிய சகலத்தையும் அதனை விடுத்து மறப்பாகிய கேவலத்தையும் விளைத்து வருகின்றது என்னும் ஞானநூற் கூற்றும் நினைக்கத் தக்கது. படுத்தல் – நெறிப்படுத்தல். மடைமாறுதல். (225)

**பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள**
**குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள**

**குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்**
**பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே. 2873**

பொ—ரை: தொழுவத்தில் (கன்றில்லாத) பசுக்கள் இருபத்து நான்கு உள்ளன என்றது ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கு உள்ளன என்றபடி. கன்றோடு கூடிய கறவைகள் மேலும் ஏழும் ஐந்தும் ஆக 12 உள்ளன என்றது வித்தியா தத்துவம் ஏழும் சிவதத்துவம் ஐந்தும் ஆக 12 உள்ளன என்றபடி. இவற்றுள் பிற் கூறிய ஏழும் உயிர்க்கு உடனிருந்து உதவுவன; ஐந்து அவற்றைச் செலுத்துவன. குட்டியோடு கூடிய பசுக்கள் எனப்பட்ட ஏழும், ஐந்தும் நிரம்பப் பால் கொடுப்பன; அஃதாவது அவற்றின் தொழிற் பாடு பற்றி நுணுகி உணர்வார்க்குத் தெளிய உணரப்படுவன என்றபடி. ஆயினும் பார்ப்பானுக்குப் பட்டிப் பசுக்களே காணப் பட்டுக் கொள்ளுதற்கு வாய்த்தன. ஏனைய பயனுடைய பசுக்கள் அவனால் காணப்படாமையால் கொள்ளப்படாதன ஆயின.

வி—கு: பட்டி – தொழுவம் அல்லது கள்ளத்தனமாய்த் திரிவன; பனவன் – ஈண்டு உயிரைக் குறித்தது அவன் ஆன்ம தத்துவத்தொகுதியினையே அறிவன் என்றபடி சாங்கியர் வைணவர் மாத்துவர்.. சுமார்த்தர் முதலியோர் சித்தாந்த சைவத்தில் ஆன்ம தத்துவம் அல்லது போக்கிய காண்டம் எனக் கூறப்படும் 24 தத்துவங்களையே உள எனக் கொண்டனர். ஏனையவற்றை அவர் அறியாமையால் கொண்டிலர். இஃது அவர்தம் ஆராய்ச்சிக்குறைவால் நேர்ந்தது எனவும் உணர்த்துகின்றார் திருமூலர். பனவன் – பார்ப்பான். (226)

**ஈற்றுப் பசுக்கள் இருபத்து நாலுள**
**ஊற்றுப் பசுக்கள் ஒருகுடம் பால்போதும்**
**காற்றுப் பசுக்கள் கறந்துண்ணுங் காலத்து**
**மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே. 2874**

பொ–ரை: ஈனப்பட்ட பசுக்கள் 24 உள்ளன. பால் ஊறும் பசுக்கள் கொடுக்கும் பாலின் அளவு சிறிதேனும் தன் உண்மை உணர்தற்குப் போதியதே ஆகும். ஆன்ம தத்துவங் களால் புத்தி தத்துவத்தின் கண் வந்த புலன் இன்பத்தினும், வித்தியா தத்துவங்களும் அவற்றைச் செலுத்தும் சிவதத்துவங் களும் தரும் ஆன்ம உணர்வு சிறந்தது என்றவாறு ஆயிற்று. காற்றாகிய பசுக்களைக் கொண்டு ஊற்றுப் பசுக்களினின்றும் பாலைக் கரந்து நுகரும்போது வேறாகிய ஆன்ம தத்துவங்கள் என்னும் பசுக்கள் அங்கு வருதலை யாம் அறியோம்.

வி–கு: இதனால் யோகப் பயிற்சியினால் ஆன்ம தத்து வங்கள் உயிர்க்கு வேறாதல் இனிது புலப்படும் என்பதும், சிவ தத்துவங்கள் வித்தியாதத்துவங்கள் என்பவற்றின் உண்மை புலப்படும் என்பதும், அந்நிலையில் விளங்கும் யோக அனுபவ இன்பம் மிகச் சிறப்புடையதென்பதும் உணர்த்தப்பட்டன. ஈற்றுப் பசுக்கள் – ஆன்ம தத்துவம். ஊற்றுப் பசுக்கள் – வித்தியா தத்துவங்கள், சிவதத்துவங்கள். காற்றுப் பசுக்கள் – வாயுக்கள் பத்து. வேற்றுப பசுக்கள் –புற விடயங்கள் காற்றுப் பசுக்கள் கறந்து உண்ணுதல் – வாசியோகம். (227)

**தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்**
**மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது**
**வட்டம் படவேண்டி வாய்மை மடித்திட்டுத்**
**தட்டான் அதனைத் தகைந்து கொண்டானே. 2875**

பொ–ரை: உயிர்க்கிழவனாகிய தட்டானது இல்லமாகிய உடம்பின் தலை எனப்பட்ட (முதன்மையான) மேல் மாடியில் மொட்டுப்போல எழுந்த சகச்சிராரம் செம்மையான யோகப் பயிற்சியால் (செம்பு கூடினமையால்) விரிவை (விளக்கத்தை) அடைந்தது. அது வட்டமாதற் பொருட்டு அதனுடைய முனை

களை மடித்து அதனை உயிர்க்கிழவன் தடுத்துக்கொண்டான். அதாவது ஒளி வட்டமாகிய பரஞ்சோதி தோன்ற வேண்டித் திருவைந்தெழுத்தை உச்சரித்து அதனைத் தனதாக்கிக் கொண்டான் என்றபடி.

வி–கு: வட்டம் – பிரணவம் என்பர். வாய்மை மடித்திடுதல் – சிகாரம் முதலாகிய ஐந்தெழுத்தில், நகாரம் வகாரத்திலும் மகாரம் சிகாரத்திலும் முன் அடங்க, பின் யகாரம் வகாரத்தில் அடங்க, அதன்பின் வகாரமும் சிகாரத்தில் அடங்க இங்ஙனம் ஐந்தெழுத்து ஓரெழுத்து ஆகும்படி சமாதி நிலையின் நிற்றல். இதனைத் திருவாதவூர் அடிகள் புராணத்தில் வரும்,

**தக்க அஞ்செழுத் தோரெழுத் துருவாந்**
**தன்மை கண்டருள் தரும்பெரு வெளிக்கே**
**புக்கு அழுந்தினர்**

என்னும் தொடரான் அறிக.

தட்டான் – தடுக்காதவன். இறைவன் வினைக்கீடாக உடம்பைக் கொடுக்கத் தனக்குச் சுதந்திரம் இன்மையின் அதனைத் தடுக்க மாட்டாதவன் என்றபடி. தகைதல் – வெளியே செல்லாமல் தடுத்துக் கொள்ளுதல். (228)

**அரிக்கின்ற நாற்றங்கால் அல்லற் கழனி**
**திரிக்கின்ற வொட்டஞ் சிக்கெனக் கட்டி**
**விரிக்கின்ற நல்லான் கறவையைப் பூட்டில்**
**விரிக்கின்ற வெள்ளரி வித்துவித் தாமே.** 2876

பொ–ரை: நடவுகளை எடுத்து அரியாகக் கட்டுகின்ற நாற்றங்காலாகிய உடம்பை நரை, திரை, மூப்பு என்னும்

துன்பங்கள் விளையும் கழனியாக மாற்றுகின்ற, இகலி நடக்கும் ஓட்டம் எனப்படும் உயிர்ப்பைத் திண்ணமாகக் கட்டி, அதனோடு கட்டப்படும் கறவையாகிய நல்ல பசுவைப் பூட்டினால் எரு பரப்பி விதைக்கும் வெள்ளரி வித்தும் வரன் என்னும் வைப்பிற்கு ஓர்வித்தாம்.

வி–கு: திரிக்கின்ற – மாறுபடுத்துகின்ற. ஓட்டம் – இடை பிங்கலைகளில் மாறி 12 அங்குலம் மீளுவதாகிய உயிர்ப்பு அதனைச் சிக்கெனக் கட்டுதலாவது வளி நிலை விதிப்படி இயக்கி நிறுத்துதல். நல்லான் கறவை என்றது மனத்தை. நல்ல ஆனையும் கறவையும் பூட்டில் எனினும் அமையும். நல்லான் – எருது; கறவை – மிகக் கறக்கும் காரான், எருமைப் பகடு. இப்பொருட்கு நல்லான் என்பது மனம். கறவை என்பது வியாக்கரம் எனக் கொள்க. வெள்ளரிவித்து என்றது சிவபீஜம் போன்றவற்றை. சிவபீஜம், பஞ்சதசி, சோடசி என்பவற்றின் கலைகளைப் பிராணா யாமத்தோடு சுழுமுனை நாடியில் உந்திவரை, பின் இதயம்வரை, பின் புருவநடுவரை, பின் உச்சித்துளைவரை, பின் துவாத சாந்தம் வரை என்றாற்போல உதான வாயுவினால் எழுப்பிக் குறிலாக நெடிலாக அளபெடையாக அகத்தே எண்ணுதல் உலக போகத் தையும் வீட்டையும் ஒருங்கு பயக்கும் என நூல்கள் கூறும் உண்மை கருதத்தக்கது.

***உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்***
***வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து.***

என்னும் திருக்குறள் உடன் எண்ணுதற்குரியது. மனத்தைக் கறவை நல்ஆன் என்றார். அது செம்மைப்பட்டபோது பல்வகை நலங்களும் சுரத்தற்கு இடம் ஆதலின், வெள்ளரி வித்து என்றது பீஜாக்கரங்களை. விரிக்கின்ற – நூல்களால் விரித்து ஓதப்படு கின்ற. வெள்ளரி வித்து என்றதை விந்துவாகிய உயிர் வித்து எனக் கூறுதலும் உண்டு. (229)

**இடாக்கொண்டு தூவி எருவிட்டு வித்திக்**
**கிடாக்கொண்டு பூட்டிக் கிளறி முளையை**
**மிடாக்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கார்**
**கிடாக்கொண்டு செந்நெல் அறுக்கின்ற வாறே.2877**

உ–ரை: எருவிட்டுக் கிடாக்கொண்டு பூட்டிக் கிளறித் தூவி இடாக்கொண்டு வித்தி முளையை மிடாக் கொண்டு சோறட்டு என மாற்றி உரைக்க.

பொ–ரை: உள்ளமாகிய வயலில் மெய்ம்மையாகிய எருவை விரித்து கல்வி கேள்விகளாகிய கிடாய்களை ஆய்வு என்னும் ஏரில் பூட்டி உழுது, விருப்பமாகிய நீரை இறைத்து மறைமொழிகளாகிய இடாவை (கூடையை) ஏந்தி, பத்தி வித்தை இட்டு ஆர்வநீர் பாய்ச்சி, பொய்ம்மையாகிய களைகளை வாங்கி, சிவம் என்னும் முளையை வளர்க்க; வளர்த்தால் அஃது அருளென்னும் கதிர் பரப்பிச் சிவபோகம் என்னும் விளைவைத்தரும். அதனை மோனமென்னும் தற்போத மற்ற உணர்விற் கொண்டு சுவானுபவமாகிய சோறாக அட்டு உண்ணுவர் பெரியோர். இங்ஙனமின்றி, கல்வி கேள்விகளாகிய கிடாக்களை மட்டும் கொண்டு செந்நெல்லை அறுப்போம் என்பார் எங்ஙனம் பயன் எய்துதல் கூடும்? கூடாது என்றபடி.

வி–க:

**மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின்**
**மொழியாத தனையும முட்டின்றி முடித்தல்**

என்னும் உத்தியான் நீர்பாய்ச்சல் முளை, கதிர் பரப்பி மணி முதிர்தல் முதலியனவும் உடன் கொள்ளப்பட்டன. இதற்குப் பிறவாறும்உரைப்பர். (230)

**விளைந்து கிடந்தது மேலைக்கு வித்தது**
**விளைந்து கிடந்தது மேலைக்குக் காதம்**
**விளைந்து விளைந்து விளைந்துகொள் வார்க்கு**
**விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே.** 2878

பொ–ரை: மேல் வரும் பிறவிக்கு வித்தாகிய வினை இப்பிறவியிலேயே விளைந்து புத்தியின்கண் கிடந்தது. மேற் பிறவியில் நுகர்ச்சிக்கு ஏதுவாகிய வினையும் இப்பொழுதே விளைந்து புத்தியின்கண் கிடந்தது காதம் – கள், அஃதாவது நுகர்ச்சி. பிறவி தோறும் தோன்றி முன்வினைப்பயனை யான் எனது என்னும் தற்போதத்துடன் நுகர்ந்து வருவார்க்கு அந்நுகர்ச் சியில் விளையும் விருப்பு வெறுப்பு என்னும் காரணத்தினால் மேலைக்கு வித்தாக மூவகைப்பட்ட நுகர்ச்சிக்குக் காரணமாகிய வினை விளைந்து சஞ்சிதமாய்க் கிடப்பதாயிற்று.

வி–கு: மேலைக்கு வித்து என்றது பின்வரும் உடம்பிற் கும் அதன் சாதி ஆயுள் என்பவற்றிற்கும் ஏதுவாகிய வினையைக் குறித்தது. இரண்டாம் அடியில் காதம் என்றது நுகர்ச்சிக்கு ஏதுவாகிய வினையைக் குறித்து நின்றது. முக்காதம் என்றது சாதி, ஆயுள், போகம் என்னும் மூன்றற்கும் ஏதுவாய வினையைக் குறித்து நின்றது. பிற்செயாது அனுபவிப்பது இன்று என்பது ஞான நூல்களின் துணிபு.

முன்னை வினைப்பயனை ஒருவன் நுகரும்போது அதற்குத் துணைக்காரணமாக அவன்கண் விருப்பு வெறுப்போடு கூடிய முயற்சி உளதாகும். அம்முயற்சியே மேலைக்கு வினையாம். கொள்வார்க்கு என்றதில் கொள்ளுதல் என்பது விருப்பு வெறுப்புடன் நுகர்தலைக் குறித்து நின்றது. இனிப் பிறர் உரைக்குமாறு: திருவடிப்பேறு விளைந்து கிடந்தது; காதம் (அமுதக் கேணி) விளைந்து கிடந்தது; முக்காதம். சோம சூரிய

அக்னி மண்டல அமுதம் (விளைந்து கிடந்தது); பொருந்துமேற் கொள்க. (231)

**களருழு வார்கள் கருத்தை யறியோம்**
**களருழு வார்கள் கருதலு மில்லை**
**களருழு வார்கள் களரின் முளைத்த**
**வளரிள வஞ்சியின் மாய்தலு மாமே. 2879**

பொ—ரை: களர் நிலத்தில் உழுவதுபோலப் பயனற்ற செயல்களைப் பலர் செய்து வருகின்றனர்; அவர் ஏன் அச் செயலைப் புரிகின்றனர் என்று நமக்கு ஆய்ந்து அறியக்கூட வில்லை. அங்ஙனம் வீண் செயலைப் புரிபவர்களும் தம் குறிக் கோளைப் பற்றி எண்ணுவதாகக் காணப்படவில்லை. களர் நிலத்தில் முதற்கண் வளரத் தொடங்கும் இளங்கொடி விரைந்து மாண்டு ஒழிதல் போல, வீண் செயலைச் செய்வாரும் அங்ஙனம் மாய்ந்து அழிதலும் உளதாகின்றது. இவர் செயலுக்கு முன்னைத் தீவினைப் பயனே காரணம். அத்தீவினைப் பயனை நீக்கிக் கொள்வதற்கு இறைவழிபாட்டை மேற்கொள்வார்களாக.

வி—கு: பாட்டில் அடங்கியவற்றின் மேலும் எழுதியவை குறிப்பெச்சத்தால் பெறப்பட்டவை. (232)

**கூப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்(து)**
**ஆப்பிடு பாசத்தை யங்கியுள் வைத்திட்டு**
**நாட்பட நின்று நலம்புகுந் தாயிழை**
**ஏற்பட இல்லத் தினிதிருந் தானே. 2880**

பொ—ரை: அழைத்தலை ஏற்றுக் கொள்ளாத குறு நரியைப் போன்ற மனம் தங்கி உழலும் சிறு குடில் போன்ற உடம்போடு தன்னைப் பிணிக்கும் வினைப் பாசத்தை மெய்ந் நூல்

நெறியாகிய அ்க்னியில் இட்டு அழியச் செய்து, பல நாட்கள் நன்னெறியில் நிற்றலினாலே உயர் ஞானமாகிய ஆயிழையாள் காணப்பட, அவள் திருவருளால் முதல்வன் திருவடியாகிய இல்லத்துச் சீவனாகிய மகன் இனிதிருந்தான் என்றபடி.

ஆயிழை – திருவருள். ஏற்படல் – சினமருவு திரோ தாயியாக இருந்து மலத்தைச் செற்றுவந்த அருள் கருணையே யாகி நயந்து நிற்றல்.

வி–கு: இம்மந்திரம் உயிர் சகல நிலையினின்றும் சுத்த நிலையை எய்தி வீடு உறுமாற்றைக் கூறுகின்றது. சிறு குடிலில் குறு நரியே துணையாக இருந்த சிறுமகன் பன்னாள் நன்னெறியில் நின்று உழைத்து, திருமங்கையை மணந்து உயர்ந்த வீட்டகத்தே வாழ்கின்றான் என உருவகித்துள்ளார் அங்கி வினைகளை நீறாக்குவனவாகிய சிவபுண்ணியச் செயல்கள். சீலம் நோன்பு செறிவு அறிவு எனப்படும் சரியை, கிரியா யோக ஞானங்கள். யாப்பிடு என்பது ஆப்பிடு என வந்தது. (233)

**மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்**
**குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ**
**உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன்**
**முலைமேல் அமிர்தம் பொழியவைத் தானே. 2881**

பொ–ரை: செம்பொருள்: மலையின்கண் உள்ள மேகம் நீரைச் சொரிய, காட்டிலுள்ள மான் துள்ள, அதனால் குலையி லுள்ள காய்களில் கொழுத்த கனி கீழே விழுந்தது; அது விழ, அக்காட்டில் இருந்த கருமான் தன் உலையில் இருந்த பொருள் என்று கருதி, காட்டில் தண்ணீர் ஊற்றுதற்கு எடுத்து வைத்தான் என்றபடி. கொல்லன் – கருமான், உறுப்பு – இரும்பால் ஆகியது ஒரு பொருள். பழம் சிவந்திருத்தலின், அதைப் பழம் என்று

உணராது, தன் தொழிற்பயிற்சி பற்றிக் காய்ச்சிய இரும்பு உருளை எனவே கருதினன். முலைமேல் – முல்லைமேல், முல்லை – காடு, மேல் – ஏழான் உருபு; பக்கத்தில் என்பது பொருள். அமிர்தம் – தண்ணீர்.

குறிப்புப் பொருள்: திருமலை எனப்படும் திருக்கயி லையில் கைம்மாறு கருதாது பொழியும் மேகத்தைப் போல அரு ளாசிரியனாய் முதல்வன் எழுந்தருளியிருந்து தன் கருணையை வழங்க, அதனால் நான்கு கூறுகளாகிய வேதம் (மான்) துள்ளி உலகில் பரவிற்று. அங்ஙனம் பரவுகையில் கொத்தாக இருந்த மறை மொழிகளுள் எப்பொருளையும் தன்கண் அடங்கக் கொண்டிருந்த வளப்பமுள்ள பழமாகிய நமச்சிவாயக்கனி உலகத்தினர்க்குக் கிடைக்கும்படி எளிவந்தது. அறிதுயிலாகிய யோகிருந்த கருமானாகிய திருமால் அதனைத் தன்அகத்தே அங்கி மண்டலத்திற்கு மேல் உள்ள சூரிய மண்டலத்தில் எழுந் தருளும் முதல்வன் உருவெனக் கொண்டு முலைக்கு மேல் எனப்படும் தன் உள்ளத்தில் சிவானந்தப் பெருக்கு எழுமாறு வைத்தனன் என்றபடி.

வி–கு: கொல்லன் – கருமான், திருமால். கருமான் மரு கனை என்னும் கந்தர் அலங்காரம் காண்க. மால் மான் என நின்றது. உலை –அக்கினி மண்டலம், உறுப்பு – உடம்பு. ஆகுபெயர். அதா வது சிவன் திருவுரு. திருவைந்தெழுத்து இறைவன் திருவுரு வாதலை உண்மை விளக்கத்திற் காண்க. ''வந்த கூற்று அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே'', ''ஓடிச் சென்று உருவம் காண்ட லும் நாடினேன்; நாடிற்று நமச்சிவாயவே'' என்னும் தேவாரமும் காண்க. கொழுங்கனி என்றது திருவைந்தெழுத்தை. அது,

**ஒன்றுகண் டேனிவ் வுலகுக் கொருகனி**
**நன்றுகண் டாயது நமச்சிவா யக்கனி.**

என்னும் திருமந்திரத்திற் காண்க.

**வேத மான்மறி ஏந்துதல் மற்றதன்**
**நாதன் நான்என நவிற்று மாறே**

என்னும் திருவொற்றியூர் ஒருபா ஒருபதின் கூற்றால் மான் மறையை உணர்த்துதல் காண்க. குலையிலுள்ள பிற காய்கள் - பிற மந்திரங்கள். திருமால் மோகினியும் ஆதலின், அவர் உள் ளத்தை முலைமேல் எனக் குறித்தனர். பழத்தை அதன் இன்சுவை மட்டுமன்றி ஒளியும் அழகும் மென்மையும் கருதி மார்பினில் அணைத்துக் கொண்டனர் என்பதும் குறித்து நின்றது. இஃது ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும் முப்பொழுதேத்திய நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை என்னும் புராண வரலாற்றை அடிநிலை யாகக் கொண்டது.

**போதன் போதனகண் ணனுமண்ணறன்**
**பாதந் தான்முடி நேடிய பண்பராய்**
**யாதுங் காண்பரி தாகி யலந்தவர்**
**ஓது நாம நமச்சி வாயவே.**

என்பதும் காண்க. (234)

**பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு**
**மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன**
**மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்**
**பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே.** 2882

பொ-ரு: உயிர்க்கு உலக நுகர்ச்சிக்கு இடனாக உள்ள உடம்பில் பால் சொரியக்கூடிய பசுக்கள் ஐந்து உள; இவை ஐம்பொறிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. இவற்றை நெறிப்படுத்திச் செலுத்துவார் இன்மையினாலே மயங்கி எங்கும் திரிவனவாக உள்ளன. அதனால் பாலும்

கொடாது உள்ளன. இப்பசுக்களை நெறிப்படுத்துவோர் உளராகி இவற்றின் வெறியும் அடங்கி நிற்பின் இவை நல்ல பாலைக் கொடுப்பனவாகும்.

வி–கு: மனம் நன்னெறிக்கண் சென்று பொறிகளையும் நல்வழிப்படுத்தின் இப்பொறிகள் உயிர்க்கு உறுதி பயக்கக்கூடிய சிவபுண்ணியச் செயலுக்குத் துணையாய் நிற்கும் என்றபடி. 'கண்காள் காண்மின்களோ' என்றாற்போன்ற அருள்மொழிகளை எண்ணுக. 'சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ நன்றின்பால் உய்ப்ப தறிவு' என்னும் திருக்குறளும் உடன் வைத்து நோக்குதற்கு உரியது. உயிர் உலகையும் முதல்வனையும் பார்க்கும் இயல்பினது ஆதலின், பார்ப்பான் எனப்பட்டது. பார்ப்பான் பசு மேய்க்காதவன் ஆதலின் மேய்ப்பார் வேறொருவர் வேண்டும் என்றபடி. அவ்வொருவர் உயிரால் நூல் நெறியில் நிறுத்தப்படும் மனமே ஆகும். பார்ப்பான் என்றது அயன் எனவும், அவன் படைத்த உடம்பு அகம் எனவும், மேய்ப் பாரென்றது முதல்வன் எனவும் உரைப்பாரும் உளர். (235)

**ஆமாக்கள் ஐந்தும் அரியேறு முப்பதும்**
**தேமா இரண்டொடு திப்பிலி யொன்பதும்**
**தாமாக் குரங்கொளிற் றம்மனத் துள்ளன**
**மூவாக் கடாவிடின் மூட்டுகின் றாரே.** 2883

பொ–ரை: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் காட்டுப் பசுக்களாகிய புலன் ஐந்தும், ஆன்ம தத்துவம் 24ம் புருடன்ஒழிந்த வித்தியாதத்துவங்கள் 6ம் ஆகிய 30 அரியேறுகளும், இருவனையாகிய தேமா 2ம், சிவதத்துவங்கள் 5ம் வாக்கு 4ம் ஆகிய திப்பிலி 9ம் புருடன் செலுத்தும் தாவும் மாவாகிய குதிரையின் குளம்பு ஒலியைக் கேட்பின், தம்தம் இயல்போடு அடங்கி நடக்கின்றன; அங்ஙனமன்றி அப்

புருடன் மூவாத அவ்வென்றும் கடாவை அதன் இயல்பில் செல்ல விடுவான் எனின், அத்தத்துவங்கள் அனைத்தும் இகலிப் போரை மூட்டி உடம்பை அழிக்கின்றன.

வி–கு: ஆன்ம தத்துவம் 24 ஆவன: பூதம் 5 அவற்றின் காரணமாகிய நுண்பூதம் 5, இருவகைப் பொறிகள் 10, மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்னும் அகக்கருவிகள் 4 ஆக 24. புருடன் ஒழிந்த வித்தியா தத்துவம் ஆறாவன; காரியமாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்பன. திப்பிலி – திப்பி + இலி. குற்றம் இல்லாதவை. ஆணவத்தின் கலப்பு இல்லாத சுத்த மாயா காரியங்கள்; அவை சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை என்னும் 5ம், இவற்றைப் பற்றி நிகழும் சூக்குமை, பைசந்தி, மத்தியமை, வைகரி என்னும் வாக்கு 4ம் ஆகிய 9. சுவை முதலியன முன்னர் இனிமை பயந்து பின் கொல்வன ஆகலின், ஆமாவாக உருவகிக்கப்பட்டன. ஆமா நாவால் இனிமை தோன்ற நக்கிக் கொல்லும் என்பர். தேமா என்பது மரமேனும் ஆமா அரிமா தாமா என்பவற்றோடு ஒப்ப மா என நின்றது.

இருவினைப் பயனை உயிர் விரும்பி எண்ணுதலின் மா. தேமா (தித்திக்கும் மா) எனப்பட்டது. உபநிடதமும் ஒரே மரத்தில் இரண்டு பறவைகள் பிரியாமல் நட்புடன் வாழ்கின்றன; அவற்றுள் ஒன்று இனிய அரசக் கனியை விரும்பி நுகர்கின்றது, மற்றொன்று நுகராமல் பார்த்துக் கொண்டிருக்கிறது எனக் கூறுதல் நோக்கத்தக்கது. தாமா –தாவும் மா, பாய்மா, குதிரை, வாசி; குரம் – குளம்பு ஒலி, அடிபெயர்க்கும் ஓசை. அதாவது வாசி யோகத்தில் நிகழும் அசபையின் ஒலி. உயிர்க்கிழவன் வாசியின் மீது ஊர்ந்து சென்றால் ஆமாவும் அரியேறும் அடங்கி நிற் கின்றன. காரான் கடாவை இவர்ந்து செல்லின் அவை குழப் பத்தை மூட்டுகின்றன.

மாவும் திப்பிலியும் அஃறிணைப் பொருளவேனும் போர் மூட்டுதலின் மூட்டுகின்றாரே என அவற்றின் தொழி லாண்மை கருதி உயர்திணையுவாக உபசரித்தார். மூவாக்கடா – மூத்தல் இல்லாத காரான்கடா; அஃதாவது ஆரா இயற்கை அவா. கடா உயிர்ப்பை விடுத்தல் எடுத்தல்களாகிய இரண்டும் எனினும் அமையும். தம் மனத்து உள்ளன – தம் நினைவோடு உயிர்க் கிழவனைத் தாக்காமல் அடங்கி உள்ளன. மனம் – நினைவு 'இதற்குப் பிறர் உரைக்குமாறு ஆமா ஐந்து – பிராணாதி வாயுக்கள், முப்பது = 3 + 10 = 13, பொறிகள் 10, மனம் முதல் 3, திப்பிலி 9 – 9 நற்செயல்கள் (வரையறைப் படாதவை) தேமா இரண்டு – இன்பத் துன்பம்; இருவினையொப்புவரின் திருவடிப் பேறு கிடைக்கும்; கடாவாகிய வயிராக்கியத்தை விட்டால் காமாதி மூளும்' பொருந்துமேற் கொள்க. (236)

**எழுதாத புத்தகத் தேட்டின் பொருளைத்**
**தெருளாத கன்னி தெளிந்திருந் தோத**
**மலராத பூவின் மணத்தின் மதுவைப்**
**பிறவாத வண்டு மணமுண்ட வாறே.** **2884**

பொ–ரை: மெய்க் குரவனுடைய அருள்பெறாத ஒருவன் மெய்யுணர்ந்தேன் எனக் கூறுதலும், பேரின்பம் துய்த்தேன் என எடுத்துரைத்தலும் தெருட்சி எய்தாத கன்னி ஒருத்தி மயிலிறகால் எழுதப்படாத தாழை மடலைக் கைக் கொண்டு அதன் பொருளைத் தெளியுமாறு விளக்குகின்றேன் என்பதனையும், பிறவாத வண்டு மலராத பூவிலுள்ள மதுவை மணத்தால் அறிந்து நுகர்கின்றது என்பதனையும் ஒக்கும். பொய் என்பது கருத்து.

வி–கு: ஆறு உவம உருபு. உவமை மட்டுமே பாட்டிற் கூறப்படுதலின், அதற்குரிய பொருள் விரித்துரைக்கப்பட்டது. பொருள் – உவமேயம்.

தெருளாதன் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரின்
அருளாதான் செய்யு மறம்

என்னும் திருக்குறளோடு இது புடைபட வைத்து நோக்கத் தக்கது. இனி உவமையாற் குறித்த உண்மை வருமாறு: பிறவாத வண்டு ஒரு காலத்தில் தோன்றாது என்றும் உள்ளதாகிய உயிர். மலராத பூ - முன்னே குவிந்திருந்து பின் மலராத என்றும் எங்கும் நிறைந்து ஒளிரும் இறைவன் திருவடி மலர் என உபசரிக்கப்படும் பேரின்ப ஒளி. அது போதம் என்றும் இன்பம் என்றும் இருதிறப் படும். போதம் அருளொளி எனவும் இன்பம் சிவம் எனவும் கூறப்படும்.

மணத்தால் மதுவை நுகர்தல் திருவருளால் பேரின்பத் தைத் தலைப்பட்டு அழுந்தி நுகர்தல். இதுவே வீட்டின்பம் எனப்படும். திருமூலர் காலத்து எழுத்தென்பது புத்தகத்தால் வண்ணம் தோய்த்துத் தாழை மடலில் எழுதுவது. புத்தகம் - மயில் இறகு. இங்கே எழுதாத ஏடு என்பது முதல்வனது வினை யின் நீங்கி விளங்கிய அறிவு எனப்படும் திருவுள்ளம். அதன் பொருளைத் தெருளாத கன்னி ஓதுகின்றாள் என்பது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை என்றாற்போல, பருவங்கள் எய்தாமல் என்றும் முதல்வன் இடத்து உள்ள கன்னி எனப்படும் அவனது சங்கற்பமாகிய திருவருட்சத்தி. சத்திநிபாதத்து உத்தமர் களுக்கு அத்திருவருள் சற்குருவின் வடிவிற்போந்து உயர்ந்த பேருண்மைகளை அவர் தம் தூய உள்ளத்தில் தோற்றுவிக்கும்.

இங்ஙனம் நிறைமொழி மாந்தர்தம் உள்ளத்தில் அருள் நாதத்தால் விளங்கும் உணர்வு ஒழுங்குகளைச் சொற்செய்து மறைகளாக மொழிவர் அங்ஙனம் மொழியப் பெற்றவையே எழுதாக்கிளவி எனவும், கேள்வி எனவும், வேதம் எனவும், திருமுறை எனவும் உலகில் வழங்கும். இத்திருமுறைகளின்

உள்ளீட்டை அருள் வழி நின்று ஓதி உணர்வோனே அரிய கற்று ஆசு அற்றான் எனப்படுவன். இம்மந்திரத்தின் முன்னிரண்டு அடியின் உருவகம் திருமூலரால் முன்னரே தரப்பட்டுள்ளது; அது

**ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி**
**வேடம் படிகம் விரும்பும்வெண் டாமரை**
**பாடுந் திருமுறை பார்ப்பதி பாதங்கள்**
**சூடுமின் சென்னிவாய்த் தோத்திரஞ் சொல்லுமே.**
**–(திருமந்திரம் 1067)**

எனவரும். (237)

**போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்தும்**
**கூகின்ற நாவலின் கூழைத் தருங்கனி**
**ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவரும்**
**வேகின்ற கூரை விருத்திபெற் றாரே.** 2885

பொ–ரை: நுகர்ச்சியால் அழிவதாகிய நிலைபெறாத பிராரத்த விளைவும், அந்நுகர்ச்சி பற்றி மேல் வந்து விளையும் உலகப் பயனைத் தருவதாகிய ஆகாமிய வினையாகிய வித்தும் கண்ணைப் பறிக்கின்ற நாவல் கனியினது வெளிச்சத்தையும் உள்வித்தும் போன்றவை; தம் முயற்சியால் விளையும் பசிய பயிரின் பயனாகிய சோற்றை நுகர்ந்து வரும் ஐவரும் தாம் இருந்து வாழும் தீப்பொறியால் விரைந்து கெடும் சிறுகுடிலாகிய உடம்பில் தங்கிஇங்ஙனம் தம் உடம்பிற்கு வேண்டிய விருத்தியைப் பெற்று வருகின்றனர்.

வி–க: கூவுகின்ற என்பது கூகின்ற எனக் குறைந்து நின்றது. கூவுதல் – கவனத்தைத் தன்மாட்டுத் திருப்புதல். ஆகின்ற பைங்கூழ் என்றது உயிர் தன் முயற்சியினால் வினை

யைப் பெருக்கி அதன் பயனை நுகர்ந்து வருதற்கு மற்றும் ஓர் உவமை. ஐவர் என்றது உடம்பில் இருந்து வாழும் ஐம் பொறிகள். இன்பத் துன்ப நுகர்ச்சியை உடையதும் வினையைச் செய்வதும் உயிரேயாயினும், அது தன்னை உடம்பிற்கும் ஐம் பொறிகளுக்கும் வேறாக உணராமையால் அந்நுகர்ச்சியினையும் உடம்பையும் தொடர்ந்து பெற்று வருகின்றது எனக் கூறினார் ஆயிற்று. தன்னை வேறு உணரின், வினைசெய்தலின்றித் திருவடி கூடும் என்பது கருத்து. விருத்தி – உடல் விருத்தி. உடல் வளர்ப் பிற்கு வேண்டிய பொருளும் பொன்னும். கூழ் – மேற்சதை – பைங்கூழ் பயிர். அஃது ஆகு பெயராய்ச் சோற்றை உணர்த்திற்று. நுகர்ச்சி ஐம்பொறிகளால் தொடங்குதலின் உண்ணும் ஐவர் என்று உபசரித்தார். பொய் – நிலையாதது.

**மேலைக்கு வித்தும் ஆகி**
**விளைந்தவை உணவும் ஆகி**
**ஞாலத்து வருமா போல**
**நாம்செயும் வினைகள் எல்லாம்**
**ஏலத்தான் பலமாச் செய்யும்**
**இதம்அகி தங்கட்கு எல்லாம்**
**மூலத்தது ஆகி என்றும்**
**வந்திடும் முறைமை யோடே.**

என்னும் சிவஞான சித்திச் செய்யுள் நோக்குக. (238)

**மூங்கில் முளையில் எழுந்ததோர் வேம்புண்டு**
**வேம்பினிற் சார்ந்து கிடந்த பனையிலோர்**
**பாம்புண்டு பாம்பைத் துரத்தித்தின் பாரின்றி**
**வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே.** 2886

பொ–ரை: மூங்கில் முளையாகிய பராசத்தியில் வேம்பு எனப்படும் திரோதானசத்தி உண்டு. அவ்வேம்பைச் சார்பாகக்

கொண்டு ஒரு பனையும் அதன்கண் ஒரு பாம்பும் இருந்தன. இங்கே பனை என்றது பனை விதையை அதாவது மாயை கன்மங்களை; அப்பனையில் உள்ள பாம்பு என்றது அம் மாயையை வியாபித்து நிற்கும் குண்டலிசத்தியை; பாம்பைத் துரத்திப் பனையின் முளையைத் தின்பார் இலர். இல்லாமையால் அப்பனை விதை வேம்பின்கண் கிடந்து முளையைத் தோற்றுவிக் கின்றது என்றபடி.

வி–க: மூங்கில் – பரம்பொருள். மூங்கில் மூளை – அதன் கண் முளைக்கும் பராசத்தி, அதனைச் சார்ந்து திரோதான சத்தியும் அச்சத்தியைச் சார்பாகக் கொண்ட மாயை கன்மங்களும் குண்டலினியும் உள்ளன. கன்மம் மாயையாகிய பொருளைப் பற்றுக்கோடாகக் கொள்ளுதலின் அவ்விரண்டினையும் ஒன்றாய் அடக்கிப் பனை என்றார். வேம்பு கிடந்து வெடித்தலாவது மாயை திரோதான சத்தியின்கண் கிடந்து உயிர்களின் வினைக்கீடாகத் தன் காரியங்களைத் தோற்றுவித்தல். வெடித்தல் – முளையைத் தோற்றுவித்துப் பின் மரமாக் வளர்தல். திரோதான சத்தி என்பது உயிர்களில் மறைந்திருந்து ஆணவ மாயை கன்மங்களைத் தொழிற்படுத்தும் இறைவனது அருளாற்றல். அது பிறவி நோய்க்கு மருந்தாகலின், தப்பா மருந்தாகி நிற்கும் வேம்பென உருவகிக்கப்பட்டது. வே – மூடுதல்.

பூ – தோற்றுவித்தல் என்னும் பொருளைத் தருதலின், வேம்பு என்பது தன்கண் மாயை கன்மங்களை அடங்கக் கொண்டு செலுத்தி ஆணவத்தின் வலியை மெலிவிக்கும் திரோதான சத்திக்கு அறிகுறியாய் நின்றது. வினையும் மாயையும் விதையும் பனையும் போலும், அதாவது தாலபீஜம் போலும் என்னும் மெய்ந்நூல் வழக்குப் பற்றிப் பனை என்றது விதைக்கும் மரத்திற்கும் பொதுவாய்க் கன்ம மாயைகளை உணர்த்து கிறது. குண்டலி சத்தியைச் சுழுமுனையில் ஓடுமாறு

துரத்திப் பனை விதை முளையாகிய வினையை அழிப்பார் இல்லாமையினால், திரோதான சத்தியால் விளையும் தனு கரண புவன போகங்களும் தொடர்ந்து வருகின்றன என்பது கருத்து. தின்னுதலை, 'உலகறியப் பால்முளை தின்று மறலி உயிர்குடித்த கான்முலை' என்புழிப் போலுரைக்க.

குண்டலி யோகத்தின் பயன் வினை நீங்கிப் பிறப்பறுதல் என்பது கூறப்பட்டது. ''இனி மூங்கில் முளை – மனம், வேம்பு – சிவம், பனை – திரோதான ஆற்றல், பாம்பு – அறியாமையைச் செய்யும் மலம், பாம்பைத் துரத்தித் தின்றல் – அறியாமையை நீக்குதல், வெடித்தல் – பிரித்தல், சிவனருளால் அறியாமையை நீக்குவாரின்மையின் சிவம் பிரிந்து நிற்கின்றது. வெடித்தல் – பிரிதல் என உரைப்பாரும் உளர். மூங்கில் முளையைப் பராசத்தி எனவும், அதில் எழுந்த வேம்பை ஆதிசத்தியாகிய திரோதான சத்தி எனவும், அதன்கண் கிடந்த பனையை மாயை, கன்மம் எனவும், பாம்பைச் சுத்த மாயையாகிய குண்டலினி எனவும் கொள்க. (239)

**பத்துப் பரும்புலி யானை பதினைந்து**
**வித்தகர் ஐவர் வினோதகர் ஈரெண்மர்**
**அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்**
**அத்தலை ஐவர் அமர்ந்துநின் றாரே.** 2887

பொ–ரை: உயிர் உடம்பில் நிலைபெற்று இருவினைப் பயனை நுகர்தற்குத் துணையாக அவ்வுடம்பின்கண் அறுபதின்மர் உள்ளனர். அவர் ஆவார்; வாயுக்களாகிய புலிபோல்வார் பதின்மர். நாடிகள் பத்து, மண்ணின் கூறாகிய மயிர், தோல், தசை, என்பு, நகம் என்னும் ஐந்து ஆக யானை போல்வார் பதினைவர். சுத்த மாயையின் காரியமாய் நிவர்த்தி முதலிய ஐந்து கலை களைப் பற்றி நாதம், விந்து, அகரம், உகரம், மகரம் என ஐந்தாக

நிற்கும் வாக்குக் கலைகளாகிய சமர்த்தர்கள் ஐவர். இங்கு எடுத்தோதப்படாத தாத்துவிகங்களாகிய புதுமை விளைப்பவர் ஈரெண்மர்; அவ்வாறு புதுமையை ஆன்ம தத்துவங்களைச் சார்ந்து விளைத்து வரும் சத்துவம், இராசதம், தாமதம் என்னும் குணங்களாகிய மூவர்; உயிர்க்கு மலப்பிணியினின்றும் நீங்குதற்கு உதவும் அத்துவாக்களாகிய மருத்துவர் அறுவர். மேற்கூறிய வித்தகர்க்கு இடம் எனப்பட்ட தலைமையான கலைகள் எனப்படும் ஐவர். ஆக அறுபதின்மர் பொருந்தி உள்ளார்கள்.

வி—கு: பத்து வாயுக்கள். பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்பன. நாடிகள் பத்து – இடைகலை, பிங்கலை, சுழுமுனை, சிகுவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகு என்பன. அத்துவாக்களாவன – எழுத்து, சொல், மறைமொழி, கலை, தத்துவம், புவனம் என்பவை. கலைகள் ஐந்து – நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை, அத்தலை ஐவர் என்பதற்கு நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்னும் காரிய அவத்தைகள் எனினும் ஆம். வினோதகர் ஈரெண்மர் என்பதை வசனாதி ஐந்தும் ஈடணை மூன்று, காமாதி ஆறு, நல்வினை, தீவினை; அல்லது பொறிகளின் விடயங்களாகிய பத்தும் ஆறு ஆதாரங்களும்; அல்லது புத்தி பாவகம் எட்டும் காமாதி ஆறும் அறம் மறம் என்னும் இரண்டும் எனப் பலவகையாகக் கொள்வர். ஈடணை மூன்றாவன மண், பெண், பொன் என்னும் மூவிடத்தில் ஆசை. ஈடணை – ஆசை. (240)

**இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே**
**இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்பன்**
**இரண்டு கடாவும் இருத்திப் பிடிக்கின்**
**இரண்டு கடாவும் ஒருகடா ஆமே.** 2888

பொ–ரை: உயிர் தங்கி வாழும் ஊர் போன்ற இவ் வுடம்பில் உயிர்ப்பை விடுத்தலும் எடுத்தலும் எனப்படும் இரண்டு கடாக்கள் உள்ளன. அவ்விரண்டும் ஒரு தன்மை யானவை. அவற்றை மேய்க்கும் அடிமையாகிய உயிர் இரண்ட னையும் இயங்காமல் நிற்பித்து அகத்தே அல்லது புறத்தே நிறுத்தின் அடக்குதல் என்னும் ஒருகடாவாகவே ஆகும்.

வி–கு: இப்பாட்டு மேல் கடாவிடின் என்றதனை விளக்க எழுந்தது போலும். உயிர்ப்பை எடுத்தலால் நினைப்பாகிய சகலமும், விடுத்தலால் மறப்பாகிய கேவலமும் மாறி மாறி வருவனவாய் உள்ளன. அதனை அடக்குதல் செய்தால் சகல கேவலம் கடந்த அருள் நிலைக்கண் அவை உய்க்கும் என்றபடி. (241)

**ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்**
**பத்தி வலையிற் பருத்தி நிறுத்தலால்**
**முத்தக் கயிறாக மூவர்கள் ஊரினுள்**
**நித்தம் பொது நிரம்பநின் றாரே.** 2889

பொ–ரை: இருவினை யொப்பு நிகழ்ந்த மனமாகிய கொல்லையில் விருப்பு வெறுப்பு என்னும் பள்ள மேடுகளைச் சமன் செய்த பத்தியாகிய எல்லை வகுத்து அதன்கண் பருத்திச் செடியை நிறுத்தியபோது, முத்தனைப் பிணிக்கும் கயிறாகச் சத்துவம், இராசதம், தாமதம் என்னும் மூவர்கள் தம் ஊராகிய சித்தத்தின் கண் வாசனை ரூபமாக நின்று ஒருவரோடொருவர் போரிட்டுத் தமக்குக் கீழுள்ள மனம், பொறி, விடயம் என்ப வற்றில் கலந்து நிற்பார் ஆயினர்.

வி–கு: அம்மூவரையும் அடக்கித் திருந்து சாத்துவிகமே ஆகநிற்பின், கரணங்கள் தூய்மையுற்று அவற்றிற்கு விடயமாகும்

உலக போகமும் சிவபோகமாகும். பருத்தி என்பது நூலைத் தோற்றுவிக்கும் காரணம் என்னும் கருத்துப்பட நின்று முதல் வனைக் குறித்தது. முதல்வன் எக்கலைக்கும் தலைவன். ''ஈசான்ஸ் ஸர்வ வித்யானாம்'' என்னும் வேத மந்திரம் காண்க. முத்தக்கயிறு – முத்த நிலையினும் பிணிப்பனவாக உள்ள கயிறு. மூவர் என்றது முக்குணங்கள். அவர்தம் ஊர் சித்தம். இங்ஙன மன்றி மூவர் என்றதை ஆணவம் கன்மம் மாயை எனக் கொண்டு ஊர் என்றதை அவர்க்கிடமாகிய ஆன்ம அறிவு எனினும் அமையும். இனி மூவர் என்றதை ஞானம், ஞேயம், ஞாதிரு எனக் கொண்டு இப்பகுப்புணர்வு பேரின்ப அனுபவத்திற்குத் தடையாக உள்ளது என்றுரைப்பினும் அமையும்.

வலை – வல்லை, வட்டம்; வல்லை என்பதை இடை குறைத்துப் பத்திவலை என்றார். முதல்வன்பத்தி வலையிற் படு வோன் ஆதல் பற்றி. நாரினும் என்னும் பாடத்திற்கு அன்பினும் என உரைக்க. நார் – அன்பு உம்மை வாதனை அளவில் அல்லது இராமையை உணர்த்தி, சிறப்பின் கண் நின்றது. (242)

**கூகையும் பாம்பும் கிளியொடு பூஞையும்**
**நாகையும் பூழும் நடுவில் உறைவன்**
**நாகையைக் கூகை நணுக லுறுதலும்**
**கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே.** 2890

பொ–ரை: உயிர் எனப்படும் புருடன் விழைவு, சினம், அறம், பாவம், அறிவு, அறியாமைகளாகிய கூகை, பாம்பு, கிளி, பூஞை, பூவை, காடை என்பவற்றின் நடுவில் இருந்து வாழ்ந்து வருகிறான், அவன் தனக்குரிய சிவபோகமாகிய நெல்லை விரும்பாது மேற்சொல்லிய உணர்வுகளின் வயப்பட்டு நிற்றல் எது போலும் என்றால், கூகை பூவையை அணைய அதனை எலி கண்டு தன்பால் வரும்படி அழைப்பதை ஒக்கும்.

வி–க: நாகை – நாகண வாய்ப்புள், பூவை பூழ் – காடை கூகை முதலியன எலியையும் எலியின் உணவையும் பறிப்பன வாக இருக்கவும், எலி அவற்றோடு உறவுகொள்ள எண்ணுவது தவறாகும் என்றபடி. அறிவு இங்குச் சிற்றறிவு. (243)

**குலைக்கின்ற நன்னகை யாங்கொங் குழக்கின்**
**நிலைக்கின்ற வெள்ளெலி மூன்று கொணர்ந்தான்**
**உலைக்குப் புறமெனில் ஒடு மிருக்கும்**
**புலைக்குப் பிறந்தவை போகின்ற வாறே. 2891**

பொ–ரை: உயிர்க்கிழவன் முப்புரங்களை அழிக்கும் நல்ல சிரிப்புடையானது அருளால் நீர் பொருந்திய ஏழு தாதுக் களால் ஆகிய உடம்பாகிய உழக்கில் பொருந்தி உள்ள மனம், புத்தி, ஆங்காரம் என்னும் வெள்ளெலிகள் மூன்றைக் கொண்டு வந்தான். அவை ஊதுலை போன்ற உயிர்ப்பிற்கு வேறாக நிற்கும் போது ஓடும் இருக்கும். இவ்விரு செயலும் அவற்றிற்குப் புலை எனப்படும் பிரகிருதியினின்றும் உண்டாகிய முக்குணங்கள் சென்ற வழியில் நிகழும்.

வி–கு: உயிர்ப்போடு கலந்து அகத்து ஒன்றும் போது, அம்மூன்றும் நசித்து உயிர்க் கிழவனுக்கு ஞானத்தைத் தரும் என்பது கருத்து. உயிர்க்கிழவன் என்னும் எழுவாய் வருவிக்கப் பட்டது. நன்னகை – அன்மொழித் தொகை. குலைக்கின்ற நன்னகையானால் உழக்கில் நிலைக்கின்ற எலி மூன்று கொணர்ந்தனன் எனக் கூட்டுக. ஆம் – நீர். கொங்கு – பூந்தாது; இங்கு அது தாது என்ற அளவில் பொருளுணர்த்தித் தூல உடம்பின் மூலமாகிய ஏழு தாதுக்களை உணர்த்திற்று. அகக் கருவிகள் மூன்றும் உயிர்க்குச் சூழ்ச்சித் துணைவர் எனப்பட்டு. சவிகற்ப உணர்வைத் தோற்றுவிப்பவை ஆகலின் வெள்ளெலி எனப்பட்டன. உலை தண்ணீரும் வேகவைக்கும் பொருளும்

இட்டு அடுப்பின்மேல் ஏற்றப்படும் பாத்திரம். வெள்ளெலி மூன்றும் உலைக்குப் புறம் எனின் ஓடும் இருக்கும்; அங்ஙனம் ஓடுதலும் இருத்தலும் புலைக்குப் பிறந்தவை போகின்றவாற றான் நிகழும்; உலையின் அகம் எனின் நசித்து உயிர்க்கிழவற்கு உணவாகி அவனுக்கு உறதி பயக்கும் என உருவகித்துக் கொள்க. உலை – உயிர்ப்பை. இங்கு அது வாசி யோகமாகிய குண்டலி யோகத்தைக் குறித்தது. வாசி யோகத்தால் நெறிப்படுத்தாத போது மனம் முதலிய அகக் கருவிகள் முக்குணங்கள் சென்றவாறு பற்றி நினைப்பும் மறப்பும் செய்யும். ஓடுதல் – நினைப்பைச் செய்தல். இருத்தல் – மறப்பை நிகழ்த்துதல். நினைப்பும் மறப்பும் சகல கேவ லங்கள் எனவும் சொல்லப்படும். வாசியோகத்தின் நெறி நிற்பின் இம்மூன்றும் ஒட்டற்று நின்று உயிர்க்கிழவன் ஞான வொளியைப் பெறுதற்கு உதவியாய் நிற்கும் என்பது குறிப்பான் வந்தது. புலை மான் எனப்படும் மூலப்பகுதி. புலைக்குப் பிறந்தவை – மூலப்பகுதி யினின்றும் வியத்தமாய் வெளிப்படும் முக் குணங்கள். இம்மந்திரத்திற்குப் பின் வருமாறு குறிப்புரை வழங்கியுள்ளனர்.

குலை ..... உழக்கின் – எழுகின்ற கெட்ட எண்ணங்களை அடக்கினால் வெள்ளெலி – சார்ந்ததன் வண்ணம் ஆகும் சீவன். உலை – உடம்பு. ஓடும் – முக்குணங்கள் கெடும். இருக்கும் – உள்ளாயின் நிலை பெறும். புலைக்கு – மாயைக்கு. இவை பொருந்து மேற்கொள்க. (244)

**காடுபுக் காரினிக் காணார் கடுவெளி**
**கூடுபுக் கானது ஐந்து குதிரையும்**
**ஓடுபுக் கானது ஆறுள ஒட்டகம்**
**மூடு புகாவிடின் மூவணை யாமே. 2892**

பொ–ரை: தண்ணிய நிழலை உடைய காட்டின் கண் புகுந்தவர் பின் வெறுப்பைத் தரும் வெற்றிடத்தைக் காணார்.

ஐம்பொறிகளாகிய குதிரைகள் ஐந்தும் முதல்வன் திருவருளில் கூடித் தம் சிறுமை நீங்கிப் பேரின்ப அனுபவம் பெறுதற்கு அமைந்தன. விழைவு, சினம், இவறன்மை, செருக்கு, மானம், அழுக்காறு என்னும் ஆறும் உள்ள ஒட்டகமாகிய உள்ளம் அவ்வாறும் ஓடி அழிய இறைவன் திருவடிக்கு நிலைக்களமாய் அமைந்தது. அவ்வாறும் மறைந்து கெடாவிடின் அவ் ஒட்டகம் மூன்று தடைகள் ஆகும்.

வி–கு: ஐந்து குதிரையும் கூடுபு உக்கு ஆனது எனப் பிரித்து உரைக்க. ஐந்து குதிரை – அறிவுப் பொறி ஐந்து. கூடுபு உகுதலாவது திருவருளைக் கலந்து தம் இருள் தன்மை நீங்கி ஒளியுடையன ஆதல். இதனை ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள என்னும் பெரிய புராணத் தொடரால் உணர்க. ஐந்து குதிரையும் ஆனது என்னும் முடிபு ஒருமைப்பன்மை மயக்கம். ஒட்டு + அகம் = ஒட்டகம். அதாவது மனம் புத்தி ஆங்காரம் என ஒட்டி நடக்கின்ற உள்ளம். ஆறுள ஒட்டகம் என்றது ஆறு பகைகளைத் தன் கண் உடைய ஒட்டகம் என்றபடி. ஆறுள ஒட்டகம் (அவ்வாறும்) ஓடுபு உக்கு ஆனது எனப் பிரித்து உரைக்க. உள்ளம் இறைவனுக்கு இடமானபோது அவ்வாறும் மறைந்து கெடுதலால் அஃது இறைவனுக்கு இடமாயிற்று என்க. அளப்பறும் கரணங்கள் நான்கும் சிந்தையே ஆக என்னும் தொடர் ஒப்பிட்டு நோக்கத்தக்கது.

மூடுபு உகாவிடின் மூ அணை ஆமே – இவ்வாறு குற்றங்களும் மறைந்து கெடாவிடின் அவ்வுள்ளம் மூன்று தடைகளாகும். மூவணையாவன முக்குணமாய் நின்று சுழன்று வருதல்; காமம், வெகுளி, மயக்கம் எனினும் அமையும். ஆறு ஒட்டகம் மூடுபு கா இடின் மூ அணை ஆமே – ஆறு ஒட்டகங்கள் கழுத்தின் கண் தடியை இட்டால் மூடி மூன்று இணையாக ஆகும் என்றது நயம். கா –தோளின் மேல் வைக்கும் தடி, நுகத்தடி. ஓடுபு, கூடுபு என்பவை செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள்.

ஆன்ம அறிவின்கண் மல இருள்சாரின் மாயையும் மாயேயமும் அழியாது வரும் வினைகளும் பசுத்துவம் உடையன ஆகும். ஆன்ம அறிவின்கண் திருவருள் ஒளி விளங்கின் அவை மூன்றும் சிவத்துவ விளக்கம் உடையன ஆகும் என்பது மெய்ந்நூல் துணிபு. இதனை,

***மாயைமாயேய மாயாவருமிரு வினையின் வாய்மை***
***ஆயவா ருயிரின்மேவு மருளெனின் இருளாய் நிற்கும்***
***மாயைமாயேய மாயா வருமிரு வினையின் வாய்மை***
***ஆயவா ருயிரின்மேவும் அருளெனி லொளியாய் நிற்கும்.***

என்னும் சிவப்பிரகாசச் செய்யுளான் உணர்க.

காடு என்றது தண்ணிய நிழலாகிய இறைவன் திருவடியினையும், கடுவெளி என்றது பாலைவனம் போன்ற பிறவியையும் குறித்து நின்றன. பரத்தைக் கண்டவர் பதார்த்தங்கள் பாரார் என்பதும், அவர் தம் பொறிகளும் உள்ளமும் ஒளி உடையனவாய் அமையும் என்பதும், பரத்தைச் சாராதாரது உள்ளம் காமம் வெகுளி மயக்கம் என்னும் குற்றம் பொருந்திக் குணவயப்பட்டு மாறுபடும் என்பதும் உணர்த்தப்பட்டன. இதில் காடு மாயையினையும் கூடு உடம்பையும் ஆறு ஒட்டகம் ஆறு அகப்பகையினையும் மூ அணை சீவதுரியம் முதலியவற்றையும் குறிக்கும் எனவும், மூடுபு தாவிடின் என்பது பாடம் எனவும் கொள்வாரும் உளர்.

ஒட்டு அகம் ஓடுபுக்கு ஆறுஉள ஆனது. மூடு புகாவிடின் மூ அணை ஆமே எனவே கொண்டு உள்ளம் ஓடு தலைக் கொண்டு ஆறு குற்றங்கள் உள ஆயிற்று. அடக்கிக் காத்திடின் அங்கி, ஞாயிறு, மதி என்னும் மும்மண்டலங்களை யுடைய இறைவன் இருக்கை ஆகும் என்றலும் ஒன்று. அணை – இருக்கை. (245)

**கூறையுஞ் சோறும் குழாயகத் தெண்ணெயும்**
**காறையும் நாணும் வளையலுங் கண்டவர்**
**பாறையி லுற்ற பறக்கின்ற சீலைபோல்**
**ஆறைக் குழியில் அழுந்துகின் றாரே.** 2893

பொ–ரை: மயக்கத்தைச் செய்யும் உடையும் சோற்றி னால் ஆய உடல் வனப்பும் எண்ணெயிட்டு அழகு படுத்தப்பட்ட கூந்தலும் கழுத்தணியும் பொன் நாணும் கைவளையலும் ஆகிய இவற்றை மட்டும் கண்டு உளத்தின் பண்பைக் காணாது மயங்கு வோர் கற்பாறையின்மீது உலர்த்திய சீலை காற்றினால் எறியப் பட்டு, தூய்மையில்லாத குழியில் விழுந்தாற்போல ஆறு அகப் பகைகளை உடைய இழிநிலையில் விழுந்து துன்புறுவர்.

வி–கு: ஆறைக்குழி – ஆறு குற்றங்களையுடைய இழி நிலை. ஐ – சாரியை. ஆறு குற்றங்கள் மேல் விரிக்கப்பட்டன. குழாய் – மூங்கிற்குழாய். பண்டை ஞான்று மூங்கிற் குழாய்கள் திரவப் பொருள்களை வைத்துப் பாதுகாக்கும் கலன்களாகப் பயன்படுத்தப்பட்டன. நாண் – போலியாக நடிக்கப் பெறும் நாணம் என்னும் பண்பும் ஆம். பொருள்களின் தோற்றம் மட்டும் கண்டு ஒழுகுவோர் குற்றத்தின் வீழ்வர் என்பது இதனால் உணர்த் தப்பட்டது. (246)

**துருத்தியுள் எக்கரை தோன்று மலைமேல்**
**விருத்திகண் காணிக்கப் போவார்முப் போதும்**
**வருந்தியுள் நின்ற மலையைத் தவிர்ப்பாள்**
**ஒருத்தியுள் ளாளவர் ஊரறி யோமே.** 2894

பொ–ரை: ஆற்றிடைக் குறையாகிய உந்தித் தானத்தின் அவ் எல்லையாகிய இதயம் கழுத்து புருவ நடு என்னும் மலைமேல் விருத்திகளைக் கண்காணித்தற் பொருட்டு ஒருவர்

காலை நண்பகல் மாலை என்னும் முப்போதும் போவார். அவரை (இரவின்கண் இக்கரையினுள்) வரும்படி செய்து அம் மலையை மறைக்கின்றவள் ஒருத்தி இருக்கின்றாள். அங்ஙனம் போவாரது ஊரை யாம் அறியோம்.

வி–கு: போவார் என்றது உயிரை. துருத்தி என்னும் சொல் ஆற்றிடைக் குறையையும், உயிர்ப்பையும் ஒருங்கே குறிக்கும்; ஆதலின் அஃது உயிரின் துரியத் தானமாகிய. புருடன் உயிர்ப்போடு கூடும் இடத்தைக் குறித்து நின்றது. இனி மலை அதன் மேல் விருத்தி என்பவை சித்தமும் சித்த விருத்தியும் உயிர் விருத்தியுமாய் உறக்கம் கனவு நனவு என்னுமிடங்களில் வந்து கூடும் சித்தமும், அதனோடு இருபத்திரண்டு கருவிகளும் அவற்றோடு பத்து கருவிகளும் ஆகும்.

ஆகவே, விருத்தி கண்காணிக்கப் போதல் என்பது உயிர் துரியத்தினின்றும் உறக்கம் கனவு நனவு என்னும் மேலால் அவத்தையை எய்தி மா சகலத்தை அடையுமாற்றைக் குறித்தபடி. இனி உள் வருவித்து மலையை மறைப்பவள் என்றது அவ் வுயிரைக் கிழாலவத்தைக் கண் செலுத்தி உயிர்ப்பையும் அடக்கிக் கேவல துரியாதீதத்தின்கண் வைத்துக் கொள்ளும் மூலமலத்தைக் குறித்தது.

இதனால் உயிர் மூலமலத்தில் அழுந்தி இரவு எனப்படும் கேவலத்தில் நிற்றலும், மாயா காரியங்களைச்சார்ந்து மாயையில் அழுந்துதலாகிய பகல் எனப்படும் சகலத்திற்குச் சென்று மீளு தலும் குறிக்கப்பட்டன. உயிர் மலத்தையும் தலைப்பட்டு மாயை யும் தலைப்பட்டு வருதலின். அதற்கு நிலையான இயற்கை ஊர் யாது என்பதை மக்கள் அறியார் என்றார்; அவ்வூர் இறைவனது திருவருளே ஆகும். மூலமலத்தில் அழுந்துதலே கேவலம்
17 என்பதும், மாயையில் அழுந்துவதே சகலம் என்பதும், இவ்

விரண்டையும் சாராமல் திருவருளில் அழுந்தி நிற்றலே இயற்கை எனப்படும் சுத்தம் என்பதும் மெய்ந்நூல்களின் துணிபு. கேவல சகல சுத்தம் என்பவை முறையே இரவு, பகல், இராப்பகல் அற்ற இடம் என மெய் உணர்ந்தோரால் குறிக்கப்படும். (247)

**பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்**
**திருந்திய மாதர் திருமணப் பட்டார்**
**பெருந்தவப் பூதம் பெறலுரு வாகும்**
**இருந்திய பேற்றினில் இன்புறு வீரே. 2895**

பொ–ரை: அறமாகிய கிளியும், பாவமாகிய பருந்தும் இன்பத்துன்பப் பயன்களைக் கொடுத்தலாகிய படுபறையைக் கொட்டுதலால் உயிர் திருந்துதற் பொருட்டு மான் எனப்படும் மாயையாகிய மாதராளோடு கூடி நின்றது. பெரிய தவத்தை உடைய பூதம் எனப்படும் அவ்வுயிர் பெறுதற்குரிய வியாபக நிலையை எய்தும் பேற்றினாலே பெரிய இன்பத்தினைப் பெறும்.

வி–கு: பூதம் – உயிர். பெறலுருவாகும் இருந்திய பேறு – தன் வியாபக நிலையை எய்தலாகிய பெரும் நிலை.

இனி, பாவமாகிய பருந்தும் அறமாகிய கிளியும் இரு வினையொப்பு வந்து கெட்டதைப் பறையானது கொட்டா நிற்ப. மறைப்பு ஆற்றலாக இருந்து கருணையாகத் திருந்திய திருவருளாகிய மாதர் உயிராகிய கிழத்தியைச் சிவத்தோடு கூடச் செய்தார் பெருந்தவத்தினையுடைய அப்பூதம் அந்நிலையில் பெறுதற்குரிய தன் நிறை நிலையை நிலையாகப் பெற்றுப் பேரின்பம் எய்துவதாயிற்று என உரைப்பினும் அமையும், இருந்திய நிலையாக இருந்த, இப்பாட்டில் மாதர் என்றது அந்தக் கரணங்கள் எனவும், பூதம் என்றது சித்தம் எனவும் உரைப்பாரும் உளர். (248)

**கூடும் பறவை இரைகொத்தி மற்றதன்**
**ஊடுபுக் குண்டி யறுக்குறில் என்னொக்கும்**
**சூடெறி நெய்யுண்டு மைகான் றிடுகின்ற**
**பாடறி வார்க்குப் பயனெனி தாமே. 2896**

பொ—ரை: உயிர்க்கு அது செய்த வினைக்கீடாக அவ்வப் பொழுது வந்து கூடும் பருவுடம்பாகிய பறவை இரை கொத்தியாகும். அதாவது அது அன்னமய கோசம் ஆதலால் உணவால் நிலைபெறுவது ஆகும், இனி அதன்கண் புகுந்து நுகரவேண்டிய உண்டியை அறுத்து நிற்பின் அச்செயல் எதனை ஒக்கும்? தற்கொலையினையே ஒக்கும். அதாவது நுகர்ச்சிகளை விட்டிருத்தல் ஒன்றினையே மேற்கொள்வார்க்கு உடம்பு அழிவதன்றி உயிர்க்கு உளதாகிய பயன் ஒன்றும் இன்றாம். இனி விளக்கானது தகழியில் வார்த்த நெய்யைத் திரியினால் ஏற்றுச் சுடர் விட்டு எரிந்து மையை வெளிப்படுத்துகின்றது. அவ்வாறு உடம்பாகிய திரியினால் முன்னை வினையாகிய நெய்யை ஏற்றுக் கொள்ளும் முகத்தால் மெய்யுணர்வானது சுடர்ந்து எழவும், அக இருள் புறத்தே நீங்கிக் கெடவும் செய்யும் செயலை ஒருவர் மேற்கொள்ளின், அஃது உயர்ந்த பயனை விளைப்ப தாகும். அச்செயல் முதல்வனோடு ஒன்றி இருந்துஅவன் பணி நிற்றலே ஆம்.

கூடும் பறவை – அறிவுப் பொறி ஐந்து எனக் கொள்வாரும் உளர். (249)

**இலையில்லை பூவுண் டினவண்டிங் கில்லை**
**தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்**
**குலையில்லை கொய்யும் மலருண்டு சூடும்**
**தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராரே. 2897**

பொ–ரை: அறத்தின் இயல்பை உணர்ந்தவனுடைய வாழ்க்கை ஒரு நல்ல மரம் போன்றது. அதற்குத் தத்துவக் கொள்கை என்ற பேருண்டு. அறவாழ்வு என்னும் அடிமரம் உண்டு. கல்வித் துறைகள் என்னும் கிளைகள் உள்ளன. அத்துறை களில் உள்ள உயர் நூல்கள் என்னும் இலைகள் உள்ளன. அவற்றின் பயனாகக் கொத்தாக வெளிப்படும் தோத்திர சாத்தி ரங்கள் என்னும் திருவருளால் பிணைக்கப்படும் பூங்கொத்துக்கள் உள்ளன. அவற்றில் அன்பாகிய அரும்பும் அருளாகிய மலரும் உள்ளன. அருளில் ஞானமணமும் இன்பத்தேனும் இருக்கும். அம்மணத்தை அறிந்துஇன்பத்தை நாடி வரும் புனிதர் கூட்ட மாகிய வண்டுகளின் கூட்டமும் உண்டு.

அம்மலரைத தரித்துக் கொள்ளும் உணர்வு நிலையும் அவர்கட்கு உண்டு. இனி அறத்தின் இயல்பை அறியாது கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்னும் கொள்கை உடை யானது வாழ்விற்கு இவ்விரண்டு கொள்கைகளே வேராகும். அவாவே அரும்பாகும். அவ்வவாவின் விளைவாக விரியும் முயற்சியே மலராகும். இவ்வீணனுடைய வாழ்வாகிய மரம் வினோத இயல்பை உடையது. இதற்கு வேரும் பூவும் (அரும்பு) மலரும் என்னும் மூன்றுமே உள்ளன; ஏனைய இல்லை.

வி–கு: பாட்டில் பூ என்றது அரும்பை. கொய்யும் மலர் என்றது பெறும் பயன்கள். சூடும் தலை என்றது அப்பயன்களைப் பெறுதற்குரிய உயிரின் உண்மை. இரண்டாம் அடியில உள்ள தலை என்றது உயர்ந்த குறிக்கோள் எனப்பொருள்படும். இனி இதனை உலகாயதன் வாழ்க்கையின் உருவகமாகக் கொண்டு அவன் வாழ்க்கையில் இறைவன் நூல் உண்மை இல்லை; உலக இன்பமாகிய பூ உண்டு. பல நூல்களையும் ஆராய்ந்து நல்லன வற்றைத் திரட்டிப் பயன்கொள்ளும் ஆய்வில்லை. உயர்ந்த குறிக்கோள் இல்லை. அறியாமை அல்லது அவா என்னும் வேர் உள்ளது. கடவுட் கொள்கை என்னும் அடிமரமும் திருவருள்

என்னும் பூவின் காம்பும் இல்லை. வினை விளைவு என்னும் மலர் உண்டு. சிவானந்தம் என்னும் சூடும் தலை இல்லை. தாழ்வாகிய பல்வகை ஆய்வுத் துறைகளாகிய கிளைகள் உலராது வளர்ந்து கொண்டு செல்லும் என உரைப்பினும் அமையும்.

இன்னும் இம்மந்திரம் மோனிகளின் வாழ்வை உருவகப்படுத்தி உணர்த்துகிறது எனக் கொண்டு உரைப்பாரும் உளர். அவர் வாழ்வில், இலையாகிய இறைநூற் பயிற்சியில்லை. பூவாகிய நோக்கமுண்டு (நிவிர்த்திநெறி உண்டு). தத்துவ ஆராய்ச்சியாகிய வண்டின் கூட்டம் இல்லை. மேலும் சாதிக்க வேண்டுவதாகிய தலை இல்லை. அடி நிலையாகிய சிவன் கழலிற் செறிவு உண்டு முயன்று செய்யும் செயலாகிய தாள் இல்லை. பூங்கொத்தாகிய புலன் நுகர்ச்சி இல்லை. உடலூழாய்க் கழியும் கொய்மலர் உண்டு. அவ்வூழ் மலரைச் சூடிக் கொள்ளும் யான் எனது என்னும் செருக்குணர்வாகிய தலை இல்லை. அச்செருக்கு தாழ் நிலையில் கிளைத்துத் தோன்றுதலும் இன்று. புலர்தல் – தோன்றுதல், எனினும் அமையும். (250)

**அக்கரை நின்றதோர் ஆல மரங்கண்டு**
**நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்வர்**
**மிக்கவ ரஞ்சு துயரமுங் கண்டுபோய்த்**
**தக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறே. 2898**

பொ–ரை: பிறவியாகிய ஆற்றின் நடுவில் இருந்து அதனைக் கடக்கும் நெறியை அறியாதவர் தாம் சென்று சேர்தற் குரிய வீடாகிய அக்கரையில் ஆலமரத்தைக் கண்டனர். அது பண்டைக் காலத்தில் இறைவன் எழுந்தருளியிருந்து அறம் பகர்ந் தமையை நினைப்பித்தமையின், அவ்வறம் பகர்ந்த முதல்வனை அவன் பகர்ந்த மறைமொழிகளால் வாழ்த்தி அந் நின்ற நிலை யிலேயே பிறவிப் பயனைக் கொள்ளா நிற்பர். இங்ஙனம்

செய்பவர் மக்களுள் உயர்ந்தோர் ஆவர். பிறர் இவ்வாறு பயன் கொள்ளத் தக்கவரே ஆயினும் பிறவியில் வரும் அவலம், கவலை, கையாறு, பிணி, மூப்பு என்னும் அஞ்சு துன்பங்களையே உளங்கொண்டு பிறவியில் தங்கிக் கரையேற மாட்டாராய்க் கிடந்தனர்.

வி-கு: நக்கர் – உடை உடுக்காதவராகிய சிவபிரான். நடுவுள் – தம் உள்ளத்துள், அடியார் நடுவுள் இருந்து ஆற்றின் நடுவில் என்னும் முப்பொருளும் தோன்ற நின்றது. (251)

**கூப்பிடு மாற்றிலே வன்கா டிருங்காதம்**
**காப்பிடு கள்ளர் கலந்துநின் றாருளர்**
**காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டுக்**
**கூப்பிடு மீண்டதோர் கூரைகொண் டாரே.** 2899

பொ–ரை: கண்ணாற் காணுதல் இன்றிச் செவியாற் கேட்டுச் செல்லுதற்குரிய உபதேச நெறியில் மரங்கள் செறிந்த காடு இருகாவத தூரம் உள்ளது. செல்வாருக்குக் காப்பாக மறைந்து நிற்கும் கள்வரும் ஒருவர் உளர். அக்கள்வரோடு தனக்கென அறிவில்லாத வெள்ளராகிய ஆன்மா கலந்து ஒன்றி நடந்துசென்று, பிறரைத் தான் செல்லும் நெறியில் அழைப்ப தாகவும் ஈண்டே உள்ளதாகவும் இருக்கும் ஓர் சிறு குடிலைப் பெற்றுக் கொண்டார்.

வி–கு: வன்காடு என்றது தத்துவ தாத்துவிகங்கள் செறிந்த ஆணவத்தோடு கலந்த மாயைச் சார்பு. இருகாதம் – சகலம் கேவலம் என்னும் இருநிலைகள். காதம் என்றது ஏழரை நாழி வழி எனக் காலத்தின் மேல் வைத்துக் குறிக்கப் பெறுவது ஆதலால், அது சகலம் கேவலம் என்னும் அவத்தைகளைக் குறிப்பதாயிற்று காப்பிடுகள்வர் என்றது தத்துவங்களுக்கும்

உயிர்க்கும் காவலைச் செய்து உயிரின்கண் மறைந்து நிற்கும் முதல்வன். வெள்ளர் – உயிர். அவரைக் கலத்தலாவது உயிர் நான் யார் என ஆய்வு செய்யும் முறையால் தன் அறிவுள் நின்ற முதல்வனைத் தலைப்படுதல். கள்ளரைத் தொடர்தலாவது அங்ஙனம் கண்ட முதல்வனோடு ஏகனாகி அவன் அருள்வழி நிற்றல். இங்ஙனம் நிற்பார், சீவன் முத்தர் ஆதலின் அவர்தம் உடலும் உயிரும் இறைவன் தங்கும் நிலைக்களனாய் ஏனையரை வீட்டு நெறிக்கு அழைக்கும் ஈண்டையது ஓர் கூரையாயிற்று. ஈண்டையது ஓர் என்பது ஈண்டதோர் என மரீ இயிற்று. கூரை – சிறுகுடில். இங்ஙனமன்றிப் பிறர் கூறமாறு: கூப்பிடும் – உலக பந்தம் நீக்கும். ஆற்றில் – சிவாகம்பாவனையாகிய முயற்சியில். வன்காடு இருகாதம் – நினைவு ஐயங்களோடு கூடிய அறியாமையாகிய காடு. காப்பிடு கள்ளர் – காவல் செய்யும் இந்திரியக் கள்வர். வெள்ளர் – சிவானந்த வெள்ளப் பெருக்கு உடைய அடியவர். கூப்பிடும் – வாக்கு வியாபாரமும். கூரை – வீடு, சீவன் முத்தி; இவற்றுட் பொருந்துவன கொள்க. (252)

**கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை**
**எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையும்**
**கட்டியுந் தேனுங் கலந்துண்ண மாட்டாதார்**
**எட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறே. 2900**

பொ–ரை: பயனில் செயலாகிய கொட்டியும் இன்பம் பயக்கும் அறமுயற்சியாகிய ஆம்பலும் விளங்கும் உயிர்வாழ்க்கையாகிய குளத்தின்கண், எட்டியைப் போன்ற தீமை பயக்கும் விடயங்களும் வேம்பைப் போன்று மருந்தாய் உள்ளனவும் வாழை போன்ற இன்பந்தரும் அருள் நிலையங்களும் உள்ளன. மக்களுள் கட்டிப்போன்று இனிக்கும் வாழைத் தீங்கனியுடன் ஆம்பலினால் கிடைக்கும் தேனையும் கலந்து உண்ண மாட்டாதார் எட்டிப் பழம் போன்று மேலே அழகியதாய்த்

தின்றால் கொல்லுவதாய் உள்ள பொருள்களை நுகர்தற் பொருட்டுத் தீவினைகளைச் செய்வார் ஆயினர்.

வி–கு: வாழையும் என்றதன்பின் உள்ளன என ஒரு சொல் வருவித்துரைக்க.

இது பிறிதுமொழிதல் என்னும் அணி. (253)

**பெடைவண்டும் ஆண்வண்டும் பீடிகை வண்ணக்**
**குடைகொண்ட பாசத்துக் கோலமுண் டானும்**
**கடைவண்டு தானுண்ணுங் கண்கலந் திட்ட**
**பெடைவண்டு தான்பெற்ற தின்பமு மாமே. 2901**

பொ–ரை: மறைப்பாற்றல் எனப்படும் பெண் வண்டும் அதனோடு பிரியாது உறையும் முதல்வனாகிய ஆண்வண்டும் தமக்குப் பீடமாகவும் அழகிய குடையாகவும் கொண்ட பாசத்தினால் ஆகிய கோலமாகிய உடம்பின்கண் இருந்து, உலக நுகர்ச்சியை உண்டு நீங்கும் கீழான வண்டாகிய உயிர் தான் நுகர்கின்ற கண்ணோடு கலந்து நின்ற அப்பெடை வண்டினால் தான் பெற்றது இன்பமும் ஆகும்.

வி–கு: பீடிகை, குடை என்பவற்றை அண்டத்தில் நிலமாகவும் ஆகாயமாகவும், கோலம் எனப்பட்ட பிண்டத்தில் நெஞ்சக் கமலத்தையும் தலையினையும் குறிப்பதாகவும் கொள்க. இறைவன தன் சத்தியோடு நிலத்தை இடமாகக் கொள்கின்றான் என்பதும், அவன் அவ்வாறு உடல் தோறும் உயிர்களின் நெஞ்சக் கமலத்தை இடம் கொள்கின்றான் என்பதும் மெய்ந்நூல் துணிபு. கோலம் உண்டு ஆனும் கடைவண்டு எனப் பிரித்துரைக்க. உடம்பின்கண் இருந்து உலக நுகர்ச்சிகளை நுகர்ந்து நீங்கும் உயிர் என்க. ஆனம் – நீங்கும். ஒவ்வொரு புலனையும் நுகர்ந்தவுடன்

அதனின் நின்றும் நீங்குதல் தெளிவு. பாசத்துக் கோலம் என்றது பாசம் எனப்பட்ட மாயா காரியமாகிய உடம்பு என்றபடி.

ஆண்வண்டாகிய முதல்வனைப் பெடை வண்டின் துணையினால் தலைப்பட்டு இன்புறுதற்குரிய உயிர், உலக நுகர்ச்சியை நாடுதல் பற்றி, கடைவண்டு எனப்பட்டது. தான் உண்ணும் கண் என்றது தான் நுகர்தற்குக் கருவியாகிய அறிவு எனவும், அந் நுகர்ச்சிக்கு இடமாக உள்ள பொருள்கள் எனவும் இரு பொருள்பட நின்றது. இறைவனது ஆற்றல் உயிரின் அறிவிற்கு அறிவாய்ச் செலுத்துவது என்பதும், பொருள் தோறும் கலந்து நிற்பது என்பதும் மெய்ந்நூல் துணிபு. கண் – அறிவு, இடம், அப்பெண் வண்டால் தான் பெற்றது என உரைக்க.

இன்பமும் என்ற உம்மை பேரின்பமே அன்றி உலக இன்பமும் எனவும், உலக நுகர்ச்சிக்கண் தான் விழையும் இன்பமே அன்றி அதனோடு உடன்வரும் துன்ப மயக்கங்களும் எனவும் பொருள் தந்து, எதிரது தழீஇ நின்றது. இதனால் முதல்வன் அம்மையோடு உயிர்களின் நெஞ்சக் கமலத்தை இடனாகக் கொள்வன் என்பதும், அங்ஙனம் இடங் கொண்ட உடலில் உயிரும் உடன் இருந்து உலக நுகர்ச்சியாகிய இன்பத் துன்ப மயக்கங்களை மாறி மாறிப் பெற்றுவரும் என்பதும், முடிவின் கண் அது தன்னையும் தலைவனையும் உணர்ந்து பேரின்பத்தை எய்தும் என்பதும், இவ்விருவகை நுகர்ச்சிக்கும் உடன்நின்று உதவுவது இறைவனுடைய திருவருள் என்பதும் குறிப்பான் உணர்த்தப்பட்டன. (254)

**கொல்லையில் மேயும் பசுக்களைச் செய்தவன்**
**எல்லை கடப்பித் திறையடிக் கூட்டியே**
**வல்லசெய் தாற்றன் மதித்தபி னல்லது**
**கொல்லைசெய் நெஞ்சங் குறியறி யாதே. 2902**

பொ–ரை: ஐம்புலன்கள் எனப்படும் கொல்லையில் நெஞ்சு எனப்படும் அகக்கருவியைச் சார்ந்து ஒன்றி நின்று நுகர்ந்து வரும் உயிர்களை அவ்வாறு ஒழுகச் செய்யும் முதல்வனது திருவருள் அவற்றின் சுட்டறிவின் எல்லையைக் கடக்கச் செய்து, தம்மையும் தலைவனையும் உணர்ந்து தலைவனது பேரின்ப சத்தி எனப்படும் திருவடியை அணைய வைக்கும் வல்லமை உள்ளது. அவ்வாற்றலை ஐம்புலன்களில் செலுத்தும் நெஞ்சமானது மெய்ந்நூற் கேள்வியான் உணர்ந்தாலன்றி வாழ்க்கையின் குறிக்கோளை அறிந்துகொள்ளமாட்டாத மட நெஞ்சமாகவே இருக்கும்.

வி–கு: நெஞ்சம் குறியறியாதே என்றார், அறிவது உயிரே ஆயினும் அது நெஞ்சைப் பற்றி நின்று நெஞ்சாகவே நிகழும் வரை நெஞ்சிற்குக் கீழுள்ளனவாகிய புலன்களை அறிவதல்லது நெஞ்சையும் தன்னையும் தலைவனையும் வாழ்க்கையின் குறிக்கோளையும் அறியமாட்டாது என்னும் ஏது உணர்தற்பொருட்டு. (255)

**தட்டத்து நீரிலே தாமரை பூத்தது**
**குட்டத்து நீரிற் குவளை எழுந்தது**
**விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்**
**குட்டத்தி லிட்டதோர் கொம்மட்டி யாமே. 2903**

பொ–ரை: தட்டு எனப்படும் வலது நாடியிற் செல்லும் உயிர்ப்பு தாமரை மலர்தற்குக் காரணமாய சூரிய நாடி எனப்படும். குட்டம் எனப்படும் இடது நாடியின் உயிர்ப்பு குவளை மலர்தற்கு ஏதுவாகிய சந்திரநாடி எனப்படும். இவற்றில் உயிர்ப்பு இயங்கும் காலங்கள் சகல கேவலங்களாகிய பகல் இரவுகளைத் தோற்றுவிக்கும். இவ்விரண்டையும் விட்டு, சுழுமுனையின் உள்ளே உயிர்ப்பை அடக்கித் தம்மை அறியலுறு வார்க்கு உலக

நுகர்ச்சிகள் மணலில் வளரும் கும்மட்டியைக் குளத்தில் இட்டாற் போல வளராது தேயும்.

வி–கு: விட்டு அதினுள்ளே என்பது விட்டத்தினுள்ளே எனச் சாரியை இன்றி வந்தது. அது சுழுமுனை. வாசியோகத் தினால் உலக உவர்ப்புத் தோன்றும் என்பது கருத்து. (256)

**ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன**
**நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன**
**ஏறும் பெரும்பதி ஏழுங் கடந்தபின்**
**மாறுத லின்றி மனைபுக லாமே. 2904**

பொ–ரை: ஐம்பூதங்களால் ஆகிய உடம்பின் கண் விழைவு, சினம், இவறன்மை, மயக்கு, செருக்கு, அழுக்காறு என்னும் ஆறு பறவைகள் உள்ளன. நுனிக்கொம்பு எனப்படும் மனத்தின்கண் நினைவு, ஐயம், பாவகம் என்னும் அளவிலாப் பறவைகளுள்ளன. இப்பறவைகள் ஓடும்படி குண்டலி யோகத் தினால் மூலாதாரம் முதலிய ஆறு பெரும்பதிகளையும், அவற்றிற்கு மேலே உள்ள சகச்சிராரம் என்னும் ஏழாவது பெரும் பதியையும் கடந்து நிராதார யோகத்திற் செல்வார்க்கு மாறுதல் இல்லாத பரமுத்தி எனப்படும் வீடு கிடைப்பது உறுதியாகும்.

வி–கு: மாறுதலின்றி – பிறப் பிறப்புக்களில் சென்று விகாரப்படுதல் இன்றி.

**ஏழ்உம்பர்ச் சென்றனன் தானிருந்தான் உணர்ந் தெட்டே**

என்னும் முதல் மந்திரப் பகுதி நினைத்தற் குரியது. (257)

**கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள்**
**வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங்**
**கட்டனஞ் செய்து கயிற்றால் தொழுமியுள்**
**ஒட்டனஞ் செய்தொளி யாவர்க்கு மாமே.** 2905

பொ–ரை: வெள்ளப் பெருக்கில்லாத காலத்தில் ஆற்றின்கண் மண்வெட்டியால் மணலைப் பறித்து முழுகப் புகும் மணற்கேணியில், சுற்றி உள்ள நீர் ஊறும்போது, பூமியாகிய மணலும் வந்து கேணியின் ஆழத்தைக் குறைக்கும். அதனால் சுடுமண் அல்லது பலகை என்பவற்றால் ஓர் வட்டவளைவு செய்து, அதனைக் கயிற்றால் இறுகக் கட்டி அக்கேணியில் வளைவாக நிறுத்தினால், தூய்மையான மிகுந்த தண்ணீரை யாவரும் பெற்று ஒளி உடையோர் ஆகலாம்.

வி–கு: இதில் கொட்டனம் செய்தல் என்பது ஒருவரது அறிவை அகத்தே ஒரு குறிக்கண் நிறுத்தி முதற் பொருளை உணர்தல். தண்ணீரோடு மணலும் ஊறுதல் இறைவன் திருவருளோடு பிராரத்த வாதனையும் உடன்வந்து தாக்குதல். வட்டனம் செய்தல் என்பது அவ்வாதனை தாக்காதபடி ஞானத்தில் உறைத்து நிற்றல். கயிறென்பது – பத்தி. பத்தியால் அவ்வுணர்வை நிலை பெறுத்துதல் இங்ஙனம் செய்தால் சிவானந்த வெள்ளத்தில் மூழ்கி அருளொளியோடு திகழ்ந்து பலர்க்கும் உண்மையைத் தெளி வித்தல் கூடும் என்பது கருத்து. தொழுமி – வளைவு. கொட்டனம் – கொட்டுதல். இது பிறிது மொழிதல் என்னும் அணி. இவ் வதிகாரம் முழுதும் இவ்வணி வருதல் கண்டு கொள்க. (258)

**ஏழு வளைகடல் எட்டுக் குலவரை**
**ஆழும் விசும்பினில் அங்கி மழைவளி**
**தாழும் மிருநிலந் தன்மை யதுகண்டு**
**வாழ நினைக்கில தாலய மாமே.** 2906

பொ–ரை: புறவுலகத்தைக் காண்பார்க்கு ஏழு தீவுகளை வளைத்து நிற்கும் ஏழு கடல்களும் சுற்றிலும் எட்டுக் குலமலைகளும் அவற்றிடையே வான், வளி, அங்கி, நீர், நிலம் என்னும் ஐம்பூதமும் இருத்தல் புலனாகும். இவையனைத் தும் பிண்டத்திலும் உள்ளன. இவற்றின் இயல்பை ஆராய் வோர்க்கு அண்டமும் பிண்டமும் முதல்வனுக்குக் கோயில் களாக அமைந்திருத்தல் புலனாகும். ஆகலின் அவ்வாறு அவற்றை இறைவன் கோயிலாக உணர்ந்து அகத்தும் புறத்தும் முதல்வனை வழிபட்டு உயர் நலத்தை மக்கள் பெறுவார்களாக. (259)

**ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடர் சூலத்துச்**
**சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர்**
**கோலிங் கமைத்தபின் கூபப் பறவைகள்**
**மாலிங்கன் வைத்தது முன்பின் வழியே. 2907**

பொ–ரை: அம்மையப்பராகிய முதல்வர், இருவர் கூடித் தழுவும் வேட்கை மிகுதியில் கருவமைத்துப் பின் சால் போன்ற இவ்வுடலோடு தோன்றும்படி செய்து, அக்குழவியின் சுதந்திரத் தைத் தாய் தந்தையர் இடம் அமைத்தனர். பின் அத்தாய் தந்தையர் மணக்கோலத்தை அமைத்தபின், உடம்பாகிய கூவலில் உள்ள பறவைகளாகிய பொறிகள் மயக்கத்தை அமைத்து முன் பின் வழிகளாகிய பிறப்பு இறப்புக்களில் செல்ல வைக் கின்றன.

வி–கு: செலுத்துகின்றன என ஒரு சொல் வருவித்து இறுதித் தொடரை முடிக்க. இதனால் பிறப்பின் இயல்பை நன் குணர்ந்து, அவ்வாற்றைக் கடக்க முயலுதல் வேண்டும் என்பதும், அங்ஙனம் முயலுதல் தவத்தினர்க்கே கூடுவது என்பதும் உணர்த்தப்பட்டன. (260)

**கொட்டுக்குந் தாலி இரண்டே இரண்டுக்கும்**
**கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர்**
**கொட்டுக்குந் தாலிக்கும் பாரைக்கும் மூன்றுக்கும்**
**இட்டம் வலிதென்பர் ஈசன் அருளே.** 2908

பொ–ரை: இல்வாழ்க்கையில் திருமண நிகழ்ச்சி முதன்மையானது. அந்நிகழ்ச்சியில் மணமுரசு இன்றியமை யாதது. அம்மண முரசினும், தாலி சூட்டுதல், கைப்பற்றி, மாலை மாற்றுதல் என்னும் இரண்டும் வலியுடையன. அவ்விரண்டு செயலினும், மணமுரசு அதிர்வினும், மங்கல நாண் சூட்டலினும், இருவர்தம் மனத்திட்பமே வலிவுடையது. முரசதிர்வு தாலி சூட்டல் மனத்திட்பம் என்னும் மூன்றையும் விட மணமக்கள் இருவர்தம் ஒத்த அன்பு வலியும் முதன்மையும் உடையது. அவ்வலிவும் முதன்மையும் ஈசன் அருளால் ஆகத்தக்கன.

வி–கு: இதனால் திருமணத்தின்கண் இறைவன் திருவரு ளும் ஒத்த அன்பும் இருவர்தம் மனத்திட்பமும் முதன்மையாக நாடற்பாலன. தாலி சூட்டலும் கைப்பற்றல் மணமாலை சூட்டல் என்பவையும் மணமுரசும் இவற்றைச் சிறப்பிப்பன வாய் உடன் நிகழ் சிறப்பினவே ஆம் என்பது உணர்த்தப்பட்டது. தாலி இரண்டே என்பதன் பின் வலிய என்னும் ஒரு சொல் வருவித்து உரைக்க. தாலியும் இரண்டுமே வலிய என, எண்ணும்மை வருவிக்க. பாரை – மனத்திட்பம். பார் – பாறை, ஐ – சாரியை. (261)

**கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்**
**முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்**
**பறையொன்று பூசல் பிடிப்பா னொருவன்**
**மறையொன்று கண்ட துருவம்பொன் னாமே.** 2909

பொ–ரை: கயல்போன்று கவர்ச்சியும் பிறழும் இயல்பும் உடைய செல்வம் முதலிய உலகப் பொருள்களை உறுதியெனக் கண்டவர் அங்ஙனம் கண்டு கொண்டே பிறவிக் கடலை நீந்தாது அதன்கண் இருப்பர். தவ முயற்சியாகிய முயலை உறுதியெனக் கண்டவர் அம்முயற்சியாகிய சரியை கிரியை யோகில் நிற்கும் மூவராய்ப் பின் உய்தி கூடுவர். ஒரோவழி பறைதலாகிய வாய்ப் பேச்சு வீரனாய் நிற்கும் சமயப் பூசல் விளைப்பான் ஒருவனும் உளன். இவ்வாறன்றி அருளாசான் அருளால் உறுதிமொழி ஒன்றினைக் கண்ட நிலைப்பட்ட உணர்வுடையான் செம்பு பொன்னாதல் போல பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் எய்துவன்.

வி–கு: துரூவம் – நிலைப்பட்ட இயல்பு: மறை – உபதேசமொழி. துருவநிலை எய்தினானை துருவம் எனவும், சிவத்துவ நிலையைப் பொன் எனவும் உபசரித்தார். முயல் – முயற்சி, முயல். கண்டவராகிய மூவர் என்க. (262)

**கோரை எழுந்து கிடந்த குளத்தினில்**
**ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது**
**நாரை படுகின்றாற் போலல்ல நாதனார்**
**பாரை கிடக்கப் படிகின்ற வாறே. 2910**

பொ–ரை: பலவகை விருத்திகளாகிய கோரைப் புல்லால் வளைக்கப்பட்டு உள்ளது ஒருவனது அறிவாகிய குளம். அதன்மேல் அவா முதலிய குற்றங்களாகிய ஆரை இலைகள் படர்ந்து தொடர்ந்து நின்றன. இத்தகைய அறிவுள் மறைந்து நின்ற முதல்வனது இருப்பும், செயலும், குளத்தின் பக்கத்தில் கூம்பி நின்று, கோரையுள் மறைந்து நின்றோனுக்கு அகப்படும் நாரையின் இருப்பும் செயலும் போல் அல்ல. பின்னர்ப் பாரை என்னும் மீன் கோரை, ஆரை என்பனவற்றின் நிழலில் தன்னுருக் காண ஒண்ணாதபடி அதன்கண் படிந்து நின்றாற் போல்வது.

வி–கு: பாரை – ஒருவகை மீன், கோரைப்புல்நாரை அகப்படுதற்குக் காரணமாய் மனிதனை மறைத்து நிற்கும்; உயிரின் பிற விருத்திகளும் ஆசை முதலியனவும் அங்ஙனம் முதல்வனைப் பற்றத் துணையாக நில்லா. கோரை, ஆரை என்ப வற்றின் நிழல், நீரில் கிடக்கும் பாரை மீனைக் காண வொண்ணாது தடுத்தல் போல, ஒருவன் தன்அறிவின்கண் நின்ற முதல்வனைக் காண வொண்ணாமல் தடை செய்யும் என்பது கருத்து. இதனால் சித்த விருத்தியும், காமம் முதலிய குற்றங்களும் நீங்கித் தெளிந் துள்ள அறிவில்தான் முதல்வன் விளங்கித் தோன்றுவன் என்பது உணர்த்தினார். (263)

**கொல்லைமுக் காதமுங் காடரைக் காதமும்**
**எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி**
**எல்லை மயங்கா தியங்கவல் லார்கட்(கு)**
**ஒல்லை கடந்துசென் றூர்புக லாமே.** 2911

பொ–ரை: வீடுபேறாகிய ஊரை அடைதற்குரிய பெரு நெறியின்கண் (இரும்நெறி) வானுலகம் என்னும் சோலையை அடைதற்குரிய முக்காத நீளமுள்ள நெறியும், இவ்வுலகு, கீழ் உலகு என்னும் காட்டில் கொண்டு உய்க்கும் அரைக்காத நெறியும், ஆகிய நன்னெறி தீநெறி என்னும் இரு நெறியும் தமது எல்லைகள் ஒன்றோடொன்று கலந்து கிடந்தன. அவற்றின் எல்லைகளை மயங்கி உணராது தெளியக்கண்டு நடக்க வல்லார்க்கு, விரைவில் தாம் செல்லவேண்டிய ஊராகிய வீட்டுலகை அடைதல் கூடும்.

வி–கு: கொல்லை – சோலை, வானுலகம். இது நல் வினையால் எய்தற்பாலது ஆதலின் அது செய்தல் அருமை நோக்கி முக்காதம் எனப்பட்டது. காடு – வெற்றிடம் ஆகிய கீழுலகு. இவ்வுலகும் ஆம். இது தீவினையாலும் தீவினையோடு

கலந்த நல்வினையாலும் எய்துவது ஆகலின், அவ்வாறு எய்துதல் எளிமை நோக்கி அரைக்காதம் எனப்பட்டது. இருநெறி – புண்ணிய நெறி, பாவநெறி. இரட்டுற மொழிதலால் இரும் நெறி எனவும் கொண்டு, பெரு நெறியாகிய அருள் நெறியினையும் உடன் கொள்க. அது வீட்டுலகின்கண் உய்க்கவல்லது. இரு நெறியும் ஒன்றோடொன்று எல்லை மயங்கிக் கிடந்தன என்க. பெருநெறியிற் செல்லவேண்டிய காலஅளவு குறிப்பிடப்பட வில்லை, அது கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டபோதே முதலைப்படற்பாலது ஆதலின்.

நூல்களில் விலக்கிய ஓம்பி விதித்தன செய்தல் மேலுலகின்கண் உய்க்கும். நூல்நெறி தழுவாது ஒழுகும் ஒழுக்கம் காடாகிய கீழுலகின்கண் உய்க்கும். இரண்டிடத்தும் யான் எனது என்னும் செருக்கு உண்டு. இறைவன் உண்மையை உணர்ந்து அவன் அருள்வழி நிற்றல் இவ்விரண்டினும் வேறாகிய பெரு நெறியாகும். இதனைத் தெளிய உணர்ந்து நிற்போர் விரைவில் வீட்டுலகம் புகுவார் என்பது கருத்து.

இனி, பிறர் கூறுமாறு: கொல்லை – பிறவியைக் கொல்லும் ஓம்மொழி; அதில் உயிரோசை மூ அளவு இசைப்பது ஆகலின், முக்காதம் எனப்பட்டது காடு என்பது மலக்காடு. மகாரம் அரை அளவு இசைப்பது ஆகலின், அரைக்காதம் எனப்பட்டது. இருநெறி – அறநெறி, பாவநெறி. இக்கருத்துக்கள் ஒன்றோடொன்று இயைந்து பொருந்து மாறன்மையின், அவை கொள்ளப்படவில்லை. (264)

**உழவொன்று வித்து ஒருங்கின காலத்(து)**
**எழுமழை பெய்யா திருநிலச் செவ்வி**
**தழுவி வினைசென்று தான்பய வாது**
18 **வழுவாது போவன் வளர்சடை யோனே.** 2912

பொ–ரை: சரியை, கிரியை, யோகம் என்னும் நற்றவம் இருவினையொப்பை ஒருவனது அறிவின் கண் நிகழ்த்துதலால் அவனது அறிவும் உலகமுகப்படாது ஒருங்கி நிற்கும். அக் காலத்து வினைநுகர்ச்சிக்கு ஏதுவாக ஒருவன் அறிவின்கண் எழும் யான் என்னும் மேகமும் வினை முளைத்தற்கு ஏதுவாகிய மழையைப் பெய்யாது. அவ்வறிவாகிய பெரிய நிலத்தினது செவ்வியைத் தழுவிநின்று முன்னைய வினைகளும் சென்று தம் பயனை ஆண்டு விளைக்கமாட்டா. அந்நிலையில் வளர்ந்த சடையையுடைய முதல்வன் ஞான நீரைப் பெய்து சிவ போகத்தை அவ்வறிவில் விளைத்தற் பொருட்டுத் தவறாமல் சென்றருளுவன்.

வி–கு: உழவு ஒன்றுவித்தலால் அறிவு ஒருங்கின பக்குவ காலத்து எனவும், உழவிற்குப் பொருந்துவதாகிய வித்துக் குறைந்து ஒடுங்கின காலத்து எனவும் முதல்அடி இருபொருள் கொள்ள நின்றது. மழை பெய்யாது உழவு ஒன்று வித்து ஒருங்கின காலத்து இரு நிலச்செவ்வி தழுவி வினை சென்று பயவாது எனக் கொண்டு கூட்டி முடிக்க. வளர் சடையோன் என்னும் பெயர் கங்கையைக் கரந்த சடையெனக் குறிப்பிப்ப தாய், அவன் அந்நிலையில் வந்து அருள் மழையைப் பொழி தற்குக் குறிப்பேதுவாய் நின்றது. (265)

**பதுங்கிலும் பாய்புலி பன்னிரு காதம்**
**ஒதுங்கிய தண்கடல் ஓதம் உலவ**
**மதுங்கிய வார்களி யாரமு தூறப்**
**பொதுங்கிய ஐவரைப் போய்வளைத் தானே. 2913**

பொ–ரை: பாய்புலி போன்ற உயிர்ப்பு உள் அடங்கவும், பன்னிரண்டு காதம் ஒதுங்கிச் சென்ற தண்ணிய கடல் போன்ற முதல்வன் தன் கருணையாகிய ஈரக்காற்றை வீசுவதனால் அக்

குளிர் காற்றைப் பெற்ற மகன் இனிமை பொருந்திய மனமகிழ்ச்சியும், உள்ளே எழும் பேரின்ப அமுதமும் பெருக்கெடுக்கும்படி, முன்தன்னை வருத்திய ஐம்பொறிகளையும் வளைத்துத தன் வயப்படுத்திக் கொண்டான். இது வாசியோகத்தால் மனம் ஒருங்கி நின்றார்க்கு இறைவன் திருவருள் எளிதிற் கிட்டிப் பாச நீக்கமும் சிவப்பேறும் கிடைக்கச் செய்யும் என்று உணர்த்திற்று.

வி–க: பதுங்கவும் என்பது பதுங்கிலும் எனத் திரிந்து நின்றது. பன்னிருகாதம் ஒதுங்கிய தண் கடல் என்பது புருடனுக்கு இடமாகிய சித்தத்தினின்றும் வித்தியா தத்துவம் ஏழும் சிவ தத்துவம் ஐந்தும் என்னும் பன்னிரண்டு தொலைவுகளைக் கடந்து, அப்பால் நின்ற கருணைக்கடலாகிய முதல்வன் என்றபடி. மதுங்கிய – இனிமையைத் தோற்றுவிக்கும், பொதுங்கிய – துன்பு செய்து வந்த. (266)

**தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு**
**வாணிபஞ் செய்து வழங்கி வளர்மகன்**
**நீலிக் கிறையுமே நெஞ்சின் நிலைதளர்ந்(து)**
**ஆலிப் பழம்போல் அளிக்கின்ற அப்பே. 2914**

பொ–ரை: உயிராகிய மகன் நுண்ணுடல் எனப்படும் ஒரு தோணிக்கண் ஏறித் தொடர்ந்து, பிறவியாகிய கடலில் அலைப்புண்டு வினைகளைச் செய்து அவற்றின் பயனைப் பிறர்க்குக் கொடுத்தும் தான் உண்டும் பண்டமாற்று செய்து வருகின்றான். அவன் தன்னுடைய நெஞ்சை மாயையாகிய நீலிக்குச் சிறிதேனும் தளரவிடின், அம்மாயை, ஆலங்கட்டியானது திரண்டு பழம்போல் தோன்றிப் பின் தண்ணீரையே அளிக்கின்றவாறு போல, பயனுடைய பொருள்போல தோன்றிப் பிறகு வெறும் நீராய்க் கழிந்துவிடுகின்றது. ஆதலினால் நீலியினுடைய

ஆலி போன்ற தோற்றத்தைக் கண்டு மயங்காது தோணியைக் கொடுத்த முதல்வனிடத்துத் தன் நெஞ்சைச் செலுத்தக்கடவன்.

வி–கு: ஆலி – ஆலங்கட்டி. அப்பு – தண்ணீர். அளிக்கின்ற அப்பு – உயர்ந்த இரசத்தைத் தராது தண்ணீராயே மாறி ஒழிதல். ஆலி – நச்சுக்கனி என்பாரும் உளர். அது பொருளாயின், அப்பழத்தைக் கண்டால் அது தோணியைத் தண்ணீரின் கண்ணே வீழ்த்துமாறு போல ஒருவனைக் கரையேற விடாமல் செய்யும் என்பது கருத்தாகக் கொள்க. (267)

**முக்காத ஆற்றிலே மூன்றுள வாழைகள்**
**செக்குப் பழுத்த திரிமலங் காய்த்தன**
**பக்கனார் மிக்கார் படங்கினார் கன்னியர்**
**நக்கு மலருண்டு நடுவுநின் றாரே.** **2915**

பொ–ரை: அறவொழுக்கம், தத்துவ ஆய்வு, சார்புகெட ஒழுகல் என்னும் மூன்று நிலைகளையுடைய நன்னெறியாகிய ஆற்றிலே மூன்று வாழைகளுள்ளன. அவை மும்மலங்களைச் செகுத்து (அழித்து)க் காய்த்துக் கனிந்த நிலையில் உள்ளவை; முறையே மலரும், காயும், கனியும் உடையவை என்றபடி. நன்னெறியில் செல்லும் பக்குவமுடையார் கனிகளை மிகவும் உண்டு பசி அடங்கினார். பக்குவம் எய்தாத கன்னியர் போன்றார் மகிழ்ந்து மலரை உண்டு, ஓரளவு பசி நீங்கிப் பின் பசிப்பாரை ஒத்து நடுநிலைக்கண் நின்றார்.

வி–கு: பக்கனார் – பக்குவம் எய்தினார், பக்குவனார் என்றதன் மரூஉ, அவர் மிக்கு ஆர்பு அடக்கினார் என முடிக்க. ஆர்பு – நுகர்ந்து. நுகர்தற்குச் செயப்படுபொருளாகிய கனி என்பது அவாய் நிலையான் வந்தது. நக்கு – மகிழ்ந்து, அதாவது மலரினுடைய அழகைக் கண்டு அதுவே நுகரற்பாலது என்று

எண்ணி நுகரப்புகுதல். மலரையும் காயையும் மிக்கு நுகரமாட்டாமையின் பசி தீராதாயிற்று. அறத்தின் பயன் ஒருவன் தன்னையும் உலகையும் பொதுப்பட உணர்தல்; அது வாழையின் மலர்க்கு ஒப்பாயிற்று. தத்துவ ஆய்வின் பயன் ஒருவன் தன் உண்மை இயல்பையும் முதற்பொருளின் இயல்பையும் உள்ளவாறு உணர்தல்; அது வாழையின் காய்க்கு ஒப்பாயிற்று.

சார்புகெட ஒழுகல் எனப்பட்ட அனுபவ நிலையின் பயன் கனிக்கு ஒப்பாயிற்று. செக்குப் பழுத்த திரி மலம் காய்த்தன என்னும் தொடரை திரிமலம் செகுத்துக் காய்த்துப் பழுத்தன எனச் சொல்நிலை மாற்றி மூன்றுள வாழைக்கு அடையாக்குக. காயும் கனியும் கூறவே மலரும் உடன் கொள்ளப்பட்டது. இனி முக்காத ஆறு என்பதைச் சகலம் கேவலம் சுத்தம் என்னும் மூன்று நிலைகளையுடைய பிறவிநெறி எனக் கொள்ளினும் அமையும். பிறர் கூறுமாறு: முக்காதம் – முக்குணம். மூன்றுள வாழை – நனவு, கனவு, உறக்கம் என்னும் மூன்று நிலைகளாகிய வாழை, பக்குவம் எய்தினார் மிக்காருடன் கூடிப் படங்கினாராகிய (ஆடை உடுத்தவராகிய) கன்னியரை வெறுத்து, நக்கு இறைவனது அடிமலரை உண்டு நடுநிலைக்கண் நின்றார் எனப் பின்னிரண்டு அடிகளுக்கும், மும்மலங்களும் காய்த்து முதிர்ந்தன என இரண்டாம் அடிக்கும் பொருள் கூறுப.

அறத்தின் பயன் அன்பும் அருளும் எனவும், கலை ஞானத்தின் பயன் உள்பொருள் மூன்றன் பொதுவியல்பு தன்னியல்புகளை உணர்தல் எனவும், மெய்யுணர்வின் பயன் அருள் நிலை இன்புறு நிலை எனவும் கொள்க. அருள்நிலை இன்புறு நிலைகளைப் பெற்றவரே அடங்கினாராவர். ஏனை இருவரும் நடுவுநின்றார். இந்நிலைகளில் வாராமல், கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்னும் உலகர் கடைப்பட்டார் என்பது கருத்தாகக் கொள்க. (268)

**அடியும் முடியும் அமைந்ததோர் ஆத்தி**
**முடியும் நுனியின்கண் முத்தலை முங்கில்**
**கொடியும் படையுங் கோட்சரன் ஐயைந்தும்**
**மடியும் வலம்புரி வாய்த்ததவ் வாறே.** 2916

பொ–ரை: அடியும் முடியும் பொருந்தும்படி அமைந்த தோர் ஆத்தி உளது. அது முடியும் நுனியில் மூன்று தலைகளை உடைய மூங்கில் உளது; இடைக்கண் கொடியும், படையும், கொள்கையையுடைய ஒற்று இருபத்தைந்தும் உள்ளன. அடியும் வலம்புரியாக வாய்ந்தது அந்நெறிக்கண். அஃது எது?

வி–கு: இங்கு ஆத்தி என்பது வேதத்தை; வலம்புரி என்றது பிரணவத்தை; எனவே பிரணவமே அதன் அடி என்றபடி. முத்தலை மூங்கில் என்றது மூன்று முதன்மையான சொற்களையுடைய மகாவாக்கியமென்னும் பெரும்பெயர். அது வேத முடிபு எனப்படும் உபநிடதங்களில் உள்ளது. அதன் வடிவங்கள் தத்துவமசி, அகம் பிரம்மாஸ்மி, ஸோகம் அஸ்மி,. ஸோயம் அஸ்தி, ப்ரக்ஞானம் பிரம்ம எனப் பலவகை வடிவில் விரித்து ஓதப்படும். இங்கே முத்தலை என்றது ஞாதிரு, ஞானம், ஞேயம் என்பவை. மூங்கில் என்றது இவற்றின் சம்பந்தத்தை அடங்கக் கொண்டுள்ள மறைமொழி இதனைத் தெளியக் காட்டும் பெரும் பெயர் சிவாய என்பது. இனி, கொடி என்றது உயிரை வளைத்து நிற்கும் மும்மலங்கள். படை என்றது அவற்றைப் படுக்கும் நெறிமுறைகளாகிய கன்மம், யோகம், ஞானம், பத்தி என்பவை. கோட்சரன் ஐயைந்து என்றது உயிர்க்கு உலகின் பயனைக் கொள்ளுதற்கண் சரிப்பனவாக இருக்கிற் பொறிகள் பத்து, நுண்பூதம். பெரும் பூதம் பத்து. அகக்கரணம் நான்கு, புருடன் ஒன்று. இத்துணையும் வேதத்தின் கண் காணப்படுபவை, இனி பிறர் கூறுமாறு, ஆத்தி – உலக சம்பந்தம், அடியும் முடியும் – தோற்றமும் சிறப்பும், முத்தலை மூங்கில் – முத்தியை அளிக்கும்

மூன்று கண்களையுடைய சிவம். கொடியும் படையும் – நினைப்பும் மறப்பும் கோட்சரம் ஐ ஐந்து – குற்றம் பொருந்திய ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து. மடியும் – கெடும். வலம்புரி – வெற்றி நாதமாகிய சங்கொலி. (269)

**பன்றியும் பாம்பும் பசுமுசு வானரம்**
**தென்றிக் கிடந்த சிறுநரிக் கூட்டத்துக்**
**குன்றாமை கூடித் தராசின் நிறுத்தபின்**
**குன்றி நிறையைக் குறைக்கின்ற வாறே. 2917**

பொ–ரை: உலகில் இழிபொருள்களின் விழைவும், சீற்றமும், அமைதியும், குறும்பும் இனம் பிரிந்து சிறுமையினை யுடைய தன்னலச் சூழ்ச்சிகளின் இடையில் விரவி உள்ளன. இச்சூழ் நிலையால் ஒருவன் தன்னுடைய தூய உயர்நிலை தளராமல் இருந்து நல்வினை தீவினை என்னும் இரண்டி னிடத்தும் அவற்றின் பயன்களாகிய இன்பத் துன்பங்களிடத்தும் சம புத்தி வைத்து ஒழுகி வந்தால், அவன் அறிவிச்சை செயல் களைக் குன்றவைக்கும் ஆணவமலத்தின் வலியைக் குறைத்தல் கூடும்.

வி–கு: முசுவானரம் – முசுவாகிய குரங்கு. அது சிறு குறும்புகளுக்கு அடையாளமாயிற்று. சிறுநரிக் கூட்டம் – தன்னலச் சூழ்ச்சிகள். குன்றி – குன்றிமணியையும் ஆன்மாவின் ஆற்றலைக் குன்றச் செய்யும் மலத்தையும் குறித்து நின்றது. பிறவும் அன்ன. குன்றியைத் தோல்வி எனவும், பாம்பை வெற்றி எனவும், பசுவை அடக்கம் எனவும் முசுவை அடங்காமை எனவும் பன்றியை ஆணவம் எனவும் கொண்டு, குன்றி பன்றிகளை மாற்றி வைத்து உரைப்பாரும் உளர். தென்றிக்கிடத்தல் – இனம் பிரிந்து கிடத்தல். (270)

**மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக்**
**கட்டுவிட் டோடின் மலர்தலுங் காணலாம்**
**பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கினால்**
**கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணாதே. 2918**

பொ—ரை: அறியாமைப் பிணிப்பினால் பிணிப்புண்டு தன் இயற்கை நிறைவும் சிவமணம் சிவானந்தத் தேனும் விளங்காமல் அரும்பு நிலையில் உள்ளதோர் ஆன்மா உண்டு. அவ்வறியாமைப் பிணிப்பு நீங்கி மலர்ந்து விரிந்து சிவமணமும் சிவானந்தத் தேனும் விளங்க நிற்கும் நிறை நிலையை ஒருவன் பெறுதலும் கூடும். அவ்வாறு பெறுதல், ஒருவன் யான் எனது என்னும் அகப்பற்று புறப்பற்றுக்களை விட்டு, அவை நிகழ்தற்கு இடனாக உள்ள பருவுடம்பும் அதன் சூழ்நிலையும் தன் உணர்வில் இல்லை யாகும்படி திருவருளில் உறைத்து நின்று நோக்கினால் கைகூடும். இங்ஙனம் நோக்கினால் அன்றி, அந் நோக்குப் பற்றி அறியாமைப் பிணிப்பு நீங்கினால் அன்றி, அந்நிலை, ஒருவனுக்கு உணரப்படாது.

வி—கு: கட்டு – அறியாமைப் பிணிப்பு. பற்று – அகப் புறப் பற்றுக்கள், அம்மனை – உடம்பு. பாழ்பட நோக்கல் – அவை தன் உணர்விற்குப் புலனாகாதபடி அருட்கண்ணால் தன்னையே நோக்கி நிற்றல். அன்றி என்பதை நோக்கினால் என்றதன் பின்னரும் கூட்டுக. நோக்கினால் கட்டு விடும்; கட்டு விட்டால் மலர்தல் காணப்படும் என்பது கருத்து. (271)

**நீரின்றிப் பாயும் நிலத்தினிற் பச்சையாம்**
**யாவரும் என்றும் அறியவல் லாரில்லை**
**கூரு மழைபொழி யாது பொழிபுனல்**
**தேரினிந் நீர்மை திடரினில் லாதே. 2919**

பொ–ரை: கருவிகளின் தொழிற்பாட்டினால் உண்டாகும் பாச ஞானமாகிய நீர் இல்லாமல் சிவஞானம் என்னும் வெள்ளம் பாயும் பற்றற்ற மேட்டு நிலத்திலே அருள் விளக்கம் என்னும் பசுமை உள்ளது. இதனை அறிய வல்லார் என்றும் பலராக இல்லை. உள்ளது சிறத்தல் என்னும் விதிப்படி ஆன்மாவின்கண் உள்ளதாகிய திருவருள் மிக்குப் பெருகும் மழையன்றி வேறாக உள்ள கருவி கரணங்களின் விருத்தியாகிய பொழிமழை தாம் செல்ல மாட்டாத அச் சேண் நிலத்தில் ஏறமாட்டா. இத் தன்மை ஆராய்வார்க்குப் புலனாகும்.

வி–கு: இறைவன் சித்தமும் செல்லாச் சேட்சியன் ஆதலின் சித்த விருத்தியாகிய மழை உலகப் பொருள்களிற் செல்வதல்லது உள் நிலையாகிய மேல்நிலை ஆன்மாவின்கண் செல்லாது. இம்மழை இல்லாத இடத்து ஆன்மாவின்கண் என்றும் உள்ளதாகிய சிவம் தன் அருளைப் பொழிந்து பத்திப் பசுமையை விரித்துச் சிவானந்த விளைவைத் தரும் என்பது கருத்து. (272)

**கூகை குருந்தம தேறிக் குணம்பயில்**
**மோகம் உலகுக் குணர்கின்ற காலத்து**
**நாகமும் ஒன்று நடுவுரை செய்திடும்**
**பாகனு மாகின்ற பண்பனு மாமே. 2920**

பொ–ரை: கருவிகளோடு கூடி நிற்கும் சகல நிலையில் மெய்ப்பொருளைக் காணமாட்டாத ஆன்மாவாகிய கூகை வேதமாகிய குருந்த மரத்தின் உச்சியில் ஏறி, குண வடிவில் உள்ள உலக வழக்கிற்குக் காரணம் மயக்கமே என்று உணரும்போது, வான் ஒலி ஒன்று அதன் உள்ளத்தில் உறுதிமொழியை உணர்த்தும். அப்பொழுது அவ்வான்மா பரிபக்குவம் உடையனும் ஆகிச் சிவத்திற்குரிய பண்புகளைப் பெறுபவனும் ஆவன்.

வி–கு: குணம் பயில் உலகுக்கு (முதல்) மோகம் ஆதலை உணர்கின்ற காலத்து எனக் கொண்டு கூட்டி உரைக்க. குருந்தம் இறைவன் இருத்தற்கு இடன் ஆதலின் வேதத்தைக் குறித்தது. அதன்மீது ஏறுதலாவது அதைப் பயின்று அதன் உச்சி எனப்படும் வேதாந்தத்தைக் கேட்டுச் சிந்தித்தல். அச்சிந்த னையில் உலகு குணமயமாதலும், மோகம் அதன் காரணம் ஆதலும் முதலிய மேலான பொருள்கள் விளங்கும். நாகம் – வான் ஒலி. இஃது ஆசிரியனை உணர்த்திற்று. அவன் வேதத்தின் நடுவில் உள்ளதாகிய உரையை மாணாக்கன் நெஞ்சிற்கொள்ள உபதேசிப்பவன். அவ்வுரை திருவைந்தெழுத்தெனல் பொருந் தும். அவ்வுபதேசம் பெற்று அதன் பொருளைப் பயின்று வரும் மாணாக்கன் மலபாகம் உற்றுச் சிவத்துவ விளக்கம் பெறுவன். இனி, குருந்தம் என்றது உபதேசம் எனவும், நாகம் என்றது குரங் காகிய மனம் எனவும், உபதேசம் கேட்ட மாணவனது மனம் சொன்ன வழியில் நின்று மலபாகத்தையும் சிவத்துவ விளக்கத் தையும் பெறும் எனவும் விளக்கம் கூறுவாரும் உளர். உயிர் உடலை இடங் கொண்டு குணவடிவ உலகுக்கு மயங்கி எண்ணும் போது, நாகம் எனப்படும் குண்டலிசத்தி அதன் அந்தக் கரணங் களில் நின்று வாக்கு ரூபமாகச் சவிகற்ப உணர்வைத் தரும். அதனால் அவ்வுயிர் பாகனும் பண்பனும் ஆம், அல்லது பாகனையும் பண்பனையும் உணரும் என்றலும் ஒன்று. குருந்தம் – உடல். பாகன் பண்பன் – உயிர், சிவம். (273)

**வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன**
**வாழைக்குச் சூரை வலிது வலிதென்பார்**
**வாழையுஞ் சூரையும் வன்துண்டஞ் செய்திட்டு**
**வாழை யிடங்கொண்டு வாழ்கின்ற வாறே. 2921**

பொ–ரை: இன்பம் எனப்படும் வாழையும் துன்பம் எனப்படும் முட்செடியும் ஊழ்வினை விளைவாக ஒருவனது

உள்ளத்தின்கண் தோன்றி அவ்விடத்தைத் தமதாக்கிக் கொண்டன. அவ்விரண்டனுள் வாழையினும் முட்செடி மிகவும் வலிதென்பர். அதாவது, துன்ப விளைவே ஒருவன் உள்ளத்தை மிகவும் மாற்றமடையச் செய்யக் கூடியது. இவ்விரண்டையும் வேரோடு அகழ்ந்து, மீளத்தோன்றாதபடி துண்டம் செய்து எருவாக இட்டால், அவ்விடத்தில் வேறு ஒரு நல்ல வாழை, அதாவது சிவபுண்ணியம் தோன்றி வளரும். இதுவே ஒருவன் உலகத்தில் வாழவேண்டிய நெறியாகும்.

இதனால் இன்பத் துன்பங்களைச் சமமாக எண்ணி ஒருவன் தவத்தைப் புரிதலே வாழும் நெறி என்பது உணர்த்தப் பட்டது.

வி–கு: இரண்டாவது வாழையை வாழ் + ஐ எனப் பிரித்துச் சிவம் என்று உரைத்துச் சிவத்தை உள்ளத்திற் கொண்டு உறைதலே நெறி என்று உரைத்தலும் ஒன்று. (274)

**நிலத்தைப் பிளந்து நெடுங்கடல் ஓட்டிப்**
**புனத்துக் குறவன் புணர்ந்த கொழுமீன்**
**விலக்குமின் யாவர்க்கும் வேண்டிற் குறையா**
**தருத்தமு மின்றி யடுவது மாமே. 2922**

பொ–ரை: ஐம்புல வேடர் சூழலில் உள்ள குறவனாகிய உயிர், நிலத்தை உழுது பயிரிட்டும் நெடுங் கடலில் தெப்பத்தை ஓட்டிச் செல்வம் ஈட்டியும், தன் உடம்பாகிய கொழுத்த மீனை வளர்க்கின்றான். அம்மீனை நல்லோர் விலக்குதல் வேண்டும். அதாவது, உடலின்கண் பற்றுவையாது உயிர்க்கு உறுதி பயக்கும் உணர்வோடு வாழ்தல் வேண்டும் என்றபடி, உயிர் நலத்தைப் பேணாது உடல் நலமே கருதி ஒருவன் இருப்பின், அவன் என்றும் குறையாத அருட்செல்வத்தை இகழ்ந்து பிறப்பிறப்புக்களுட் பட்டுத் துன்புறுவன்.

வி–கு: குறையாதருத்தம் – குறையாத அருத்தம். அகரம் – தொகுத்தல் விகாரம். அடுவது – துன்புறுத்துவது. கொழுமின் – உடலின்கண் வைக்கும் பற்று. (275)

**தளிர்க்கும் ஒருபிள்ளை தட்டா னகத்தில்**
**விளிப்பதோர் சங்குண்டு வேந்தனை நாடிக்**
**களிக்குங் குசவர்க்குங் காவிதி யார்க்கும்**
**அளிக்கும் பதத்தொன் றாய்ந்துகொள் வார்க்கே. 2923**

பொ–ரை: தட்டானாகிய உயிர்க்கு உரிய உடம்பகத்துத் தளிர்த்து வளர்கின்ற பிள்ளை ஒன்று உள்ளது. அப்பிள்ளையை அழைக்கும் சங்கு ஒன்று உண்டு. அச்சங்கின் பெயர், ஆய்ந்து கொள்கின்றவர்களுக்கு, ஓர் அரசன் தன்கண் வந்த குயவனுக்கும் காவிதிக்கும் களிப்புண்டாகும்படி அளிக்கும் பதத்துள் ஒன்றாகும். அளிக்கும் பதம் அன்னம், அதாவது ஹம்ஸம்.

வி–கு: பதம் என்ற சொல் சோறு அல்லது அன்னம் என்பதைக் குறிக்கும். அஃது இங்கு ஹம்ஸம் என்னும் அசபையின் பரியாயமாகிய அன்னம் என்பதைக் குறித்து நின்றது. தட்டான் – தனக்குக் கொடுத்த உடம்பை வேண்டா என்று தட்ட மாட்டாதவன். அவனது அகம் பருவுடல்; அதன் கண் தளிர்க்கின்ற பிள்ளை என்பது உயிர்க்கும் வாசி எனப்படும் உயிர்ப்பு. விளிக்கும் சங்கு என்றது அவ்வுயிர்ப்பை அழைக்கும் ஹம்ஸம் என்ற அசபை. மூலாதாரத்தில் ஹம்ஸம் என்னும் அசபை இருந்து கொண்டு விடுத்தும் அடக்கியும் உயிர்ப்பை நடத்து கின்றது. ஹகாரத்தினால் விடுத்தலாகிய இரேசகமும் ஸகாரத்தினால் அடக்குதலாகிய பூரகமும் நிகழ்கின்றன. இவ்விரண்டானும் மறப்பும் நினைப்பும் உயிர்க்கு மாறி மாறி வருகின்றன. ஹம்ஸம் என்றது பிரணவத்தின் பரிணாமமே ஆதலால் அதனைச் சங்கு என்றார். குசவன் – மட்' ண்டம் செய்து கொடுப்பவன். காவிதி – வரி தண்டிக் கொடுப்பவன். (276)

**குடைவிட்டுப் போந்தது கோயில் எருமை**
**படைகண்டு மீண்டது பாதி வழியில்**
**உடையவன் மந்திரி யுள்ளலும் ஊரார்**
**அடையார் நெடுங்கடை ஐந்தொடு நான்கே. 2924**

பொ–ரை: கோயில் எருமையாகிய உயிர்ப்பு குடை கோயில் ஆகிய மூலாதாரத்தினின்றும் வெளியே வந்தது. உடம்பு அதனால் படுதலைக்கண்டு உள்ளே மீண்டது. தனக்கு உடையனாகிய உயிர் தனது மந்திரிகளாகிய அந்தக் கரணங்களை எண்ணி அவ்வெருமையை வயப்படுத்தி நடத்தத் தொடங்கின பின், ஊரில் உள்ளவர்களாகிய ஏனைத் தத்துவ தாத்துவிகங்ள் வீட்டிற்கு உள்ள ஒன்பது வாயில்களை மூடார் ஆயினர்.

வி–கு: ஒன்பது வாயிலையும் அடைத்தல் இறத்தல். அஃது,

**ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்**
**ஒக்க அடைக்கும்போதுணர மாட்டேன்**

என்னும் திருத்தாண்டகத்தாலுணரப்படும் உயிர்ப்பை அந்தக் கரணங்களோடு ஒன்றுவித்து நெறிப்படச் செலுத்தின் உடம்பு நீடிக்கும் என்பது கருத்து. குடை – குடை கோயில் போன்ற மூலா தாரம் அல்லது உயிர்ப்புப்பை. எருமை பால் சொரிவது போல உடம்பி குப் பிராணசக்தியை அளித்தலின, உயிர்ப்பு எருமை எனக் குறிக்கப்பட்டது. உடையான் உடம்பிற்கு உடையவனாகிய உயிர். மந்திரி – அந்தக் கரணங்களுள் தலைமையினையுடைய சித்தம். படை – படுதல், அழிதல். (277)

**போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்**
**ஆகிப் படைத்தன ஒன்பது வாய்தலும்**

**நாகமும் எட்டொடு நாலு புரவியும்**
**பாகன் விடாவிடிற் பன்றியு மாமே.** 2925

பொ—ரை: உடம்பின்கண் உள்ள ஒன்பது வாயில்களும், வெளிச்செல்லும் அழுக்கு எட்டும் உள்ளே வந்து சேர்கின்ற பற்றப்படும் எட்டு உணர்வுகளுமாகி நடைபெறும்படி படைக்கப் பட்டன. அவ்வுடம்பின்கண் உணர்வுக்குக் காரணமாய் நிற்கும் குரங்காகிய மனமும், பன்னிரண்டு என்னும் அளவால் குறிக்கப் படும் வாசியாகிய உயிர்ப்பும் ஆகிய இரண்டனையும் உடம்பின் தலைவனாகிய உயிர் நன்னெறிக்கண் செலுத்தாவிடின், இவ் வுடம்பு பன்றியைப்போல கீழ்நிலைக் கண்ணதாய் அமைந்து விடும்.

வி—கு: போகின்ற எட்டு – மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவற்றால் வெளிப்படும் அழுக்கு ஐந்தும், மல மூத்திரம் உயிர்வித்து என்னும் மூன்றும் ஆகிய எட்டு. பற்று என்பது பத்தெனத் திரிந்து நின்றது. புகுகின்ற பற்றப்படும் எட்டாவன சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தும் இவற்றின் பற்றுக்கோடாகிய பொருளின் நிருவிகற்ப உணர்வு சவிகற்ப உணர்வுகளும், அவ்வுணர்வுகளின் பயனாகப் புத்தி தத்துவத்தின்கண் திரிந்து தோன்றும் இன்பத் துன்ப மயக்க உணர்வும் ஆகிய எட்டு. நாகம் – குரங்கு, அஃது இங்கு மனத்தைக் குறித்து நின்றது.

எட்டும் நான்கும் என்றது வெளியே விடப்படும் 12 அங்குலி உயிர்ப்பில் உட்கொள்ளப்படும் எட்டங் குலியும் உட்கொள்ளாது. இழக்கப்படும் 4 அங்குலியு மாகும். இவ்வியல் புள்ள புரவி எனவே வாசியாகிய உயிர்ப்பு என்பது பெறப் பட்டது. இனி முன்னிரண்டு அடிகளுக்கு வெளியே செல்லும் ஆசையுமய் உள்ளே செல்லும் ஆசையு

மாகி அமைந்தது ஒன்பது வாயிலை உடைய உடம்பு எனவும் உரைப்பர். அவர்க்கு எட்டு என்னும் எண், திசையைக் குறித்து. அதன் பரியாயமாகிய ஆசையை உணர்த்தி நின்றது. திசை எட்டு என்பதும், ஆசை என்னும் சொல் திசையையும் குறிக்கும் என்பதும் நினைத்தற்குரியன. அன்றி உலகப் பொருள்களை, எட்டுதலின் எட்டு ஆசை என்பாரும் உளர். (278)

**பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்**
**கூசி யிருக்குங் குருகிரை தேர்ந்துண்ணும்**
**தூசி மறவன் துணைவழி எய்திடப்**
**பாசங் கிடந்து பதைக்கின்ற வாறே. 2926**

பொ—ரை: நீரில் உள்ள பொருளைத் தோன்றவொட்டாது மறைக்கும் பாசியைப் போல அறியாமையினால் மறைக்கப் பட்ட, ஐம்பொறி என்னும் கரைக்கு உட்பட்ட உலகமாகிய குளத்தின்கண், உயிராகிய பறவை கூச்சத்துடன் தனக்கு வேண்டிய விடயமாகிய இரையை அதன் நலனும் தீங்கும் ஆய்ந்து உண்ணா நிற்கும். அக்குருகு தூசி மறவனாகிய வாசி யோகத்தின் நல்ல நெறியைப் பின்பற்றின், அவ்வறியாமை யாகிய பாசி கெடும்; பொருள்களின் உண்மை இயல்புகளும் எளிதின் விளங்கும்.

வி—கு: தூசி – குதிரை, தூசிமறவன் – வாசியை ஒழுங்கு படுத்திச் செலுத்தும் குண்டலியோகம். துணை வழி – உயிர்க்கு நற்றுணையாகிய நெறி. இனி, பாசி படர்ந்த குளம் என்றதைக் காமம், வெகுளி, மயக்கம் நிறைந்த சித்தம் எனவும், அதன்கண் வரும் விடய இன்பத் துன்பங்களை இரை எனவும் கொள்ளினும் அமையும். தூசி மறவன் என்றது பற்றறுதியாகிய வைராக்கியம் என்பாரும் உளர். (279)

**கும்ப மலைமேல் எழுந்ததோர் கொம்புண்டு**
**கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு**
**வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்குள்**
**வண்டாய்க் கிடந்து மணங்கொள்வன் ஈசனே. 2927**

பொ–ரை: அடி விரிந்து வாய் குவிந்து நிற்கும் கும்பம் போன்ற பிரபஞ்சமாகிய மலையின்மீது, அதன் காரணமாகிய மாயை எனப்படும் ஒரு பூங்கொம்பு உண்டு. அம் மாயைக்கு மேல் அதனது துகளாகிய ஆணவத்தை நீக்கி நிற்பதாகிய திருவருள் என்னும் காற்றுண்டு. கொம்பின் மலர்ந்த மலர்போல, மாயையினின்றும் விடுபட்டுத் தோன்றி விரிந்த உணர்வுள்ள, தன்னிறைவு பெற்று விளங்கும் ஆன்மாவாகிய மலர் உண்டு. அப்பூவின் கண் வண்டுபோல இறைவன் தங்கி நின்று, அதன் குணமாகிய மணத்தை அடங்கக் கொள்வன்.

வி–கு: இங்கே குவிவு விரிவு என்பன நுட்பம் ஆதலும் பருமையாதலும் ஆகிய இயல்புகள். பிரபஞ்சம் என்னும் சொற்குப் பொருள் மாயையினின்றும் விரிந்தது என்பது. பிரபஞ்ச மாகிய உலகம் பருநிலை உடையது (தூலம்). அதினினும் நுண்ணிது (சூக்குமம்) அதன் முதற்காரணமாகிய மாயை அதனினும் நுண்ணிது. ஆணவ இருளால் பொதியப்பட்டு மாயை யிற் கிடக்கும் உயிர். உயிரினும் நுண்ணிது முதற்பொருள். மாயையை மோகினி என்பர். ஆகலின் அது கொம்பெனப் பட்டது. அதன் கீழுள்ள ஆன்ம வித்தியா தத்துவங்கள் முப்பதும் மலைபோல் குவிந்து நிற்றலின், அவற்றைக் கும்பப மலை என்றார். இனி, கும்பமலையைட் புலன் ஒடுக்கம் பெற்ற சித்தம் எனவும், அதன் மேல் கொம்பினைத் திருவடி இன்பம் எனவும், காற்றை இன்ப உணர்ச்சி எனவும், மலரை மெய்யுணர்ந்த ஆன்மா எனவும், வண்டு மணம் உண்டலைச் சிவம் ஆன்மாவோடு கலந்து நிற்றல் எனவும் விளக்குவாரும் உளர். (280)

**வீணையுந் தண்டும் விரவி யிசைமுரல்**
**தாணுவும் மேவித் தகுதலைப் பெய்தது**
**வாணிபஞ் சிக்கென் றதுவடை யாமுன்னம்**
**காணியும் அங்கே கலக்கின்ற வாறே.** 2928

பொ–ரை: தாணு – மாறுதல் இல்லாத முதற் பொருள், அஃது உயிர்களுக்கு உள்ள விழைவு அறிவு செயல் ஆற்றல்களை வீணையாகிய நியதியும், தாளமாகிய காலத்தையும் கலக்கச் செய்து, இசையாக மெல்லென எழும்படி செய்கின்றது. இவ் வீணை ஓசையால் உயிரைப் பற்றி நிற்கும் இருள் மலமாகிய யானை தன் செருக்கு அழிந்து உயிருக்கு இனிதாக அடங்கி நிற்கின்றது. இவ்வாறு இசையை எழுப்பும் முதல்வன் உயிர்க்குத் தகுதல் எனப்படும் பக்குவத்தை உண்டு பண்ணுகின்றான். இதுவே தாணுவும் தகுதலைப் பெய்தது என்பதனால் குறிக்கப் பட்டது. இங்ஙனம் பக்குவம் முதிர்ந்த உயிர்க்கு உலக வழக் காகிய வாணிபஞ் சுருங்கிற்று (சிக்கென்றது). உடம்பிலுள்ள ஒன்பது வாயிலும் அடையாத முன்னமே, அதாவது உடம்பி னின்றும் உயிர் நீங்காத நிலையிலேயே, முத்தி நிலமாகிய காணி அச்சகச நிலையில் வந்து கலப்பதாயிற்று.

வி–கு: சீவ நிலையும் சிவத்துவ விளக்கமும் ஒன்றோ டொன்று இணைந்து நிற்கும் எல்லையே சீவன்முத்தி நிலை எனப்படும். தட்டு என்பது தண்டு என மெலிந்து நின்றது. தண்டு – தட்டு, காலம்; வீணை – நியதி. இறைவனால் பிறப்பு நிலையில் காலம் நியதி என்னும் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு உயிர்களுக்கு இயற்றப்படும் நினைப்பும் மறப்புமாகிய மிகுநுண் ஐந்தொழிலால் உயிர்கள் பக்குவத்தை அடைகின்றன. பக்குவமாவது இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் என்பவை இதனால் உலக வாக்குக்குறைந்து வீட்டுலக வழக்குத்
19 தொடர்கின்றது என்பது கருத்து.

**ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்**
**வானம் நணிய துடைத்து.**

என்னும் திருக்குறள் உடன்வைத்து ஓர்தற்கு உரியது. தண்டு என்றது குழல் எனவும், இசை முரலுதல் யோக நெறிக்கண் கேட்கப்படும் நாத ஒலி எனவும் கொண்டு, அவற்றிற்கேற்ப உரைப்பாரும் உளர். (281)

**கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது**
**அங்குபுக் காலன்றி ஆய்ந்தறி வாரில்லை**
**திங்கள்புக் கால்இரு ளாவ தறிந்திலர்**
**தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே.** **2929**

பொ–ரை: கொங்கு நாட்டில் புகுந்தவரோடு கூடி நின்று முதல்வனோடு செய்த வாணிபத்தின் இயல்பை அந்நாட்டில் புகுந்தபின் அன்றி இங்கிருந்தே அஃது இன்னது என்று ஆய்ந்து அறிதல் இயலாது. இரவின்கண் திங்கள் உதயமான பின் இருளை ஒருவரும் அறியார்; அப்பொழுது திங்கள் ஒளியில் பல்வகைப் பொருளும் நன்கினிது விளங்கி இன்புறுத்தும். சிலராகிய தவமுடையாரே என்றும் தங்கும் நிலமாகிய வீட்டுலகின்கண் புகுந்தவர்.

வி–கு: கொங்கு என்றது மேற்கின் கண்ணதாகிய மலை நாடு. அஃது இங்கு வீட்டு நிலத்தைக் குறித்து நின்றது. கொங்கு நாட்டில் உயர்ந்த வாசனைப் பொருள்கள் கிடைக்குமாறு போல, சிவ உலகில் மெய்யுணர்வும் பேராற்றலும் பேரின்பமும் கிடைக்கும். அறியாமையும், இயலாமையும், ஏனைக் குற்றங் களும் நீங்கும். இவை நீங்கி அவற்றைப் பெறுதலே இங்கு வாணிபம் எனப்பட்டது. வீட்டு உலகிற் செல்வார் முன்னரே சென்று பழகினவரோடு கூடி ஆண்டுச் செல்லுதற்கு உரியர்; நெறி

புலனாகாமையின் தாமே செல்லக் கருதுதல் தவறாய் முடியும். வீட்டுலகில் இன்ப ஒளி உண்டாகும். துன்ப இருள் நீங்கும். தவத்தினர் சிலரே அவ்வுலகில் புகுந்து இன்புற்றவர். தங்கு – என்றும் தங்கும் இடமாகிய வீட்டுலகு, இனி, தங்குபு உக்கார் சிலர் தாபதர் எனப் பிரித்து, சிலராகிய தவத்தினர் வீட்டுலகில் தங்கித் தம் முன்னைச் சிறுமையினை உகுத்தார் (நீங்கினார்) எனினும் அமையும்

***இங்ஙன் இருந்ததென் றெவ்வண்ணம் சொல்லுகேன்***
***அங்ஙன் இருந்ததென் றுந்திபற***
***அறியும் அறிவதன் றுந்திபற.***

என்னும் திருத்தாழிசை உடன்வைத்து நோக்கற்பாலது.

**போதும் புலர்ந்தது பொன்னிறங் கொண்டது**
**தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை**
**ஏதில் ஈசன் இயங்கு நெறியிது**
**மாத ரிருந்ததோர் மண்டலந் தானே.** 2930

பொ–ரை: குற்றமில்லாத இறைவன் விளங்கும் நெறியாகிய இந்த மெய்யுணர்வு நெறிக்கண் இருள் நீங்கி மாசறு காட்சி எய்தும் பகற்போது உண்டாயிற்று. அருள் ஒளி எங்கும் பரவிற்று. அந்நெறியின் இரண்டு எல்லைகளாகிய உலகமும் சிவமும் என்னும் இரண்டின் கண்ணும் தாதை உதிர்க்கும் மணமலரை உடைய புன்னையாகிய சிவமே விளங்கி நின்றது. அந்நெறிச் சென்ற புந்தி வட்டமானது அருள் உருவாகிய அம்மையை ஒரு பாகத்திற் கொண்ட இன்புருவச் சிவத்தை ஓர்கின்ற மண்டலமாக ஆயிற்று.

வி–கு: மாதர் காதல் என்பது தொல்காப்பியச் சூத்திரம். அச்சொல் இங்கு அருட்சத்தியை உணர்த்தி நின்றது, ஆதலினால்

மாதர் இருந்தது என்னும் பெயர் சிவத்தைக் குறிப்பதாயிற்று. அதனை ஓரும் மண்டலம் என வினைத்தொகையாகக் கொள்க. ஈசன் இயங்கும் நெறியைத் திருவைந்தெழுத்தால் உணர்த்தப் படும் திருவருள் நிலை எனக் கொள்க. அந்நெறியில் நிற்கும் உள்ளம் ஒளி பெற்றுப் போகம் மோட்சம் இரண்டையும் சிவ போகமாகத் துய்க்கும் என்பது கருத்து. (283)

**கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே**
**காமுற்ற கத்தி இடுவர் கடைதொறும்**
**மீவற்ற வெல்லை விடாது வழிகாட்டி**
**ஆமுற்ற தட்டினால் ஐந்துண்ண லாமே. 2931**

பொ—ரை: தலைவனாகிய முதல்வன் முழுவதும் விரும்பும் குடிகளாகிய உயிர்கள், அவனை நோக்குதல் இன்றி, தம்மளவிலே விரும்பியவற்றை எண்ணிப் பல வகையாகப் பிதற்றுவர். அவ்வுயிர்களின் இல்லமாகிய உடம்பில் உள்ள புருவ நடு கழுத்து நெஞ்சம் உந்தி மூலம் என்னும் அரிய கட்டுகளின் வாயில்தோறும் அவற்றின் முனைப்புக் கெடும்படி, அவ்வெல்லைகளில் விடாது உடனின்று வழிகாட்டியாக நிற்கின்ற, தமக்கு உற்ற பாதுகாப்பினால் ஐம்புலன்களையும் நுகர்தல் பொருந்துவதாம்.

வி—கு: கடைதொறும என்றது நனவு, கனவு, உறக்கம், பேர் உறக்கம், உயிர்ப்படக்கம் என்னும் அவத்தைகள் தோறும் என்றபடி. எல்லை விடாது என்றது ஓரிடத்தும் உயிரை விடுதல் இன்றி வழிகாட்டி என்றது கருவிகளாலும் நூல்களாலும் ஆசிரியனாலும் உயிர்களுக்கு உணர்த்தி என்றபடி. வழிகாட்டி ஆம் உற்ற தட்டு எனக் கூட்டுக. தட்டு – பரிசை, தீங்கு வாராமல காக்கும் உலோக வட்டம், அத்தட்டாவது இறைவனுடைய திருவருள்; அத்திருவருள் துணையாக நிற்பின் உயிரினது

நுகர்ச்சி இறைவனால் ஏன்று கொள்ளப்படும் என்பது கருத்து. ஐந்துண்ணலாமே என்பதற்கு ஐம்மலங்களையும் கெடுத்தல் கூடும் என்றுரைப்பினும் அமையும். (284)

**தோட்டத்தில் மாம்பழந் தோண்டி விழுந்தக்கால்**
**நாட்டின் புறத்தில் நரியழைத் தென்செயும்**
**மூட்டிக் கொடுத்த முதல்வனை முன்னிட்டுக்**
**காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. 2932**

பொ–ரை: நாட்டின் புறத்தில் வாழும் நரி மண்ணைப் பறித்துத் தோண்டும்போது, தோட்டத்தில் மாமரத்தில் கனிந்திருந்த பழம் கீழே விழுந்தால், அவ்வொலியைக் கேட்டு நரி தன் இனத்தைத்.தனக்குத் துணையாக அழைக்கும். அழைப் பினும், தோட்டத்தின் உள்நுழைய மாட்டாமையானும் பழம் தின்னுதற்குரியது என்பதை அறியாமையானும், அப் பழத்தி னால் எப்பயனையும் பெறாது. அதுபோல, உலக நுகர்வுகளில் உளம் வைத்து உழலும் கீழ்மக்கள் உயர்ந்த நூல்களில் உள்ள மறைமொழிகளை உயர்ந்தோர் எடுத்துக் கூறக் கேட்பினும் அவ்வுறுதி மொழிகளால் சிறிதும் பயன் எய்தமாட்டார். ஆணவ மலத்தில் மறைந்து கிடந்த உயிர்களின் அறிவை மாயை காரியக் கருவிகளாலும் பிறவாற்றாலும் மூண்டு விரியும்படி அருள்புரிந்த முதல்வனை முன்னிட்டு, உயர்ந்த நூல்களில் உள்ள உறுதி மொழி களை எடுத்துக்காட்டி, அம்மொழி வழி நிற்கும் முறையினையும் அறிவித்து, உடன் நின்று நிற்பிப்பவராகிய ஆசிரியர் தம் துணையை நீக்கிக் கொண்டது போல் ஆகும்.

வி–கு: உபதேசம் பெறினும் ஆசிரியன் அருள் இன்றி அவ்வுபதேசப் பயனை ஒருவன் எய்தமாட்டான்; அங்ஙன மாகவும் உலக நுகர்விற் செல்லும் இழிதகையர். ஒரோவழி உயர்ந்த நூற்பொருளை எடுத்து விளக்கும் போதக ஆசிரியன்

வாய்மொழியாக, உயர்ந்த உறுதிகளைக் கேட்பினும் அவ்வுறுதி மொழிகளின் உயர்வு அறியமாட்டாமையானும் அவற்றைக் கொண்டு சாதிக்கும் நெறிமுறை உணராமையானும் அவற்றால் பயன் கொள்ளார் என்பது கருத்து. தோண்டிய வழி என்பது தோண்டி எனத் திரிந்து நின்றது. (285)

**புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்**
**புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லிப்**
**புலம்பி னவளோடும் போகம் நுகரும்**
**புலம்பனுக் கென்றும் புலர்ந்திலை போதே. 2933**

பொ—ரை: இரவு கழிந்து பொழுது விடிந்தது என்பதைப் பறவைகள் தம் ஒலியினால் தெரிவிக்கின்றன. அதனை உணர்ந்த விடன் பொழுது விடிந்து விட்டதே என்று கவலை கொண்டவ னாய்ப் படுக்கையினின்றும் எழாமல் வெளிச்சத்தையும் காணாமல் துயிலின்பத்தை நுகர்ந்து கொண்டிருந்தான். அவனது அறியாமையினால் அவனுக்குப் பொழுது விடியவில்லை. அதுபோல, ஒருவனது வாழ்வில் மெய்யுணர்வு பெறுதற்குரிய காலம் வந்தது என்பதை அவன் உடம்பில் உண்டாகும் நரை திரை முதலியன அவனுக்கு உணர்த்துகின்றன. உணர்த்தினும் உலக நுகர்ச்சியைப் பெறுதற்குரிய காலம் கழிந்துவிடுகிறதே என்று மேலும் உலக நுகர்ச்சியைப் பெறுதற் பொருட்டு உலக நோக்கு உடையனாய் நின்று, பரத்தை நோக்காமல் இருந்து விடு கின்றான். இங்ஙனம் தக்கவர் கூட்டத்தை விரும்பாத தனிய னுக்குத் திருவருளைப் பெறும் பொழுது எப்பொழுதும் வருவ தில்லை.

***அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது***
***பொன்றுங்கால் பொன்றாத் துணை.***

என்னும் திருக்குறளோடு ஒத்த கருத்துள்ளது இம்மந்திரம். (286)

**தோணியொன் றுண்டு துறையில் விடுவது**
**வாணி மிதித்துநின் றைவர்கோ லூன்றலும்**
**வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை**
**ஆணி கலங்கில் அதுவது வாமே. 2934**

பொ—ரை: பிறவியாகிய ஆற்றின் நடுவில் நின்று வாணிபஞ் செய்வார்க்கு உதவியாக, சிவானந்த வெள்ளம் பெருக்கெடுத்து நிலைத்துள்ள பெருந்துறைக்கண் கொண்டு உய்ப்பதாகிய ஒரு சிறந்த தோணி உளது. அத்தோணியைப் பின் சொல்லும் அடையாளங்களாற் கண்டுகொள்; வாணிபஞ் செய்பவராகிய உயிர், கலைஞானத்தை மிதித்து மேல் நிற்போ ராகிய ஐவர்கள் தம்முடைய ஆற்றல்களை ஊன்றும்போது அவ்வழியடை நிற்பது புலப்படும். ஆற்றினது இடையாகிய அவ்விடத்துக் கடலிற்கொண்டு உய்ப்பதாகிய செலவிற்கு ஆணியாக உள்ளதொன்று, தன் நிலை தளருமாயின், அத்தோணி இதுவாகும். அப்பரம் பொருள் இச்சீவனார் ஆவர். இதனால் அறிந்து சொல்.

வி—கு: ஐவர் என்றது மலமும், அம்மலத்தை நடத்தும் ஆதி சத்தியும், ஆன்மாவும் பேரின்ப முதற் பொருளும் திரு வருளும் என்க. இவர் வாணியை மிதித்தலாவது, கலை ஞானங் களின் பயனாகத் தெளிந்து மேல் நிற்றல். எனவே அத்தோணி திருவைந்தெழுத்து என்பதாயிற்று. அதன்கண் ஐவர் கோலூன்றி நிற்றலும், வாணிபஞ் செய்யும் வழியிடை நிற்றலும் கண்டு கொள்க. அவ்வைந்தெழுத்தில் நம என்பது பிறப்பு நெறிக்கண் செலுத்துவது. சிவ என்பது முத்திநெறிக்கண் செலுத்துவது. ஐவருள் இருவர் பிறவி நெறியை நோக்கியும், மற்றும் இருவர் வீட்டு நெறிநோக்கியும் வாணிபஞ் செய்வர். இவ்விரண்டில் எது வலிதோ அந்நெறியைப் பின்பற்றல் உடையது உயிரென்பது கண்டுகொள்க. ஆற்றினிடையே ஆணி கலங்குதலாவது பிறவித்

திசை உய்க்கும் மலமும் ஆதி சத்தியும் தம் நிலை உயிர்க்கு ஆதாரமாதலின்றிக் கழிவது. அந்நிலையில் நிற்பவை சிவாய என்னும் மூன்று எழுத்துக்களே ஆம். அப்பெரும் பெயரே பெருந் துறையில் விடுவதாகிய தோணியாகும். அதன் பொருள் அது இது ஆம் என்பது. சிகாரத்தாற் குறிக்கப்படுவது அது. யகாரத்தாற் குறிகப்பெறுவது இது. அது இது ஆதற்குத் துணை செய்து நிற்பது வா. உபநிடதங்களில் அவற்றின் சாரமெனப்படும் மகா வாக்கியங்களும் மகா வாக்கியப் பொருளும் இங்கு எடுத்துக் காட்டிய சித்தாந்த மகா வாக்கியப் பொருளே ஆகும். பிறவி முகப்படும்போது உயிர்க்கு உடலாக அமைவன ந. ம. உயிர் மகாரத்தில் அழுந்தி ஒன்றும் அறியா நிலையே புலம்பு எனப் படும் கேவல நிலை. மறப்பு, உறக்கம், இறப்பு என்னும் மூன்று நிலையினும் உயிர்க்குச் சார்பாயுள்ளது மகாரமே ஆகும். உயிர் நகாரத்தில் அழுந்தி நிற்கும் நிலை சகலம் எனப்படும்.

நகாரம் ஆதி சத்தியையும், அதன் வழிப்பட்டு நிற்கும் மாயை கன்மங்களையும் குறிக்கும். நினைப்பு, விழிப்பு, பிறப்பு, எனும் மூன்று நிலைகளிலும் உயிர்க்குச் சார்பாய் உள்ளது. ந ம என்பதே ஆம் நகாரத்தில் அழுந்தும் போதும் மகாரம் நீங்கி விடுவதில்லை. இவ்விரண்டையும் கடக்கும் நிலையே ஆணி கலங்கும் நிலை. அந்நிலையில் நகாரம் வகாரமாயே நிற்கும் எனவும், மகாரம் சிகாரத்தின் முன்பு நிற்கலாற்றாது மறையும் எனவும் கூறுவர். வாணி – தண்ணீர்; கலைஞானம். இந்த மந்திரம் அடுத்து வரும் மோன சமாதி (பேசா அனுபூதி) என்னும் அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்வதூஉம் ஆயிற்று. (287)

## 18. மோனசமாதி

இவ்வதிகாரம் பிறிதொன்றைச் சிறிதும் பற்றுமாறின்றி முதற்பொருளை உணர்ந்து இன்புறு நிலையாகிய பேசா அனுபூதி

நிலையை உணர்த்துதலின் இப்பெயர்த்தாயிற்று. மோனம் – மெய்யுணர்வின் பயனாகிய வாய் வாளாமை; அஃதாவது, ஆன்மா தான் முன் பயின்று வந்த பாச பசு அறிவுகளை விடுதல். சமாதி – மெய்ப்பொருளைச் சிவஞானத்தான் உணர்ந்து, அதில் தானும் தன் உணர்வும் ஒன்றி அடங்குதல். யோக சமாதியின் நீக்குதற் பொருட்டு மோன சமாதி எனப்பட்டது சமாதியின் இயல்பை,

**ஆங்கனங் குறித்த ஆய்முதற் பொருளோடு**
**தான்பிறன் ஆகாத் தகையது சமாதி**

எனத் தொல்காப்பிய உரையில் நச்சினார்க்கினியர் காட்டிய உரைச் சூத்திரத்தான் உணர்க.

**நின்றார் இருந்தார் கிடந்தார் எனவில்லை**
**சென்றார் தருஞ்சித்த மோன சமாதியாம்**
**மன்றேயு மங்கே மறைப்பொரு ளொன்றுண்டு**
**சென்றாங் கணைந்தவர் சேர்கின்ற வாறே. 2935**

க–து: இம்மந்திரம் மோனசமாதியின் இயல்பு கூறுகின்றது.

பொ–ரை: தமது அறிவு கழலப் பெற்றுப் பொருந்துவ தாகிய அனுபூதி எனப்படும் திருச்சிற்றம்பலத்தில் என்றும் நீங்காது உள்ள மறைகளால் நுவலப்படும் மெய்ப் பொருள் ஒன்று உண்டு. முன் செய்யக் கடவ சாதன நெறிகளில் சென்று அங்கு அணைநதவர்கள் சேர்ந்த முறையைக் கூறுமிடத்துச் சென்றார் எனவும், இருந்தார் எனவும், கிடந்தார் எனவும் கூறுதற்கு இல்லை.

வி—கு: தம் சித்தம் சென்று ஆர்தரும் மோன சமாதியாம் மன்று ஏயும் மறைப் பொருள் ஒன்றுண்டு; ஆங்குச் சென்று அணைந்தவர் சேர்கின்ற ஆறு சென்றார் இருந்தார் கிடந்தார் என இல்லை எனக் கொண்டு கூட்டி உரைக்க. இதனால் மோன சமாதிக்கண் மெய்ப்பொருள் ஒன்றுமே உளதாவது என்பதும், அப்பொருளைத் தலைப்பட்டவர் தாமும் தம் உணர்வும் அதில் அடங்கப் பெறுதலின்அவர்க்குப் புறத்தேயுள்ள ஓரிடத்தை நடந்து சென்று எய்துவது போல வைத்துக் கூறுவது பொருந்தாது என்பதும் உணர்த்தப்பட்டன. முதல் அடிக்கு மோன சமாதியை அணைந்தவர்கள் செல்லுதல் இருத்தல், கிடத்தல் முதலிய எத்தொழிலைச் செய்தாலும் பரமே பார்த்திருப்பர், பதார்த்தங்கள் பாரார் என்னும் கருத்துப்பட உரைத்தலும் உண்டு. அதற்குக் காலந் தாழ்த்தார் என்பதுபட உரைப்பாரும் உளர். சென்றவர் முன் இருந்தார். பின் உயிர் நீங்கிக் கிடந்தார் என்னும் வழக்கு மோன சமாதி எய்தினார்க்கு இன்று எனினும் அமையும். (288)

**காட்டுங் குறியுங் கடந்தவர் காரணம்**
**ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்**
**கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது**
**ஆட்டின் கழுத்தில் அதர்கிடந் தற்றே. 2936**

க—து: இஃது ஒண்குரவன் அருளின்றி மெய்ந்நூல் ஆய்வு பயன் தருவதன்று என்பது உணர்த்துகின்றது.

பொ—ரை: எடுத்துக்காட்டும் ஏதுவும் கடந்து நிற்கும் முதல்வனை, ஒருவனது அறிவின்கண் விளங்க வைக்கும், கேள்வியோடு அநுபவமுடைய அருளாசான் அருள் துணையாக உணர்வதன்றி, ஏட்டில் எழுதியுள்ளவற்றையே கற்று உணர்வது இயலாததொன்று; நூலாற் சிவப்பேறு அடையக் கருதுதல் ஆட்டின் கழுத்தில் தூங்கும் தசைத் திரளைப் பற்றிப் பால் கறத்தலை ஒக்கும்.

வி–கு: காரணம் – உண்மைக்குக் கூறப்படும் காரணங்கள். முதற்பொருள் உண்டு என்பதற்கும் உரிய காரணங்களை ஏட்டில் மட்டும் எழுதி வைப்பது பயன் தராது; உள்ளத்திலும், எழுதி, அக்கொள்கைக்குத் தக ஒழுகுதலும், அப் பொருளைத் தலைப்பட்டின்புறச் சிறப்பு முயற்சி செய்தலும் வேண்டப்படும் என்பது கருத்து. (289)

**உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்**
**உணர்வுடை யார்கட் குறுதுயர் இல்லை**
**உணர்வுடை யார்கள் உணர்ந்தஅக் காலம்**
**உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே. 2937**

க–து: இது கடவுள் உணர்வுடையார்க்கு வரும் உயர் பயன் உணர்த்துகின்றது.

பொ–ரை: கடவுள் உண்டு என்னும் உணர்வு உடையவர்க்கு நில்லா உலகின் இயல்பும் உடன் அவர் உணர்வில் உதிக்கும்; அதனால், உலகப் பற்றினால் பிறர்க்கு வரும் துன்பங்கள் அவர்க்கு உளவாகா. அவ்வுணர்வு தோன்றிய காலத்திலே அவர் உள்நோக்கிக் கண்டு முதற்பொருளைத் தலைப்படுவர்.

வி–கு: இது சொற்பொருட்பின் வருநிலை அணி. நான்காம் அடிக்கண் உணர்வுடையாராய் உணர்ந்து கண்டார் என முற்றெச்சமாக்கி உரைக்க, கண்டார் என்னும் இறந்த காலம் விரைவுப் பொருள் பற்றி வந்தது. (290)

**மறப்பது வாய்நின்ற மாயநன் னாடன்**
**பிறப்பினை நீங்கிய பேரரு ளாளன்**
**சிறப்புடை யான்திரு மங்கையுந் தானும்**
**உறக்கமில் போகத் துறங்கிடுந் தானே. 2938**

க—து: பிறப்பு நிலைக்கண் மறைப்பையும் நினைப்பையும் மாறி மாறி வரச் செய்த முதல்வனே வீட்டு நிலைக்கண் பேரின்ப நுகர்சிப் பேரா இயற்கையினைத் தருவன் என்பது உணர்த்தப்படுகிறது.

பொ—ரை: முதல்வன், மாயையின் ஆக்கம் அனைத்திற்கும் தலைவனாய் உயிர்களுக்குச் சகல நிலையை வருவிப்பவனும், அவை இளைப்பாறி அறிவு வளர்ச்சி பெறுவதற்கு மறப்பு எனப்படும் கேவல நிலையைத் தருபவனும் ஆவன். இங்ஙனம் உயிர்களைப் பிறப்பு இறப்புக்களில் உய்ப்பவனாகியும் தான் பிறப்பும் இறப்பும் உபசாரமாகவும் எய்தாதவன்; உயிர்கள் மாட்டுப்பேரிரக்கம் கொண்டவன். யாவரினும் சிறந்து நிற்பவன். இவன் முத்தித் திருவை உயிர்களுக்கு வழங்கும் இன்ப சத்தியும் தானுமாக அறியாமைப் பிணிப்பின் நீங்கிப் பெறும் சிவபோக அனுபவத்தில் உயிர் அழுந்தி நிற்கும்படி ஐந்தொழிற் செயலை நீத்து இன்புறு நிலையினனாக இருப்பன்.

வி—கு: மாயநன்னாடன் என்றது மாயைக்குத் தலைவன் என்றபடி. 'மாயையை (உலகிற்கு) முதற் காரணம் எனவும், மாயையை உடையவனை (மாயிநம்) மகேசன் எனவும் அறிக. அவன்றன் அவயவப் பிழம்புகளால் இவ்வனைத்தும் நிரம்பி உள்ளன' என்பது சுவேதாசுவதரம் 4,10 ன் மொழிபெயர்ப்பு. அநாதி கேவலத்தில் அழுந்தி நின்ற உயிர்களைப் பிறப்பு நெறிக்குக் கொணர்ந்து, பின் சுத்த நிலைக்கண் உய்த்து இன்புறத்துவோன் முதல்வன் ஒருவனே என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

இனி, மாய நன்னாடன் என்றது மாயா தனுவையுடைய உயிரை எனவும், அவனுக்கு மறப்பதே தொழிலாகிவிட்டதெனவும் முதலடிக்குப் பொருள் உரைப்பாரும் உளர். (291)

**துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி**
**அரிய துரிய மதில்மீது மூன்றாய்**
**விரிவு குவிவு விழுங்கி உமிழ்ந்தே**
**உரையில் அநுபூ திகத்தினுள் ளானே.** 2939

க–து: இது வீட்டு நிலைக்கண் முதற்பொருள் நுகரப்படு பொருளாய் நிற்றலை உணர்த்துகின்றது.

பொ–ரை: உயிர்களுக்கு உள்ளனவாகிய கேவலம், (மா) சகலம், சுத்தம் என்னும் மூன்று அடிப்படை உணர்வு நிலைகளிலும் கூறப்படும துரியம் என்னும் நான்காம் நிலையைக் கடந்து, விளங்கும் பேரறிவுப் பிழம்பாகிய முதல்வன், இவற்றுள் சுத்தத்திற் கூறப்படும் கூடுதற்கு அரிய அருள் நிலை என்னும் துரிய நிலைக்கண் தத்துவங்களைக் கடந்து நின்ற காண்பான் காட்சி, காணப்படு பொருள் என்னும் மூன்றாய்ப் பகுத்துணர்ந்து விரிதலும், உணராது அடக்குதலும் என்னும் இரு நிலைகளையும் தன்கண் அடக்கியும், உலகத்தார்க்கு உறுதி பயத்தற் பொருட்டு வெளிப்படச் செய்தும் பேசா அனுபூதிக்கண் உளன்.

வி–கு: அரிய துரியம் – நின்மல துரியம் எனப்படும் அருணிலை. அதில் மூன்றாவன. காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்பவை.

துரியங்கள் மூன்று என்பதனைச் தன் செயலறல், அருட் செயலறல், சிவச்செயலறல் என்பாரும் உளர். அவர்க்கு அவை முறையே பாச பசு ஞான நீக்கம். ஆதி சத்தியின் செயலறல், பஞ்ச கிருத்தியத்துட்படுத்தாமை என உரைத்தலன்றி வேறு பொருள் படாமை உணர்ந்து கொள்க. வீட்டு நிலையில் ஆன்மாச் சிவானந்தத்தை விடயித்தலும், முதல்வன் தன் ஆனந்தத்தைக் காட்டிக் கண்டு கொடுத்தலும் உளவென்பது சித்தாந்த மரபு. (292)

**உருவிலி ஊனிலி ஊனமொன் றில்லி**
**திருவிலி தீதிலி தேவர்க்குந் தேவன்**
**பொருவிலி பூதப் படையுடை யாளி**
**மருவிலி வந்தென் மனம்புகுந் தானே.** 2940

க–து: இது முதல்வனது பொதுவியல்பு உணர்த்து கின்றது.

பொ–ரை: முதல்வன் தனக்கென உருவில்லாதவன்; அன்பர் நினைந்த உருவைக் கொள்ளும்போதும் அஃது அருள் உருவாவதன்றி இருவினை நுகர்விற்கு உரிய மாயை காரிய மன்றாதலின் உடம்பை உடையன் அல்லன்; குறைவிலா நிறைவாகலின், குறைவு சிறிதும் இல்லான்; தான் விழைந்து பெறும் திருவொன்றும் இல்லாதன் (எல்லாத் திருவும் இயல்பாக உடையயன்); தீமை இல்லாதவன்; தனக்கு ஒப்பதோர் பொருள் இல்லாதவன்; தேவதேவன்; பூதங்களைப் படையாக உடைய னாய் அவற்றை ஆள்வோன்; எங்குஞ் செறிந்தும், எதனையும் சார்ந்து நிற்பான் அல்லன். இத்தகைய முதல்வன் என் அன்பே உருவாய் என்னுட் புகுந்து நின்றான்.

வி–கு: ஊன் – உடம்பு, ஆகு பெயர். ஊனம் – குறைவு. பொருவு – ஒப்பு; பூதம் தோன்றியுள்ளவை உயிர்கள், படை – மலசத்தியைக் கெடுக்குங் கருவி. மருவு – மருவுதல், பற்றாகச் சார்தல்; முதனிலைத் தொழிற்பெயர். சேர்ந்தறியாக் கையானை என்னுந் திருவாசகம் இப்பொருளே உடையது; **என்னை?** எங்குஞ் செறிந்தானை என்பதனோடு முரண்பட வைக்கப் பெறுதலின், கை–இயல்பு.

உளம் புகுந்தான் என முடித்தலின், இவ்வியல்புகள் பட் டாங்கு உணர்ந்து வெளிப்படுத்தப்பட்டவை என உணர்க. (293)

**கண்டறி யாரிந்தக் காயத்தில் நந்தியை**
**எண்டிசை யோரும் இறைவனென் றேத்துவர்**
**அண்டங் கடந்த அளவிலா ஆனந்தத்**
**தொண்டர் முகந்த துறையறி யோமே.** 2941

க—து: உலகங் கடந்த முதல்வனைத் தலைப்பட்டு உணரும் இடம் ஒருவனது உணர்வே என்பது உணர்த்துகின்றது இது.

பொ—ரை: எத்திசையினும் உள்ளார் அனைவரும் இறைவன் ஒருவன் உளன் என்பதை உணர்ந்து புறத்தே தாம் அறிந்த வகையான் அவனைத் துதிப்பர் ஆயினும் அவன் அறிவுப் பேரின்ப உருவன் என்பதையும் அவனைக் காணும் இடம் உடம்பே என்பதையும் நன்கு உணரார். ஒருவனது உணர்வே, உலகங் கடந்த பேரின்ப வெள்ளமாகிய முதற் பொருளைத் தொண்டர் தம் அருட்கண்ணால் முகந்து நுகரும் துறையாகும்.

வி—கு: தொண்டர் முகந்த ஆனந்தத் துறை எனக்கூட்டுக. அண்டங் கடந்த என்பது ஆனந்தத்திற்கு அடை. துறை என்னும் குறிப்பினால் ஆனந்தத்தைக் கடல் எனக் கொள்க.

***மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந் துள்ளுருகத்***
***தெருவுதொறு மிகஅலறிச் சிவபெருமா னென்றேத்திப்***
***பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமாறு***
***அருளெனக்கிங் கிடைமருதே இடங்கொண்ட அம்மானே.***

என்னுந் திருவாசகம், முதல்வன் திருவடியை மனத்திற் கொள்ளு மாறும், உள் உருகுமாறும், அருளானந்தத்தைத் தலைப்பட்டுப் பருகுமாறும் உணர்த்துகிறது. பருகுவதனோடு அமையாது

ஆனந்தக் கடலிற்படிதலையும் (ஞான ஞேய ஞாதிருப் பகுப்பு அற்றுத் தன்னை இழத்தலை) வேண்டுகின்றார் மணிவாசகர். இங்ஙனம் ஆனந்த வெள்ளத்தைத் தலைப்படுவார்க்கு 'உடலே குகை, உணர்வே பீடம், இதயத்தே சமாதி, நடமாடிய அறிவுக் குகை நாடப் படுவது' என்னும் கருத்தமைந்த திருமந்திரம் ஒன்று உரை நூல்களுள் காட்டப்படுகின்றது. (திருமந்.3049) (294)

**தற்பரம் அல்ல சதாசிவன் றானல்லன்**
**நிட்கள மல்ல சகள நிலையல்ல**
**அற்புத மாகி அநுபோகக் காமம்போல்**
**கற்பனை யின்றிக் கலந்துநின் றானே.** 2942

க–து: தலைப்பட்டு உணர்வார்க்கு முதல்வன் தம்மோடு கலந்து உடனின்ற மிகுநுண்பொருளாய் அனுபவப்படுவன் என்பது உணர்த்துகின்றது இது.

பொ–ரை: மெய்யுணர்வு எய்தாத பிறப்பு நிலையில் உயிர்களுக்கு முதல்வன் மாயையைக் கடந்தோனாய், அருவுருவாய், அருவாய், உருவாய் வேதாகமங்களால் கற்பித்து உணர்த்தப்படுவன்; அப்பொதுவியல்பு பற்றி வழிபட்டு, அவாவறுத்து மெய்யுணர்ந்தார்க்கு அவன், உலகப் பொருள்கள் ஒன்றோடும் ஒப்பித்து உணரப்படாத வியத்தகு பேரின்பப் பொருளாய், கற்பித்து உணரப்படுவான் அல்லனாய், தம்மோடு இயல்பாகவே உள்கலந்து உணர்த்தி வந்த பேரறிவுச் செம்பொருளாய் நுகரப் படுவன்.

வி–கு: தற்பரம் – அதற்கு மேம்பட்டது; தத் – அது, காணப்படும் பொருள்களும் அவற்றின் முதற்காரணமாகிய மாயையும்; மாயாதீதன் என்றபடி. மாயையைச் செயற்படுத்து வோன், அவன் உதவியைத் தனக்கு வேண்டாதவன் என்பது

கருத்து. மலத்தால் மறைப்புண்டுள்ள உயிர்களுக்கே மாயையும் அதன் காரியங்களும் வேண்டப்படுவன; செம்பு உருவத்திற்கு அன்றிப் பொன் உருவத்திற்குப் புளிக்காப்பு வேண்டப்படாதது போல.

சதாசிவன், நிட்களம், சகளம் என்பவை முறையே அருவுரு, அரு, உரு என்னும் பொருளன. அற்புதம் – முன் பயின்று அறியாமையின் உருவெளியோ என வியக்கவைத்தல். காம நுகர்ச்சி நூல்களிற் பயின்றபோது கற்பனையாகவும், ஒருவன் ஒருத்தி இன்பப் புணர்ச்சிகண் உரைக்க வொண்ணாத உண்மை யன்பாய் விளைவதாகவும் நிகழ்தல் போல, சிவப்பேறும் சரியை, கிரியை யோக நிலைகளில் கற்பனையாகவும், மோன நிலைக்கண் அளவிலா இன்ப அன்பாயும் விளையுமென்பது ஈற்றுத் தொடரின் கருத்து. (295)

**முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்**
**அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்**
**மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய**
**சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்கனே.**
**2943**

க–து: வீட்டின்பம் நுகர்ந்து உணர்தற்குரியது என்பது இதனால் உணர்த்தப்படுகின்றது.

பொ–ரை: அகநோக்கிற் கருத்தின்றி முகத்திற் கண் கொண்டு புற உலகினையே நோக்கும் மூட மக்களே, அகக்கண் எனப்படும் திருவருட்கண் பெற்று முதற் பொருளைக் கண்டு தலைப்படுதல் பற்றி உளதாவதே சிவானந்தவின்பம்; அதனை எமக்கு மேலும் விளக்கிக் கூறவேண்டும் என்பிராயின், ஒரு மங்கை தன் மணவாளனோடு தனித்துக் கூடிப் பெற்ற இன்பத்தின்

இயல்பைத் தன் மகள் அறியும்படி எவ்வாறு கூற முடியும்? கூற முடியாதன்றே! அத்தகையதே தத்துவங் கடந்த தனிப் பொருளைப் பாசத்தின் நீங்கிய சுத்த நிலையில் தலைப்பட்டு ஒன்றி அழுந்தி நின்று நுகரப்படும் பேரின்பமும் ஆம்.

வி–கு: முகத்திற் கண் – ஏனைப் பொறி முதலியவற்றையும் உபலக்கணத்தாற் குறிக்கும். (296)

**அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டுச்**
**செப்பு பராபரம் சேர்பரமும் விட்டுக்**
**கப்புறு சொற்பத மாளக் கலந்தமை**
**எப்படி அப்படி என்னுமவ் வாறே. 2944**

க–து: மோன நுகர்வின் இயல்பை ஓர் உவமையின் வைத்து உணர்த்துதலைக் கருதிற்று இம் மந்திரம்.

பொ–ரை: காதலர் கருத்தொருங்கி நுகரும் இன்பம் எப்படி அப்படி உள்ளது எனப்பட்ட அச்சிவானந்த நுகர்வாகிய பயனாவது இன்னது எனக் கூறலாம்; தண்ணீரில் கலந்த உப்புத் தன் வரம்புபட்ட கடினத்தன்மை நீங்க நீர் முழுவதும் நிறைந்து தன் தன்மை தோன்றாது அடங்கி நிற்கும்; அதுபோல, யான் எனது என்னும் செருக்கால் தான் சார்ந்த கண்டப் பொருளின் அளவாய்ச் சிறுமை எய்தி நின்ற உயிர், முதல்வனை அணைந்து ஒன்றும் போது குறைவிலா நிறைவேயாய் முதல்வன் நிறைவில் அடங்கி நிற்கும்; அந்நிலையில் பராபரமாகிய முதற்பொருள் என, அதனைச் சேர்ந்து ஒன்றி உடனாகிய பரம் எனப்படும் ஆன்மா என, பகுத்துணர்தலைவிட்டு, கவர்தலுக்குக் காரணமாகிய யான் அவன் என்னும் வழக்கைக் கடந்து கலந்து நிற்றலே அது.

வி–கு: கலந்தமை அவ்வாறு ஆகும் என முடிக்க. அப்பு – நீர். கப்பு – கவர்த்தல், பிரிவுபடுதல். 'நசித்து மலம் –

அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாம் கப்பின்றாம் ஈசன் கழல்' என்னும் சிவஞானபோத உதாரண வெண்பா இம்மந்தி ரத்தை அடியொற்றி எழுந்துள்ளமை காண்க.

இப்பகுதிக்கு மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்துள்ள உரைக்குறிப்புக்கள் பின்வருவன: 'ஏகதேச அறிவைச் செய்யும் ஆணவம் கன்மம் மாயை என்னும் மலங்கள் மாத்தி ரையே கெட்டொழிய, ஆன்மா தண்ணீரைச் சேர்ந்த உப்புப் போல முதல்வன் திருவடியைத் தலைப்பட்டு முதல்வனுக்குச் சேடமாம்; முதல்வன் திருவடி அவ்வான்மாவை விட்டுக் கவர்த்தல் இன்றி இயைந்து நிற்கும் ஆகலான்.

'தன் கண்ணதாகிய கடின குணம் நீங்கி அப்பினைச் சேர்ந்தொன்றாகிய உப்பு, ஆன்மா மலம் நசித்து முதல்வனைச் சேர்த்து ஒன்றுபடுதல் மாத்திரைக்கு உவமை ஆயிற்று'

'யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக் கெனச் சுதந்திரமின்றி நிற்கும், அஃதுஅதற்குச் சேடம் எனப்படு மாகலின், அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யானாய்க் கப்பின்றி இயைந்து நிற்கும் ஈசன் கழலையே அறிந்து இச்சித்து அனுபவித்தலாகிய முதல்வனது வழிபாட்டின் பொருட்டு உரிமை எய்திய ஆன்மா முதல்வனுக்குச் சேடம் ஆகியவாறு அறிக.

சொற்பதம் – சொல்லும் நிலை, வழங்கும் நிலை; அஃதாவது, காண்பான் காட்சி காணப்படுபொருள் என்னும் பகுப்புத் தோன்றுதல். இது மாளும்படி கலத்தலே பரமுத்தி எனப்பட்டது. (297)

**கண்டார்க் கழகிதாங் காஞ்சிரத் தின்பழம்**
**தின்றார்க் கறியலாம் அப்பழத் தின்சுவை**
**பெண்டா னிரம்பி மடவிய ளானால்**
**கொண்டான் அறிவன் குணம்பல தானே.** 2945

க–து: பொருள்களைத் தோற்ற அளவால் மதித்து அறிதல் அரிது என உணர்த்துகின்றது இம்மந்திரம்.

பொ–ரை: எட்டிக்கனி அழகிய தோற்றம் உடையது; அதனைத் தின்பாரே அதன் சுவையினையும் அதனால் விளையும் பயனையும் உணர்வர். ஒருத்தி பெண்மை நிரம்பி மடப்பம் உடையவளாய்க் காணப்படினும் அவளுடைய பலவகைக் குணங்களை, அவளால் வரும் இன்பம், துன்பம், இழப்பு, பேறு முதலியவற்றை, அவளை வாழ்க்கைத் துணையாகக் கொண்டவனே அறிவன், பிறர் அறியார். அதுபோல, உலகப் பொருள் கவர்ச்சியுடையனவாயினும், பிறப்பின் உய்த்துத் துன்புறுத்தும்; திருவேடத்தால் உயர்ந்தார்போல் ஒருவர் காணப்படினும், அவரோடு பழகினாரே அவர்தம் உண்மை இயல்புகளை அறிய வல்லுநர் ஆவர்.

வி–கு: இது பிறிது மொழிதல் என்னும் அணி. மெய் யுணர்வு நல்கும் சற்குரவனைத் தெரிந்து தெளிந்து ஆட்படுக என்பது கருத்து. இது நூல்களுக்கும் பொருந்தும்; பொழுது போக்கிற்கு உதவும் நூல் உறுதி பயவாது; உறுதி பயக்கும் நூல் விரும்பியபடி தோற்றந்தராமல் இருத்தல் கூடும். (298)

**நந்தி இருந்தான் நடுவுத் தெருவிலே**
**சந்தி சமாதிகள் தாமே ஒழிந்தன**
**உந்தியி னுள்ளே உதித்தெழுஞ் சோதியை**
**புந்தியி னாலே புணர்ந்துகொண் டேனே.** 2946

க–து: இது முதல்வனைத் தலைப்படுதற்கு யோக நெறி இன்றியமையாச் சிறப்பிற்று என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: மேன்மேலும் வளர்ந்து விளங்கும் முதல்வன் சுழுமுனை நெறி என்னும் தெருவில் எனது உள்ளத்தில் ஒளிந்

திருந்தான்; உயிர்ப்பை ஒடுக்கி மூலக்கனலை எழுப்பும் முறைமைக்கண் அங்கி மண்டலமாகிய உந்தியில் அங்கியாகி எழும் பேரொளியை என் அறிவினால் கலந்து கொண்டேன்; பின் சந்தி, சமாதி என்னும் நியமமான பயிற்சிகள் உறங்குவோன் கைப் பொருள் போலத் தாமே நெகிழ்ந்துவிட்டன.

வி–கு: பிராசாதம், பஞ்சதசி, சோடசி போன்றவற்றைக் குருமுகத்தாற் கேட்டுணர்ந்து உயிர்ப்படக்கு முறையில் பயின்று வருவோருக்குக் குண்டலினி விளங்கும்; பின் அதுவே முதல் வனைக் காட்டித் தலைப்படச் செய்யும் என்பது கருத்து. சோதி – அங்கி, ஞாயிறு, திங்கள் என்பவற்றின் ஒளி.

**உயிரா வணமிருந் துற்றுநோக்கி**
**உள்ளக் கிழியின் உருவெழுதி**
**உயிர் ஆவணஞ்செய் துன்கைந்தந்தால்**
**உணரப் படுவாரோ டொட்டிவாழ்தி**

என்னும் அப்பர தேவாரம் சிந்தித்தற்குரியது. (299)

**விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து**
**பதறு படாதே பழமறை பார்த்துக்**
**கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை**
**உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே.** 2947

க–து: இது குண்டலி யோகத்தானன்றி மந்திர யோகத் தானும் முதல்வனைத் தலைப்படுதல் கூடும் என்பது உணர்த்து கின்றது.

பொ–ரை: மனச் சோர்பு படாமல் தனித்திருந்து என் உணர்வின்கண் ஆராய்ந்து, அமைதியுடன் பழைய மறையாகிய

திருவைந்தெழுத்தைத் துணையாகக் கொண்டு முதற் பொருளை நோக்கி, அதனால் ஆரவார மாத்திரையாய் பயன்படாமையை உடைய மாயை காரியங்களாகிய பாழைக் கடந்து, அதன் கற்பனைகளைக் கடந்து நின்ற, இன்னதென்று அறிய வாரா திருந்த முதற் பொருளில் ஒடுங்கி இன்புறுகின்றேன்.

வி–கு: வேறு இருத்தல் – தனித்திருத்தல். ஆய்தல் – நுணுகித் தன்னுணர்வையே நோக்குதல். பழ மறையாற் பார்த்து என்க; பழமறை உணர்வை நெறிப்படுத்தும் ஞாபகமாதல் காண்க; ஞாதிரு, ஆன்மாவும், ஞேயம் பராபரமும், ஞானம் திருவருளோடு ஒன்றிய உணர்வும் ஆம்.

*வைத்த பொருள்நமக் காமென்று*
*சொல்லி மனத்தடைத்துச்*
*சித்தம் ஒருக்கிச் சிவாய*
*நமவென் றிருக்கினல்லால்*
*மொய்த்த கதிர்மதி போல்வா*
*ரவர்பா திரிப்புலியூர்*
*அத்தன் அருள்பெற லாமே*
*அறிவிலாப் பேதைநெஞ்சே.*

என்னும் திருநாவுக்கரசர் தேவாரமும் உணர்க. (300)

**வாடா மலர்புனை சேவடி வானவர்**
**கூடார் அரனெறி நாடொறு மின்புறச்**
**சேடார் கமலச் செழுஞ்சுட ருட்சென்று**
**நாடார் அமுதுற நாடார் அமுதமே.** 2948

க–து: மேலைய இருநெறியினும் நில்லாதார் வேறு செய்தற்கு உரியவை இவை என்பது உணர்த்துகின்றது.

பொ—ரை: தேவர்கள் வாடாத மலர்களால் அணி செய்யும் திருவடியைக் கூடார் அரனை அணையும் நெறியைக் கூடாதவரே ஆவர். நாள்தோறும் அழகு அமைந்த உள்ளக் கமலத்தில் ஓங்கி நிற்கும் சுடரை உட்சென்று இனிமையுற நாடாதவர் அமுதம் எனப்படும் சிவனை நாடாதவரே ஆவர்.

வி—கு: கூடார் என்பது பின்னருஞ் சென்று இயையும், அரன்நெறி நிற்றலாவது சேவடியை மலர் புனைந்து கூடுதலாம் என்பதும், அகவழிபாடு இறவாமையைப் பயக்கும் என்பதும் கருத்து. அறநெறி எனப்பாடங்கொள்வாரும் உளர்.

(301)

**அதுக்கென் றிருவர் அமர்ந்தசொற் கேட்டும்**
**பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோல்**
**சதுக்கென்று வேறே சமைந்தாரைக் காண**
**மதுக்கொன்றைத் தாரான் வளந்தரு மன்றே.** 2949

க—து: அடியார் திருக்கூட்டம் உத்தம சத்திநிபாதர்க்குச் சிவானந்த அன்பைத் தோற்றுவிக்கும் என்பது இதனால் உணர்த்தப்படுகின்றது.

பொ—ரை: காதற் கிழமைக்கு என ஒத்த பண்பினராய இருவர், ஒருவர் ஒருவரை விரும்புஞ் செய்தியை அறிவுறுத்தும் சொற்களைக் கேட்டபோதும், அக்கேள்வியுடையார்க்குத் தம் உள்ளத்தில் அடங்கி நின்ற காம உணர்ச்சி சடக்கென வெளிப்படுமாறுபோல, நாற்சந்தியிற்போல இறைவனை வழிபடுதற் பொருட்டுச் சிறப்பாகக் குணம் குறி செயல்களால் அமைந்தாரைக் கண்டவுடன், தேன்பிலிற்றும் கொன்றையைத் தாராக அணிந்த சிவபிரானைக் கலந்து கூடிய இன்ப நலத்தை அக்காட்சி தந்துவிடும்.

வி-கு: அதுக்கு – அதற்கு; அது என்றது பண்டறி சுட்டாய்க் காதற் கிழமையை ஏற்புழிக் கோடலால் உணர்த்தி நின்றது. சதுக்கம் என்பது ஈறு கெட்டு நின்றது. சந்திகள் தெய்வம் விளங்கும்இடங்களாதலின், அஃது அருளைத் தலைப்படு மாற்றை உணர்த்திற்று. வேறே சமைதல் – சிவ வழிபாட்டிற்கு என்றே அமைதல். அங்ஙனம் அமைந்தாரைக் காணும் காட்சி சிவபிரான் மாட்டு உள்ள இறைவாத இன்ப அன்பைக் கிளர்ந் தெழச் செய்யும் என்பது கருத்து. மதுக்கொன்றைத் தாரான் என்னும் பெயர் அன்பரை ஆட்கொள்ளும் முதல்வனது செவ்வி தெரிவித்து நின்றது. வளம் – அவனைக் கூடிப் பெற்ற பேரின்ப நலம். (302)

**தானும் அழிந்து தனமும் அழிந்துநீடு**
**ஊனும் அழிந்து உயிரும் அழிந்துடன்**
**வானும் அழிந்து மனமும் அழிந்துபின்**
**நானும் அழிந்தமை நானறி யேனே.** 2950

க-து: இஃது இன்புறு நிலையைத் தலைப்படும் போது, உறங்குலுறுவார் தம்மை அறியாது தம் வயம் இழத்தல் போல, முதல்வன் வயத்தால் தன்வயம் முற்றும் இழந்து, தன்னை முதல்வன் விழுங்கக் கொடுத்து நிற்றலை உணர்த்து கின்றது.

பொ–ரை: முதல்வனோடு ஒன்றி இன்புற்றபோது, இவ் வுடம்பின் நினைவும், அதற்குச் சார்பாய் உள்ள பொருளும், அதனை நீடவைக்கும் சோறும் நீரும், உயிர்ப்பும், புறத்தே காணப் படும் வான் முதலிய பூதங்களும், அகத்தே கருவியாய் நின்று பல நினைவுகளையும் வெளிப்படக் காட்டும் மனமும், யான் என்ற உணர்வும் என் அறிவு செயல் என்பவை இன்றியே தாமே கழன்று நின்றன.

**வான்கெட்டு மாருத மாய்ந்தழல் நீர் மண்கெடினும்**
**தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்(கு)**
**ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டேன் உள்ளமும் போய்**
**நான்கெட் டவாபாடித் தெள்ளே ணங்கொட்டாமோ**

என்னுந் திருவாசகம் இவ்வநுபவ நிலையை நன்கினிது விளக்கு கின்றது

***யானாகிய என்னை விழுங்கி வெறுந்***
***தானாய் நிலைநின் றதுதற் பரமே***

என்னும் கந்தர் அனுபூதியும்

**தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்**
**தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே**

என்னும் அப்பர் அருண்மொழியும் உடன் வைத்து உணரத் தக்கவை. தான் – உடம்பு. தனம் – பொன், ஊன் – நுகர்ச்சிப் பொருள், உயிர் – உயிர்ப்பு, நான் – தன் உணர்வு. (303)

**இருளும் வெளியும் இரண்டையு மாற்றிப்**
**பொருளிற் பொருளாய்ப் பொருந்த வுள்ளாகி**
**அருளால் அழிந்திடும் அத்தன் அடிக்கே**
**உருளாத கன்மன முற்றுநின் றானே.** 2951

க–து: இஃது உள்ளம் உருகி முதல்வனோடு ஒன்றி நிற்கும் உ.பாயம் உணர்த்துகின்றது.

பொ–ரை: இறைவன் தன் அடியை நோக்கி வாராத (உருளாத) கல் போன்ற மனத்தினும் பொருந்தி நின்றான்;

ஆதலால், உறக்கம் புற விடயங்களிற் செல்லுதல் என்னும் இரண்டும் நிகழாதபடி மாற்றி முதற் பொருளில் அடங்கி நிற்கும் பொருளாய்ப் பொருந்துமாறு திருவைந்தெழுத்து நெறியால் அகமுகப்பட்டுத் திருவருள் மேலோங்க அதில் அறிவடங்கி நான் என்பது அழிந்திட நின்மின்.

வி–கு: அத்தன் கன்மனம் உற்று நின்றான்; ஆதலின், மாற்றி உள்ளாகி அருளால் அழிந்திடும் – என முடிக்க. இருள் – கருவிகள் செயற்படாத உறக்க நிலை; வெளி – அவை தொழிற்படும் நனவு நிலை. நனவு உள்ளபோது கருவிகளின் நீங்கித் திருவைந்தெழுத்தே பற்றுக்கோடாகக் கொண்டு உள்நோக்கி அருளைத் தலைப்பட்டு அதில் ஒன்றுக என்பது கருத்து. கன் மனம் உற்று நின்றான் என்றது இங்ஙனம் அகம் நோக்கி அழியின் அவன் வெளிப்படும் என்னும் நோக்குள்ளது. பொருளிற் பொருளாய் – நிறை பொருளில் அடங்கி நிற்கும் வியாப்பியப் பொருளாய். (304)

**ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் பராபரம்**
**ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் சிவகதி**
**ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் உணர்வினை**
**ஒன்றிநின் றேபல ஊழிகண் டேனே.** 2952

க–து: இஃது அறிவொன்றி அகத்தே நோக்குதலால் வரும் பயன் உணர்த்துகன்றது.

பொ–ரை: ஒன்றி நின்று என்னையே நோக்கிக் கண்டமையால் பராபரம் எனப்படும் முதற் பொருளையும் அதனால் விளையும் இன்பத்தைப் பெறும் நெறியாகிய சிவகதியின் இயல்பினையும், உணர்வுக்கு உணர்வாய் இருந்து தெளிவிக்கும் அறிவாகிய திருவருளினையும், இத் திருவருளைக் காணுதற்குப்

பல் ஊழி காலம் உயிர் பக்குவம் பெற நிற்பதையும் உணர்ந்து கொண்டேன்.

வி–கு: பல்லூழி காலம் பயின்றரனை அர்ச்சித்தால் – நல்லறவு சற்றே நகும் என்பது உணர்க. நகும் – விளங்கும். (305)

## 19. வரைவுரை மாட்சி

வரம்பற்றதும் உரையைக் கடந்ததுமாகிய முதற் பொருளைத் தலைப்பட்டாரது அறிவு வரையறையினையும் உரைக்கப்படுதலையும் கடந்து நிற்றல் கூறுதலின், இவ்வதிகாரம் வரைவுரை மாட்சி எனப் பெயர் எய்தியது. வரைவு – அளவு. உரை – உரைக்கப்படும் தன்மை. மாட்சி – அழிதல்; மாள் + சி = மாட்சி. இச்சொல் இப்பொருட்டாதலை.

***உரைமாண்ட உள்ளொளி உத்தமன்வந் துளம்புகலும்***
***கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே***
***இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோடத்***
***துரை மாண்டவா பாடித் தோணோக்கம் ஆடாமோ.***

என்னும் திருவாசகத்தானும் உணர்க. (துரை – மிகுதிப்பாடு)

**தான்வரை வற்றபின் ஆரை வரைவது**
**தான்அவன் ஆனபின் ஆரை நினைவது**
**காமனை வென்றகண் ஆரை உகப்பது**
**தூமொழி வாசகம் சொல்லுமின் நீரே.** 2953

க–து: பாச பசு ஞானங் கடந்து வியாபக உணர்வாகிய சிவஞானத்தால் பரம் பொருளைத் தலைப்பட்ட பின், அந்நிலை சலிப்பின் அஞ்செழுத்தை விதிப்படி எண்ணுவதல்லது வேறு

சரியை கிரியை யோக நெறிகளிற் கூறிய முறையால் இறைவனைத் தனக்கு வேறாக வரம்புபட்ட பொருளாக நினைத்தல் வேண்டா என்பது இதனால் உணர்த்தப்படுகின்றது.

பொ—ரை: குறைவிலா நிறைவாகிய முதற் பொருளைத் தன் வரம்புபட்ட பசுத்துவம் நீங்கித் தலைப்பட்டபின் அளவுபட்ட பொருளாகக் கொள்ளற்பாலது யாது உளது? உயிர் சிவம் ஆனபின் மனத்தால் நினைக்கப்படு பொருள் எது? ஒன்றும் இன்று. உலகப் பற்றைவிட்ட அறிவு இனி யாரைப் பற்றி மகிழ்வது?

முதற்பொருளைச் சார்வதன்றி உலகத்தைச் சாரா தொழிக என்பது கருத்து. தூய்மையைத் தரும் மொழியாகிய வாசகத்தை பாசம் ஒருவி ஞானக்கண்ணாற் சிந்தையில் நாடுக என்னும் பொருள் பயப்பச் சுத்தமானதமாக எண்ணி, துரிய அருள் நிலையில் பயிற்சி பற்றி இறங்கும் போதெல்லாம், அதீத இன்புறு நிலைக்கு ஏறி, மோன ஒடுக்க நிலையில் நிற்க.

வி—கு: கண் – அறிவு. 'விதி எண்ணும் அஞ்செழுத்தே' என்னும் சிவஞான போத சூத்திரத்தை நினைக்க. தூமொழி – சுத்த பஞ்சாக்கரம் எனப்படும் மூன்றெழுத்து. அதனை வாசகம் என்றார், அதன் வாச்சியம் மோன ஒடுக்கம் என்பதை நினைப்பித்தற் பொருட்டு. வரைவு – பற்றுதல் என்பாரும் உளர். (306)

**உரையற்ற தொன்றை உரைசெய்யும் ஊமர்காள்**
**கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ**
**திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப்**
**புரையற் றிருந்தான் புரிசடை யோனே.** 2954

க–து: இஃது அலைவற்ற சிந்தையில் விளங்குவன் ஒப்பிலியாகிய சிவன் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: சொல்லின் அளவைக் கடந்த முதற் பொருளை நூற்பொருள் பற்றி விளக்கப்புகும் அறிவுக்குறை உடையவர்களே! அளவுபடா முதல்வனை அளவுட்படுத்துதல கூடாதன்றே! அலைவற்ற நீர் போல, வழங்கற்பாடு அடங்கிய தெளிவுணர்விலே தனக்கு உவமையின்றி விளங்குபவன் புரிசடைப் புண்ணியன் என்பதை உளங்கொள்க.

வி–கு: புரை – ஒப்பு. (307)

**மனமாயை மாயைஇம் மாயை மயக்க**
**மனமாயை தான்மாயு மற்றொன்றும் இல்லை**
**பினைமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டா**
**தனையாய்த் திருப்பது தத்துவந் தானே.** 2955

க–து: இஃது உண்மையைக் காணும் நெறி உணர்த்து கின்றது.

பொ–ரை: மாயை என நின்று நம்மை அகத்தே செல்ல விடாது தடுப்பது மனத்திற்கு. மண் முதல் தத்துவமாய்க் காட்சிப் படும் மாயையோடு உள்ள சம்பந்தம் அல்லது விருப்பமே ஆகும். ஆதலால் மாயையைப் பற்றும் இம் மனத்தை அகம் நோக்கித் தன் உணர்வோடு கலக்க வைப்பின், மனத்தான் உளதாகும் மாயை காட்சிப்படாது கெடும்; பின் மாயையினால் வரும் வினை முதலியனவும் இல்லையாம். இங்ஙனமாதலின் ஞாயிற்றின் வெப்பத்தின் நீங்கக் கருதுவோர் ஞாயிற்றைக் கெடுக்க முயலாது காற்காப்பும் குடையும் உடையராதல் போல மனத்தைச் சென்றவிடத்தாற் செலவிடாது அகத்தே உய்ப்பின்,

அழியக்கடவ பொருளாய் வேறொன்றும் இல்லை; மாயை உளதோ இலதோ என்றாற்போன்ற ஆய்வு பற்றிய பயனில் உரையும் வேண்டப்படா. நான், உடல் பொறி கரணம் உயிர்ப்பு முதலியவற்றுள் ஒன்றோ, பலவோ, வேறோ என ஆய்வதே உண்மையை உணரும் நெறியாகும்.

வி–க: தத்துவம் – உண்மை; இங்கு அதனைக் காணும் நெறியை உணர்த்தி நின்றது. மனமாயை – மனத்தோடு சேர்ந்த மாயை. இம்மாயை – இச்சம்பந்தத்தை, மனத்தோடு சேர்ந்த மாயையை; மயக்க விளையாதபடி செய்ய, மனத்தை அகத்தே செலுத்த. மற்றொன்று – வினை. (308)

## 20. அணைந்தோர் தன்மை

இவ்வதிகாரம் முதல்வன் திருவடியைத் தலைப்பட்டு உணர்ந்தாரது இயல்புகளைக் கூறுகின்றது.

**மலமில்லை மாசில்லை மானாபி மானம்**
**குலமில்லை கொள்ளுங் குணங்களும் இல்லை**
**நலமில்லை நந்தி ஞானத்தி னாலே**
**பலமன்னி அன்பிற் பதித்துவைப் போர்க்கே. 2956**

க–து: இஃது அணைந்தோர்க்குச் சங்கேதம் பற்றி உலகர்க்கு வேண்டப்படும் நியமங்கள் இல்லை என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: ஆசான் அருளால் கிடைக்கும் சிவஞானத்தினாலே தமக்கு அச்சாக உள்ள முதற்பொருளில் நிலைபெற்று அன்பினாலே தம்மை அப்பொருளில் பிரிவுபடாதபடி ஒன்றுவித்தோர்க்கு, உயிர்க்கு மாசு எனப்படும் மலம் இல்லை; அது

பற்றி மனத்துக்கண் தோன்றும் அழுக்காறு அவா வெகுளி என்னும் மாசு இல்லை; அதனால், அறநெறி பற்றித் தாம் கொள்ளத் தக்க மானம் என்னும் பெருமையும் சுற்றத்தார் கண் வைக்கும் அபிமானமும் இல்லையாம். உலகத்தாரால் கொள்ளப் படும் குடிப்பிறப்பு, அதற்குரிய ஈதல், புகழ்வேட்டல் முதலிய குணங்களும் இல்லையாம். தாம் எய்தக்கடவ உலக நலன் என்பதும் இல்லை.

வி–கு:

*ஞாலமதின் ஞானநிட்டை உடையோ ருக்கு*
*நன்மையொடு தீமையிலை நாடுவதொன்*
*றில்லை*
*சீலமிலை தவமில்லை விரதமொ டாச்சிரமச்*
*செயலில்லை தியானமிலை சித்தமல*
*மில்லை*
*கோலமிலை புலனில்லை கரண மில்லை*
*குணமில்லை குறியில்லை குலமு மில்லை*
*பாலருடன் உன்மத்தர் பசாசர்குண மருவிப்*
*பாடலினோ டாடலிவை பயின்றிடினும்*
*பயில்வர்*

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தம் ஒப்பிடத்தக்கது. (309)

**ஒழிந்தேன் பிறவி உறவென்னும் பாசம்**
**கழிந்தேன் கடவுளும் நானும்ஒன் றானேன்**
**அழிந்தாங் கினிவரும் மார்க்கமும் வேண்டேன்**
**செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே. 2957**

க–து: இஃது இயற்கைச் சார்பாகிய சிவத்தைத் தலைப் பட்டபின் பிற சார்புகள் அனைத்தும் கழலுதல் கூறுகின்றது.

பொ–ரை: எல்லா நலன்களுமாய்த் திரண்டு உள்ள சார்பாகிய சிவனைத் தலைப்பட்டு உணர்ந்தேன்; ஆதலால், பிறவிக்கு முதலாகிய அவா நீங்கினேன்; எனக்கு உறவுபோல் வந்து கட்டுறுத்தும் உலகத் தொடக்கை விட்டேன்; முதல்வனோடு ஒன்றாய் அழுந்தி இன்புற்றேன்; அழிந்தும் மீண்டு பிறந்தும் வரும் எந்நெறியினையும் இனி விரும்பேன். (310)

**ஆலைக் கரும்பும் அமுதும் அக்காரமும்**
**சோலைத் தண்ணீரும் உடைத்தெங்கள் நாட்டிடைப்**
**பீலிக்கண் அன்ன வடிவுசெய் வாளொரு**
**கோலப்பெண் ணாட்குக் குறைவொன்றும்**
**இல்லையே. 2958**

க–து: இஃது அணைந்தோர்க்குத் திருவருள் எல்லா நலன்களையும் படைத்து உதவுதல் உணர்த்துகின்றது.

பொ–ரை: ஆலையில் ஆடிய கருப்பஞ்சாறு, ஆவின் பால், சருக்கரை, சோலைநிழல், தெளிந்த நீர் இத்தனையும் வேண்டியாங்கு எய்துவிக்கும் நாட்டைப் போன்ற ஈசன் திருவடியாகிய பேரின்ப நாட்டில் மயிற் பீலியின் கண் போன்ற இயற்கை எழில் நலங்களைத் தோற்றுவிப்பவளும், அன்பர் விரும்பும் கோலத்தைப் பூண்பவளும் ஆகிய திருவருட் சத்திக்கு அன்பர் அடிப்படை உணர்வை உணரும் ஆற்றலுக்கோ, அவர்க்கு வேண்டுவன ஈயும் ஆற்றலுக்கோ சிறிதும் குறைவில்லை.

வி–கு: பெற்ற சிற்றின்பமே பேரின்பமாக முற்ற அருள் புரிவாள் என்பது கருத்து. உடைத்தாகிய எங்கள் நாடு என்க.
(311)

**ஆராலு மென்னை அமட்டவொண் ணாதினிச்**
**சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்**

**சீராடி யங்கே திரிவதல் லாலினி**
**யார்பாடுஞ் சாரா அறிவறிந் தேனே.** 2959

க–து: முதல்வனைத் தலைப்பட்டார் உலகரைச் சார்ந் தொழுகார் என்பது உணர்த்தப்படுகிறது.

பொ–ரை: எல்லாச் சிறப்புக்களும் நிறைந்த முதல்வன் என் அறிவில் விளங்கி நின்று செயற்படுத்துதலால், மக்கள் யாராலும் என்னைக் கட்டுப்படுத்துதல் இயலாது. பாராட்டப் பெற்று அவன் அருளில் இன்புற்றுத் திரிவதன்றி உலகத்தார் பக்கத்திற் சார்ந்து நில்லாத சுதந்திர அறிவு பெற்றேன்; பிறர் கூறுவன கேட்டு ஒழுகக் கடவேன் அல்லேன்.

விகு: பாடு – பக்கம். (312)

**பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசம்**
**தெரிந்தேன் சிவகதி செல்லு நிலையை**
**அரிந்தேன் வினையை அயில்மன வாளால்**
**முரிந்தேன் புரத்தினை முந்துகின் றேனே.** 2960

க–து: இஃது அணைந்தோர் வினைமாசு கழுவுமாறு கூறுகின்றது.

பொ–ரை: சிவத்தைத் தலைப்படும் நெறியினையும் அதிற் பிறழாது நிற்கும் நிலையினையும், விளங்கக் கண்டேன்; அயனால் அமைக்கப்பட்டது எனப்படும் முற்செய்வினைத் தொடக்கின் நின்றும் பிரிந்தேன்; அஃதாவது, ஊழின் வலியைக் கடந்தேன். திருவைந்தெழுத்து நெறியிற்படும் மனம் என்னும் கூரிய வாளால் எதிர்வினையாகிய முள் மரத்தைத் தோன்றும் போதே அரிந்து நீக்கினேன்; இருந்து வாழிடமாகிய உடம்பின்

பந்தப்படுத்துந் தன்மையைக் கெடச் செய்தேன்; பேரா இயற்கையைப் பெற முற்படுகின்றேன்.

வி–கு: தெரிந்தேன் – விளங்கக் கண்டேன்; முரிந்தேன் – முரியச் செய்தேன். (313)

**ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்**
**ஒன்றுகண் டீர்உல கக்குயி ராவதும்**
**நன்றுகண் டீரினி நமச்சிவா யப்பழம்**
**தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே. 2961**

க–து: இது ஞான மெய்ந்நெறிதான் நமச்சிவாயச் சொல் ஆம் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: உலகத்தாரால் தொழப்படும் உவமையில் தெய்வமும் சிவம் ஒன்றே என்பதை அறிக! அத்தெய்வமே உலகுக்கு உயிராயுள்ளதும் ஆம். உயிர் பெறத்தக்க முடிந்த பயனைத் தருவதும் எளிதானதும் நமச்சிவாய என்னும் மறையே ஆகும். சிவத்தை நுகர்ந்து தலைப்பட்ட எனக்கு இஃதொன்றுமே இன்புறு நிலைக்கண் எளிதின் உய்த்து இன்மை பயந்ததாம் என்பது உணர்க. (314)

**சந்திரற் பாம்பொடுஞ் சூடும் சடாதரன்**
**வந்தென்னை யாண்ட மணிவிளக் கானவன்**
**அந்தமு மாதியும் இல்லா அரும்பொரள்**
**சிந்தையின் மேவித் தியக்கறுத் தானே. 2962**

க–து: இது முதல்வனே குருவாய் வந்து ஆட்கொண்டு பின்னருந் துணையாதல் கூறுகின்றது.

பொ–ரை: திங்களை அரவொடு பகை நீக்கிச் சடையில் வைக்கும் பெருமான், குருவாய் எழுந்தருளி வந்து என்னை ஆட்கொண்ட், தானே மங்காமல் ஒளிரும் மணி விளக்கு. முடிவும் முதலும் இல்லாத பெறுதற்கு அரிய மிகு நுண்பொருள்; இத்தகைய முதல்வன் என் அறிவில் விரும்பி எழுந்தருளி எவ்வகைக் கலக்கமும் நிகழாதபடி அருள்புரிந்தான். (315)

**பண்டெங்கள் ஈசன் நெடுமால் பிரமனைக்**
**கண்டங் கிருக்குங் கருத்தறி வாரில்லை**
**விண்டங்கே தோன்றி வெறுமன மாயிடில்**
**துண்டங் கிருந்ததோர் தூறது வாமே.** 2963

க–து: முதல்வன் அணைந்தோரை இடங்கொள்வது. அவன் அயன் மாலைப் படைத்து அவரை இடங்கொண்டு படைத்தல் காத்தல்களைச் செய்தல்போல்வது ஆம் என்பது உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ–ரை: வேதாகம புராணங்கள் முதல்வன் முற் காலத்தே நெடுமாலையும் அயனையும் படைத்து அவரை இடமாகக் கொண்டு அதன் தொழிலை நடத்துவன் எனக் கூறும் கருத்தை உள்ளபடி உணர்வார் சிலரேயாவர்; பலர் அவர் தாமே முதல்வரென எண்ணவும் செய்கின்றனர். அவதாரம் எனப்படும் நிலையில் விண்டுவானவர் தோன்றிச் சிவனைத் தியானிக்காமல் வெறும் மனம் உடையராயின, உடம்பினின்று நீங்கிய ஒரு துண்டு தனித்திருந்து தன் பெருமையினை இழத்தல் போலப் பழிச் சொற்கே உரியராய் முடிவர்.

அணைந்தோரும் இறைவனை எண்ணாதொழியின் பழிபூண்பர் என்பது கருத்து.

வி–கு: ஐயிருபிறப்பினும் அரி சிவனை அருச்சித் தமையும், செருக்குற்றபோதெல்லாம் ஒறுக்கப்பட்டமையும் உணர்க. அயனுக்கும் இவ்வாறே கொள்க. கண்டு – படைத்து. அங்கிருத்தல் – அவர் வடிவில் இருந்து அதிகாரம் செய்தல். விண்டு – சிவனை அயர்த்தல் பற்றி பிரிந்து. துண்டு அங்கிருந்து – துண்டு போல அங்கு இருத்தலால். தூறு – பழிச்சொல்.

மேகம் போன்ற திருவருள் அங்கிருந்து, மனம் தனித் தன்மை எய்தின், அவர் துண்டுபோலத் தனி நின்று முதல்வ னுக்குத் தூய இருக்கை ஆவர் – என்று பின் இரண்டடிகளுக்கு உரைப்பாரும் உளர்; வெறுமனம், தூறு என்பன அவர் கருதும் பொருள் குறிப்பன அன்மை உணர்க. (316)

**அன்னையும் அத்தனும் அன்புற்ற தல்லது**
**அன்னையும் அத்தனும் ஆரறி வாரென்னை**
**அன்னையும் அத்தனும் யானும் உடனிருந்து**
**அன்னையும் அத்தனை யான்புரந் தேனே.** 2964

க–து: இஃது உயிர்க்கு அன்னை அத்தன் எனப்படும் அம்மையப்பர், உடலுக்குரிய அன்னை அத்தனைவிட இனியர் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: உடலைத்தந்த தாய் தந்தையர் உடலைத் தரும்போது மறைப்பாற்றலால் உந்தப்பட்டுத் தாம் ஒருவரை ஒருவர் அன்பு செய்து புணர்ந்ததன்றி அதனால் வரும் மகவின் இயல்பு அறியார்; மகன் தோன்றிய பின்னரும், அவன் மாட்டு அன்பு செய்து உடலையும் அறிவையும் வளர்த்தலன்றி, அவன் உயிர்க்கு உற்ற நோயும், அது தீர்க்கும் மருந்தும் அறியார். ஆயினும், அவர்தம் அன்பிற்கு அவரைப் பேணுதல் மகனது கடன் ஆகின்றது. யான் பிறவிக்கு வாராத முன்னும், வந்த

பின்னும் என்னோடு உடனிருந்து என்னை வளர்த்து ஆமயம் தீர்த்து ஆட்கொண்டு பேரின்பம் கொடுத்துவரும் முதல்வனை யான் அயரா அன்பின் அணைந்து உள்ளேன்.

வி–கு: அன்னை அத்தன் முன் இரண்டடிகளில் உலகில் ஈன்றாளும் தந்தையும் பின் இரண்டடிகளில் திருவருளும் அதனிற் பிரிவிலாத முதற்பொருளும். என்னை – மகனது இயல்பை. ஆர் என்றது இருவரில் ஒருவரும் அறியார் என்பது உணர்த்திற்று. அறிவு இன்மையின், அதன் விளைவாகிய அன்பும் உறுதி பயத்தல் இல்லை ஆயிற்று. அன்னையும் அத்தனும் யானும் உடனிருத்தலை, 'சிவாய' என்னும் பெரும் பெயர் கொண்டு நினைக்க. புரத்தல் – பேணுதல், பத்தியினால் மறவாது ஏத்தல். புரத்தல் – அணைந்தோர் தன்மையாதல் அறிக. அன்னையும் அத்தனை – அன்னை அத்தனையும் – என உம்மையைப் பிரித்துக் கூட்டி உரைக்க. (317)

**கொண்ட சுழியும் குலவரை யுச்சியும்**
**அண்டரும் அண்டத் தலைவரும் ஆதியும்**
**எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்துளே**
**உண்டனர் நானினி உய்ந்தொழிந் தேனே.** 2965

க–து: அணைந்தோர்க்கு உலகம் அடங்கி நடக்கும் என்பது உணர்த்துகின்றது இது.

பொ–ரை: பாசப்பற்றற்ற என் அறிவின்கண் முதல்வன் இடங்கொண்டமையால், நிலத்தை அடங்கக் கொண்ட ஆழி வட்டமும், சிறந்த மேரு வரையின் முடியும், தேவர்களும், அவருலகத் தலைவரும், முதற்கண் வந்த மும்மூர்த்திகளும், எண்டிசைக் காவலராகிய இந்திரன் முதலியோரும் என்வயப் பட்டு நின்றனர்; இப்போது யானும் உய்ந்துவிட்டேன். (318)

**தானே திசையொடு தேவரு மாய்நிற்கும்**
**தானே வடவரை யாதியு மாய்நிற்கும்**
**தானே உடலுயிர் தத்துவமாய் நிற்கும்**
**தானே உலகிற் றலைவனும் ஆமே. 2966**

க–து: இது முதல்வன் உலகெலாமாகி நிற்றல் கூறுகின்றது.

பொ–ரை: உடலின்கண் உயிர் கலப்பினால் அதுவே என நிற்குமாறு போல, முதல்வன் தானே எட்டுத் திசையும், தேவரும், மேரு மலை முதலியனவும், உடலும், உயிரும், தத்துவங்களுமாகிக் கலந்து நிற்பன்; அவனே உலகிற்குத் தலைவனும் ஆவன்.

ஆதலின், அணைந்தோர் உலகமுகப்படும்போது அட்டமூர்த்தியாய் நிற்கும் அவனை, அன்புவிளையும் இடங்களாகிய திருவேடம், சிவன்கோயில் என்பவற்றில் தெளியக்கண்டு வழிபடுவர் என்பது குறிப்பெச்சம். (319)

**நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்**
**சிவன்வரின் நானுடன் போவது திண்ணம்**
**பவம்வரும் வல்வினை பண்டே அறுத்தேன்**
**தவம்வரும் சிந்தைக்குத் தான்எதிர் ஆமே. 2967**

க–து: சிவத்தைப் பேணுந் தவத்தினர்க்குப் பருவுடல் நீங்கவருங் காலத்துச் சிவன்றமர்தாம் எதிர்வர் என்பது உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ–ரை: என்முன் நமன்தமர்வரின் ஞான வாளாகிய திருவைந்தெழுத்தைக் கொண்டே அவர் வாராமல் தடுப்பேன்.

சிவபிரான் தமர் எதிர்கொள் வரேல் அவரை வணங்கி உடன் சென்று சிவலோகம் புகுவது உறுதியாம். பிறவிக்குக் காரண மாகிய இரு வினைகளை முன்னரே அறத்துவிட்டேன். சிவன் கழலிற் செறி வாகிய தவத்தைப் பயின்ற அறிவின் முன் சிவனே எதிர்ப் படுவன்.

வி–கு: சிந்தைக்குத்தான் எதிர் ஆரே – என்பது பாடமாயின் அவ்வறிவினர்க்கு ஒப்பாவார் பிறர் இலர் என உரைக்க. (320)

**சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்**
**சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தம்**
**கத்தும் சிலுகும் கலகமும் கைகாணார்**
**சத்தம் பரவிந்து தானாமென் றெண்ணியே. 2968**

க–து: இது சிவமாந் தன்மை பெற்றோர் உலகத்தார் சங்கேதங்களிற்றொடக்குறார் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: இடையறாச் சிவ நினைவால் ஏகனாகி இறை பணி நிற்றலால் மும்மலக் குறும்பை அறுத்தவர் மலமாய்ப் பந்திக் கும் உலகிற் பற்றுக் கொள்ளாதவராய் நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்கும் சிவத்தோடு ஒன்றி உடனாவர்; உலகத்தார் பிதற்றல் கள், சிறு பூசல், கலகம் விளைத்தல் என்பவற்றாற் பதற்றப்படார்; சொல்லும் பொருளும் மாமாயையால் ஒருவனது அறிவில் தோன்றுவன எனக் கண்டு அவற்றைக் கழிப்பர் ஆகலின்,

வி–கு: சித்தம் சிவமாதல் சாதக நிலை; சுத்தச் சிவமாதல் – சாத்தியம். சத்தம் – சொல்லும் பொருளும் என இரட்டுற மொழிந்துகொள்க. பரவிந்து – மாமாயை; எனவே, அதன்கீழ் அடங்கி நிற்கும் மாயையும் உடன் கொள்ளப்படும். (321)

**நினைப்பு மறப்பு மிலாதவர் நெஞ்சம்**
**வினைப்பற் றறுக்கும் விமலன் இருக்கும்**
**வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி**
**நினைக்கப் பெறிலவன் நீளியன் ஆமே. 2969**

க–து: முதல்வன் விளங்கும் நிலை நினைப்பும் மறப்பும் அற்ற நிலை என்பது இதனால் உணர்த்தப்படுகின்றது.

பொ–ரை: அறிவு அறியாமை இரண்டும் நீங்கிய நிலையே முதல்வனைத் தலைப்பட்டு உணரும் நிலை. அந்நிலையில் முதல்வன் வினைப்பற்றை அறுக்கும் தூயோனாய் வெளிப்பட்டு, உயிரைத் தன் வண்ணஞ் செய்து கொள்வன். அவனைத் தேடுஞ் சித்தவிருத்தி உடையார்க்கு அவன் பெரிதுஞ் சேயனாயே நிற்பன்.

வி–கு: நீளியன் – சேயன். நான் அழிய வல்லார்க்கே முதல்வன் உணரப்படுவன் என்பது கருத்து. (322)

**சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்**
**தவபெரு மானென்று தான்வந்து நின்றான்**
**அவபெரு மானென்னை ஆளுடை நாதன்**
**பவபெரு மானைப் பணிந்துநின் றேனே. 2970**

க–து: இடையறாது ஆர்வத்துடன் ஏத்த இறைவன் வெளிப்பட்டருள்வன் என்பது உணர்த்துகிறது இம்மந்திரம்.

பொ–ரை: தூய பேரின்ப காரணன் என்று முதல்வனை முன்னிலைப்படுத்திப் பரவினேன்; அதுவே தவமாதலின். தவத்திற்கு முதல்வன் என்பது தோன்ற அவன் வெளிப்பட்டுத் தோன்றினன். காக்கும் பெருமானும், ஆட்கொள்ளும் பெருமா

னும், எவற்றையும் தோற்றுவிக்கும் பெருமானுமாகஅவனை உணர்ந்து அவன் அடிக்கீழ் அடங்கி நின்றேன்.

வி–கு: அவ – காத்தல். பவன் + பெருமான், பவ பெருமான் என முடிந்தது. தவப்பெருமான் என்பது எதுகை நோக்கி ஒற்றின்றி வந்தது. (323)

**பணிந்துநின் றேன்பர மாதி பதியைத்**
**துணிந்துநின் றேனினி மற்றொன்றும் வேண்டேன்**
**அணிந்துநின் றேன்உடல் ஆதிப் பிரானைத்**
**தணிந்துநின் றேன்சிவன் தன்மைகண் டேனே. 2971**

க–து: இது முதல்வன் தன்னைத் தொழுவார்க்கே அருளுந்திறம் உணர்த்துகின்றது.

பொ–ரை: மேலான பொருளும், முற்பட்ட முதல்வனும், முறை செய்து காப்பாற்றுவோனுமாகிய சிவபிரானை, இங்ஙனம் தெளிந்து உணர்ந்து பணிந்து நின்றேன்; அவனையே பெற லரும் பேறாகக் கொண்டு பிறிதொரு பொருளையும் விரும்பினே னல்லேன். ஆதி முதல்வனை என் உடலுக்கு அணியாக, உள்ளத் தின்கண் கொண்டு நின்றேன். பரபரப்பின்றி அமைந்து நின்றேன். அவ்வமைதியில் அவன்றன் இயல்புகளைத் தலைப்பட்டு உணர்ந்தேன். (324)

**என்னெஞ்சம் ஈசன் இணையடி தாஞ்சேர்ந்து**
**முன்னஞ்செய் தேத்த முழுதும் பிறப்பறும்**
**தன்னெஞ்சம் இல்லாத் தலைவன் தலைவிதி**
**பின்னஞ்செய் தென்னைப் பிணக்கறுத் தானே. 2972**

க–து: இதுவுமது.

பொ–ரை: என் நினைவு முதல்வனுடைய இரண்டு திருவடிகளையே சார்ந்து, இடையறாது எண்ணி ஏத்தப் பிறப்பு அதன் காரணத்தோடு இன்றாய் ஒழியும். தற்பயன் கருதும் நினைவில் விளங்காத முதல்வன் என் ஊழ்வினையை மாற்றி யான் மாறுபடாது தன் அருள்வழி நிற்கச் செய்தான்.

வி–கு: தன் நெஞ்சம் – தனக்குப் பயன் கருதும் நினைவு; இன்மை – விளங்காமைப் பொருட்டு. பிணக்கு – மாறுபாடு.
(325)

**பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தெண்ணும்**
**கணக்கறுத் தாண்டனன் காணந்தி என்னைப்**
**பிணக்கறுத் தென்னுடன் முன்வந்த துன்பம்**
**வணக்கலுற் றேன்சிவம் வந்தது தானே. 2973**

க–து: இஃது அற்றது பற்றெனின் உற்றது வீடு என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: உயிர்க்குயிராயிருந்து என் அகத்துறு நோயைக் காணும் முதல்வன், சிவ நல்வினையைக் கூட்டி, எனது யான் என முனைந்து நிற்கும் பிணக்கையும், இழிவு உயர்ச்சி என்னும் இருமையினையும் என் அறிவின் நீக்கிச் சமப்படுத்தி ஆட்கொண்டான். இங்ஙனம் அவன் அறிவின் கோணை அறுத்தமையால் என்னோடு பண்டுதொட்டு வந்த துன்பங்களுக்குக் காரணமாகிய உலகப்பற்றை விட்டொழிந்தேன்; சிவத்துவம் தானே விளங்குவதாயிற்று.

வி–கு: பிணக்கு – மாறுபாடு; பிணி – இழிவு, மூப்பு – உயர்ச்சி. என்னும் கணக்கு – இவ்வாறு எண்ணும் இருமைகள், துவந்துவங்கள் (தொந்தம்) துன்பம் – துன்பத்திற்குக் காரணமாகிய பற்று. சிவம் – சிவத்துவம். (326)

**சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப்**
**பவம்வந் திடநின்ற பாசம் அறுத்திட்**
**டவனெந்தை யாண்டருள் ஆதிப் பெருமான்**
**அவன்வந்தென் னுள்ளே அகப்பட்ட வாறே. 2974**

க-து: இஃது இறைவன் தானே தன்னை உணர்த்தி யாட்கொண்டவாறு உணர்த்துகின்றது.

பொ-ரை: தேவர் கூட்டம் உடன் சூழ்ந்து வரும்படி சிவ பிரானே எழுந்தருளி வந்து பிறவிக்குக் காரணமாகிய பாசத்தை அறுத்து எனக்குத் தந்தையாய், ஆதி முதல்வனாய் விளங்கி ஆண்டருளினன்; பின், அவன்தன்னை உணர்ந்தின்புற வைக்கின் றனன்.

வி-கு:

***என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்***
***தன்னை நினையத் தருகின்றான் - புன்னை***
***விரசு மகிழ்சோலை வியனாரை யூர்முக்கண்***
***அரசுமகி ழத்திமுகத் தான்.***

என்னும் நம்பியாண்டார் நம்பிகள் வாய்மொழியை ஒப்பு நோக்குக. (327)

**கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தில்**
**அரும்புங் கந்தமும் ஆகிய ஆனந்தம்**
**விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்**
**கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே. 2975**

க-து: இது பேரின்ப நுகர்ச்சி எய்திய பின் சிற்றின்ப நுகர்ச்சி தானே கழிந்தது என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: இவ்வுடம்பகத்து உள்ளபோதே கருப்பஞ் சாறும் தேனும் கலந்தாற்போன்ற, அரும்பும் வாசமும் சேர்ந்தால் ஒத்த பேரின்பத்தை அயரா அன்பால் என் அறிவகத்து ஊற்றி ருந்து எழுவதனை நுகர்ந்தபின், உலகத்துப் பொருள்களுள் கரும்புந் தேனும் தம் கவர்ச்சியை இழந்துவிட்டன.

வி–கு: உள்ளம் – ஆன்மா. கலந்ததோர் ஆனந்தம் ஆகிய ஆனந்தம் என இரண்டையும் ஆனந்தத்திற்கு அடை யாக்குக.

**வாக்கிற் தமுதம் மயிர்க்கால் தோறும்**
**தேக்கிடச் செய்தனன்**

என்னும் திருவாசகம் காண்க. (328)

**உள்ள சரியாதி ஒட்டியே மீட்டென்பால்**
**வள்ளல் அருத்தியே வைத்த வளம்பாடிச்**
**செய்வன வெல்லாஞ் சிவமாகக் காண்டலான்**
**கைவள மின்றிக் கருக்கடந் தேனே.** 2976

க–து: இதுவுமது.

பொ–ரை: முதற்பொருளை நேரே தலைப்பட்டு உணர் தற்குப் படிநிலைகளாக உள்ள சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றில் என்னைச் செல்ல வைத்து, என்னைப் பாசத்தி னின்றும் விடுவித்துத் தன் திருவடிப் பேரின்பத்தை நுகர வைத்த வள்ளலாகிய சிவன் திருவருளைப் பாடி, என்கண் நிகழ்வன வெல்லாம் சிவச் செயலாகக் காண வைத்தலால் ஏறுவினை இல்லையாகப் பிறவிக்கடலைக் கடந்தேன்.

வி–கு: கைவளம் – செயலால் வரும் பயன், ஏறு வினை. சிவம் – சிவச்செயல். 'உள்ள சரிதாதி – என்பதும் பாடம். (329)

**மீண்டார் கமலத்துள் அங்கி மிகச்சென்று**
**தூண்டா விளக்கின் றகளிநெய் சோர்தலும்**
**பூண்டாள் ஒருத்தி புவனசூ டாமணி**
**மாண்டான் ஒருவன்கை வந்தது தானே.** 2977

க–து: இது மெய்ந்நெறிக்கண் முதல்வன் துணையாமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: உலக நெறியினின்று மீண்ட சாதகரது உள்ளக் கமலத்தில் தவமாகிய அங்கி மிகும்படி எளிவந்து, தூண்டப்படாத விளக்கைப் போன்ற ஆன்ம உணர்வாகிய தகளியில் நெய் சொரியும் செயலையும் உலகத் தலை மணியாகிய திருவருள் அன்னை தன் தொழிலாகக் கொண்டாள். நெய் என்றது மெய்யுணர்வை. உரையுணர் விறந்து நின்ற ஒருவன்றன் பேருதவியும் தானே வந்து அமைந்தது.

வி–க: கை என்றது உள்ளத்தைக் காணும்படி காட்டிக் காணும் உபகாரம்: அது வருதலாவது அதன் உண்மை உணர்தல்; உணரவே அயரா அன்பின் அரன்கழல் சேறலும் வாய்த்தது என்பதும் கொள்ளப்படும். (330)

**ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு**
**நூறே சிவகதி நுண்ணிது வண்ணமும்**
**கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்**
**வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே.** 2978

க–து: சிவத்தைச் சேரும் நெறி பலவேனும் திருவருள் விளக்கம் பெறுதல் அவை அனைத்திற்கும் பொதுவென்பது உணர்த்துகின்றது இது.

பொ–ரை: இறைவன் நூலுட் கூறப்படும் நெறியே பேரின்ப மலையினின்று வீழும் அருள் நீர் அலைக்கும் அருவியாம்; அத்திருவருள் வந்து தோயும் உள்ளமாகிய குளமும் ஒன்றுண்டு. சுண்ணாம்பு போன்று உயிர் மாசு நீக்கித் தூய்மை செய்வதே சிவகதி (திருவைந்தெழுத்து நெறி); அதன் இயல்பும் மிகு நுட்பம் உள்ளது. அதனால் சாதிக்கப்படும் மேன்மையான பொருள் குவிந்த முகையையுடைய பூங்கொம்பு அன்ன அம்மையை ஒருபாகங்கொண்ட தனிமுதற் பொருளே ஆகும்.

வி–கு: நூறு – சுண்ணாம்பு; நூறுவது நூறெனப் பட்ட தெனினும் அமையும். ஆறு – பொய்தீர் ஒழுக்க நெறி. (331)

**அன்புள் ளுருகி அழுவன் அரற்றுவன்**
**என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்**
**என்பொன் மணியை இறைவனை ஈசனைத்**
**தின்பன் கடிப்பன் திருத்துவன் றானே.** 2979

க–து: இஃதாசிரியரது அன்பு மேலீட்டை உணர்த்து கின்றது.

பொ–ரை: பொன்னாகிய என் உணர்விற் பதித்த செம் மணியும், எங்குந் தங்குபவனும், ஆள்வோனுமாகிய இனியனை எண்ணி அன்பினால் உள்ளம் உருக அழுவன்; உரத்தி அழைப்பேன்; எலும்பும் நெக்கு விடும்படி எப்போதும் புகழ்ந்து நிற்பேன். அவனை மிகச் செறிந்து நுகர்வேன்; அகத்தே அவனை அணி செய்து மகிழ்வேன்.

வி–கு: ஈற்றடி தின்பன, கடிப்பன, திருத்துவன அனைத்தும் அவனாகக் கண்டு சிவபோகமே விளையப்

பெறுவேன் என்னும் பொருளைத் தருதல் கூடும்; ஊடுவேன், உணர்வேன், புணர்வேன் என உரைப்பாரும் உளர்.

**தொழுது தூமலர் தூவித் துரதித்துநின்(று)**
**அழுது காமுற் றரற்றுகின் றாரையும்**
**பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்**
**எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே.**

என்பதும் நோக்குக. (332)

**மனம்வி ரிந்து குவிந்தது மாதவம்**
**மனம்வி ரிந்து குவிந்தது வாயுவும்**
**மனம்வி ரிந்து குவிந்தது மன்னுயிர்**
**மனம்வி ரிந்துரை மாண்டது முத்தியே.** 2980

:-து: இது வீடுபேற்றின்கண் உணர்வு விரிய ஏனைச் செயல்கள் அடங்கி நின்றன என்பது உணர்த்துகின்றது.

பொ-ரை: முதல்வனை மெய்யுணர்வாற்றலைப் பட்ட வீட்டு நிலைக்கண் என் மனம் விரிந்து சிவ வியாபகத்தைத் தலைப்பட்டமையால், அதற்கு முன் விரிந்து நின்ற சிறந்த தவச் செயலும், உயிர்ப்பும், யான் எனது எனச் செயற்பட்ட உயிரும் குவிந்து முதற்பொருளின்கண் அடங்கின. இங்ஙனம் உணர்வு விரிந்து, அதனை விளங்கக் காணல் காட்டுதல் ஆகிய உரை மாண்ட நிலையே பரமுத்தி நிலையாகும்.

வி-கு: ஈண்டு மனம் என்றது ஆன்ம சிற்சத்தியை; அது சிவஞானத்தால் விரியக் கருவிகளானாய செயல்கள் சீவியாமல் அடங்கின என்பது கருத்து. விரிந்து என்றது செய என்னும் வாய்ப்பாட்டின் திரிபு.

**கயல்மாண்ட கண்ணிதன் பங்கன்**
**எனைக்கலந் தாண்டலுமே**
**அயல்மாண் டருவினைச் சுற்றமும்மாண்டு**
**அவனியின் மேல்**
**மயல்மாண்டு மற்றுள்ள வாசகம்மாண்**
**டென் னுடைய**
**செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணங்**
**கொட்டாமோ.**

என்னுந் திருவாசகத்தை உடன்வைத்து நோக்குக. (333)

## 21. தோத்திரம்

அஃதாவது இறைவன் பொருள்சேர் புகழைக் கூறுதல். அணைந்தோரே அவன் புகழைப் பட்டாங்கு கூறவல்லாராகலின் இது மேலை அதிகாரத்தின் பின் வைக்கப்பட்டது.

**மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்**
**போயின நாடறி யாதே புலம்புவர்**
**தேயமும் நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்**
**காயமின் னாட்டிடைக் கண்டுகொண் டேனே. 2981**

க–து: இஃது இறைவன் உள்நோக்கிக் காணத்தக்கவன் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: காணப்படும் உலகிற்குக் காரணமாகிய மாயையை உடையவனை எண்ணி மனம் எனப்படும் நீண்ட தூரம் செல்லும் தேரில் ஏறித் தேடி, அவன் சென்ற இடந் தெரியாமல் மக்கள் வருந்துவர். யான் வேற்றுமொழி வழங்கும் அயல் நாட்டினும், உள் நாட்டினும் மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும்

வடிவில் அவன் விளங்குமிடங்களில் தேடி வழிபட்டு, அதன் பயனாகப் பெருமொழி சொல்லும் அருளாசான் துணையால், மின் போன்று தோன்றி மறையும் உடம்பில் உள்ளத்தின்கண் அவன்றன் இருப்பைக் கண்டுகொண்டேன்.

வி–கு:

***ஒன்றி யிருந்து நினைமின்கள்***
***உந்தமக் கூனமில்லை***
***கன்றிய காலனைக் காலாற்***
***கடிந்தான் அடியவற்கா***

என்னும் அப்பர்கூறும் உறுதிமொழியும், 'மூர்த்தி தலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர் – வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே' எனும் தாயுமான அடிகள் வாய்மொழியும் நினைக்கத்தக்கவை. உளம் ஒன்றி, மறைமொழி துணையாக, நினைவின் மூலத்தை நோக்கிக் காண்க என்பது கருத்து. (334)

**மன்னு மலைபோல் மதவா ரணத்தின்மேல்**
**இன்னிசை பாட இருந்தவ ராரெனில்**
**முன்னியல் கால முதல்வனார் நாமத்தைப்**
**பன்னினர் என்றே பாடறி வீரே.** **2982**

க–து: இறைவன் திருநாமத்தை ஓதுவோர் இந்திர பதவி பெறுவர் என உணர்த்துகின்றது இம் மந்திரம்.

பொ–ரை: அசையாமல் நிலைபெறும் மலையைப் போல, அசையுமலையாகிய மதநீர் சொரியும் யானையின்மீது ஏவலர்கள் தன் புகழ்கூறி வாழ்த்த, இருந்த அரசனை யார் என்று அவன்றன் முன் வரலாற்றை ஆராய்ந்தால், முன்னே இயன்ற

போதெல்லாம் முதல்வன் திருநாம அஞ்செழுத்தை நாவில் நவின்றவன் என்றே அவன்றன் பெருமையை அறிவீர்கள்.

வி–கு: முன் இயல் காலம் – நினைத்தல் இயலும் காலம் எல்லாம். பாடு – முன் நிகழ்ச்சி எனினும் அமையும். மலை போன்ற வாரணம் எனினும் பொருந்தும். (335)

**முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை**
**எத்தனை வானோரும் ஏத்தும் இறைவனை**
**அத்தனைக் காணா தரற்றுகின் றேனையோர்**
**பித்தன் இவனென்று பேசுகின் றாரே. 2983**

க–து: இஃது உண்மை ஞானிகள் சிவனை எப்போதும் கண்டிருக்க விழைந்து, பேரன்புடையராய் இறைவனைக் கருதி அழுது ஒலிப்பரென்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: சிவபிரான் முத்துக்களுள் சிறந்த ஆணி முத்துப் போன்றவன்; மெய்யுணர்ந்தார்க்கு அகவிருள் கடிந்து உள்ளத்து எழுகின்ற இளமுளை ஞாயிறு போன்றவன்; எத் துணைப் பெரிய தேவர்களும் புகழ்ந்து போற்றும் முதல்வன்; எனக்குத் தந்தையனையன்; அவன் ஒரோ வழி தன் உருக்கரந்து நிற்கும்போது ஆற்றமாட்டேனாய் அழுதரற்றுவன் அந்நிலையில் உலகினர் எனைக்கண்டு இவன் பித்தன் என்று பேசுகின்றனர்.

வி–கு: எத்தனை – எல்லாரும் எனினும் அமையும்.

***செழுமலர்க் கொன்றையும் கூவிள மலரும்***
***விரவிய சடைமுடி அடிகளை நினைந்திட்(டு)***
***அழுமலர்க் கண்ணிணை யடிவர்க் கல்லால்***
***அறிவரி தவன்றிரு வடியிணை இரண்டும்***

என்ற நம்பி ஆரூரர் நற்றமிழ் உன்னத்தக்கது. (336)

**புகுந்துநின் றானெங்கள் புண்ணிய மூர்த்தி**
**புகுந்துநின் றானெங்கள் போதறி வாளன்**
**புகுந்துநின் றானடி யார்தங்கள் நெஞ்சம்**
**புகுந்துநின் றானயே போற்றுகின் றேனே. 2984**

க–து: இஃது இறைவன் நெஞ்சிற் புகுந்து நின்றமை கூறுகின்றது.

பொ–ரை: அடியவர் உள்ளத்தைத் தூய்மை செய்து ஒளிமயமாக்கும் அறவுருவச் செல்வனும், உயிர்களின் உள்ளிருந்து அவற்றின் பக்குவமறிந்து குருவுருவிற்றோன்றி ஆள்வோனும், தன் அடிச் சார்ந்தார் உள்ளத்தில் ஒளிவளர் விளக்காய் விளங்குபவனும் ஆகிய சிவபிரான் என் நெஞ்சினும் புகுந்து கரவாது நின்றான்; அவனையே போற்றுகின்றேன் யான்.

வி–கு: புண்ணியமூர்த்தி – அறவுருவினன். (337)

**பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்**
**வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படும்**
**நீதிக்கண்ணாடி நினைவார் மனத்துளன்**
**கீதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனே. 2985**

க–து: இஃது இறைவன் இயல்பு தோன்றும் இடங்கள் உணர்த்துகின்றது.

பொ–ரை: இறைவன் ஐம்பூத காரியமாய்க் கண்ணாடி போல் நின்று ஆன்மாவின் அறியுந்தன்மையை விளக்கும் ஐம் பொறிகளின் காட்சியில் அகப்பட்டிலன்; ஆயினும் உணர்த்தும் உணர்வாய் ஆன்மாக்களின் நெஞ்சக் கமலத்தில் உளன். வேத மாகிய கண்ணாடியைக் கொண்டு நோக்கின், அவன் சிறப்பாக

விளங்குவன். நீதியின்கண் நாடி அதன் வழி நினைந்து செயற்படும் மனத்தே நீதியுருவில் உளன். நல்லிசையாகிய கண்ணாடியிலும் செவி கருவியாக அவன் இயல்பை உணர்ந்து ஒன்றி நின்றேன்.

வி–கு: போது – நெஞ்சக் கமலம். பொதுவாக நெஞ்சக் கமலத்துள் இருப்பினும் வேதம், நீதி, கீதம் என்பவற்றால் பண்பட்ட உள்ளத்திற் சிறப்பாக உளன் என்பது கருத்து. வேறே – தனியாக, சிறப்பாக நீதிக்கண் நாடி என்க. (338)

**நாமமோ ராயிரம் ஓதுமின் நாதனை**
**ஏமமோ ராயிரத் துள்ளே இசைவீர்கள்**
**ஓமமோ ராயிரம் ஓதவல் லாரவர்**
**காமமோ ராயிரங் கண்டொழிந் தாரே. 2986**

க–து: இது சிவ வழிபாடும் அதன் பயனும் உணர்த்துகின்றது.

பொ–ரை: உடையானாகிய சிவபிரானை அவன்றன் ஆயிரந் திருநாமங்களை ஓதித் தூமலர் தூவி வழிபடுக நித்தலும்; பலவகையான பாதுகாப்புக்களையும் பெறுவீர்கள். திருநாமம் ஆயிரங் கணித்து ஓமம் வளர்த்து வழிபட வல்லார்கள் அளவற்ற விரும்பத்தகு பொருள்களையும் நுகர்ந்து, அவற்றின் விருப்பு நீங்குவர்.

வி–கு: ஏமம் – பாதுகாப்பு. காமம் – விரும்பப்படு பொருள். கண்டு – நுகர்ந்து. (339)

**போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகழ் ஞானத்தைத்**
**தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி**

**சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தைப்**
**போற்றுகின் றேன்எம் பிரானென்று நானே. 2987**

க–து: இஃது இறைவனைத் திருவருளால் உணர்தல் வேண்டும் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: உயர்ந்த நூல்களால் புகழப்படும் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகுதற்குக் காரணமான கலை ஞானத்தைப் போற்றிப் புகழ்வேன்; அது திருவருளின் அபர தடத்தமாகலின், அது கருவியாக முதல்வன் அடியாகிய திருவருளை அறிவின் கண் தெளிகின்றேன். அத் திருவருளோடு ஒன்றி நிற்கும் சிவ யோகமே யோகம். ஏனையவை அவயோகமே என்று உரத்திச் சொல்லி அறைசாற்றுகின்றேன். சிவனைக் கூடியின்புற்று, அவனே எம்மைப் பிறப்பு வீடுகளிற் பிறியாது உடனாய் நின்றுளன் என்று, அவன் உபகாரத்தை மறவாது பத்தியினால் ஏத்துகின்றேன்.

வி–கு: எம்பிரான் – எம்மைப் பிரியாதான். நான்கு அடிகளும் முறையே கலைஞானம் போற்றல், சிவதரிசனம், சிவ யோகம், சிவபோகமென்னும் படிநிலைகளைக் குறித்தல் காண்க. (340)

**நானா விதஞ்செய்து நாடுமின் நந்தியை**
**ஊனார் கமலத்தி னூடுசென் றப்புறம்**
**வானோ ருலகம் வழிப்பட மீண்டபின்**
**தேனார வுண்டு தெவிட்டலும் ஆமே. 2988**

க–து: இது வேறோராற்றால் முதல்வனைத் தலைப்படு மாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வனை அவன்றன் உருவம், அருவுருவம் (மந்திர வடிவம்) என்பவற்றை உணர்ந்து பற்றும் பலவகைப்பட்ட சிவதன்ம நெறிக்கண் நின்மின். பின் மூலம் முதலிய ஆதாரத் தாமரைகளை ஊடுருவிச் செல்லும் சிவயோக நெறி நின்மின்; அந்நெறியில், சான்றோர் தஞ்சிந்தையைச் செலுத்தும் உலகமாகிய சிவபோகம் காணப்பட, பயிற்சி வயத்தான் உலகில் மீண்டபின், சிற்றின்பமாகிய தூய தேனை அறவழி நின்று நிரம்பவுண்டு, அதுபோதுமென்று அமைந்து, வீட்டையே அவாவுதலும் எளிதிற் கைகூடும்.

வி–கு: இஃது இல்வாழ்வோர்க்குக் கூறியது. தேன் – உலகவின்பம்; தெவிட்டலுமாம் என்றமையின், அது பேரின்பத்திற்கு ஆகாது என்க. வானோர் – ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்; 'ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வானம் – வையத்தினணியதுடைத்து' என்னும் பொதுமறையைக் காண்க. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணமுங் காண்க. (341)

**வந்துநின் றானடி யார்கட் கரும்பொருள்**
**இந்திர னாதி இமையவர் வேண்டினும்**
**சுந்தர மாதர் துழனியொன் றல்லது**
**அந்தர வானத்தின் அப்புற மாமே.** 2989

க–து: இறைவன் தன் அடித் தொண்டர்க்கு உறுதுணை என்பது உணர்த்துகின்றது இது.

பொ–ரை: அரிய பொருளாகிய முதல்வன் தன் அடித் தொண்டு இயற்றுவார்க்கு உறுதுணையாய் வெளிப்பட்டு நின்றான். இந்திரன் முதலிய தேவர்கள் விரும்பித் தங்கினும் வானுலகம் அழகிய அரம்பையர் ஆரவாரமாவது ஒன்றன்றி நிலைத்தது அன்று; துன்பக் கலப்பில்லதும் அன்று. முதல்வன் திருவடியாகிய பேரின்பவுலகு வானுலகின் மேம்பட்டதாகும்.

வி–க: அந்தரவானம் – தனிமையான தேவர் உலகு. அப்புறம் – மேம்பட்டது; துழனி – ஒலி, ஆரவாரம், துழனி யொன்றல்லது என்னும் எச்சத்தொடர் கொண்டு முடிதற்கு ஏற்ற 'வேறு இல்லை' என்னும் பயனிலையை வருவித்துரைக்க. (342)

**மண்ணிற் கலங்கிய நீர்போல் மனிதர்கள்**
**எண்ணிற் கலங்கி இறைவ னிவனெனார்**
**உண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்துத்**
**தெண்ணிற் படுத்த சிவனவன் ஆமே.** 2990

க–து: தெளிந்த அறிவிற் சிவன் வெளிப்படுவன் எனலை ஓர் உவமையின் வைத்து உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ–ரை: மண்ணில் விழுந்த தண்ணீர் அதனியல்பாற் கலங்கி உள்ளதுபோல, மக்கள் தம் எண்ணங்களால் அறிவு கலங்கி முதல்வனது இருப்பை உணரார் ஆயினர்; உண்ணுதற்கு உரிய குளத்திற் கலங்கியுள்ள நீரை ஒரு குடத்தில் முகந்து ஓரிடத்து வைத்து, தேற்றாங்கொட்டையிட்டுத் தெளிவித்தாற் போல, சற்குரவன் தன் ஒரு மொழியால் அறிவைத் தெளிவிக்க. அம்மகன் சிவத்தைத் தன் அறிவிற்கண்டு சிவனாம்.

வி–க: தெண் – தெளிவிப்பது. அதிற்படுத்த – என்றது அதனாற்றெளிவிக்க என்றபடி; இது பொருளினும் இயைத்துக் கொள்ளப்பட்டது. (343)

**மெய்த்தவத் தானை விரும்பும் ஒருவர்க்குக்**
**கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்கும்**
**சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்கள்**
**அத்தனை நாடி அமைந்தொழிந் தேனே.** 2991

க—து: இஃது இறைவனை நாடிக்கண்டோர்க்கே அமைதியுண்டாம் என்பது உணர்த்துகின்றது.

பொ—ரை: பயன் கருதாது இயற்றப்படும் மெய்த் தவத்தின் பயனாக உள்ளவன்; தன்னை மறவாது அன்பு செய்வார்க்கு அங்கை நெல்லி என விளங்கி இன்பஞ் செய்யும் தூயோன்; உயிர்களுக்கு நன்னெறி உணர்த்தும் தேவதேவன் – இப் பெருமானை என்னறிவில் நாடிக் கண்டு அமைந்து செயலொழிந்தேன். (344)

**அமைந்தொழிந் தேன்அள வில்புகழ் ஞானம்**
**சமைந்தொழிந் தேன்தடு மாற்றமொன் றில்லை**
**புகைத்தெழும் பூதலம் புண்ணிய னண்ணி**
**வகைந்து கொடுக்கின்ற வள்ளலு மாமே.** 2992

க—து: இது முதல்வன் அருளால் ஆசிரியர் மெய்யுணர்வும் அதன் பயனும் பெற்ற திறன் உணர்த்துகின்றது.

பொ—ரை: காமம், வெகுளி, மயக்கம் என்பவை அடங்கிப் புதைந்து பின் எரிபோல் மூண்டு கேடு விளைக்கும் இந்நில உலகத்தில், ஆசான் வடிவில் எழுந்தருளிப் பொருட் பேற்றிகளை நிலையின, நில்லாத, உணராதன, உணர்வன, உணர்த்துவது என்றாற்போல வகை செய்த நூல் வடிவிற் கொடுக்கும் வள்ளலும் ஆவன் முதல்வன். அவன் அருளால் ஐயத்தின் நீங்கித் தெளிந்தேன். அறிவின் அளவிற் படாத புகழத் தக்க கலைஞானம் என் உள்ளத்தில் நிரம்பப் பெற்றேன். பல வகைப்பட்ட நூற்பொருள் பற்றி வரும் தடுமாற்றம் எனக்குச் சிறிதும் இன்றாயிற்று.

வி—கு: தடுமாற்றம் – நூற்பொருள் முடிபை மாறுபட உரைத்துக் கைதம்பித்த வியாதருக்கு உற்றது போன்ற ஐயமும் திரிபும். (345)

**வள்ளற் றலைவனை வானநன் னாடனை**
**வெள்ளப் புனற்சடை வேத முதல்வனைக்**
**கள்ளப் பெருமக்கள் காண்பர்கொ லோவென்று**
**உள்ளத்தி னுள்ளே ஒளித்திருந் தாளுமே. 2993**

க–து: இது முதல்வன் உள்குவார் உள்கிற்றை உள்ளிருந்து உணர்கிற்பன் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் வள்ளலுந் தலைவனும் ஆவன்; திருச்சிற்றம்பலம் என்னும் பரம வியோமத்தில் நின்று உயிர்களை நடத்துவோன்; உலகு அழியாதபடி நீர்ப்பெருக்கை அடங்கக் கொண்டவன்; மெய்ந்நெறியாகிய அறத்தையும் ஞானத்தையும் அருளிச் செய்தவன்; இவ்வியல்பினை உணராது தமக்கு ஓர் ஆற்றல் உளதென்று எண்ணி வாழ்வன உயிர்கள்; ஆதலின் அவை கள்ளப் பெருமக்கள். இத்தகைய தன்னை உயிர்கள் கண்டு அணைய வேண்டும் என்னும் பேரன்புடன் உயிர்களின் உள்ளத்தில் மறைந்திருந்து நடத்தி முடிவில் அவன் அவர்களை ஆட்கொள்ளும்.

வி–க: இரண்டன் உருபை இங்ஙனம் உள்ள தன்னை என வைத்து, அவன் என வருவித்து ஆளும் என்னும் பயனிலைக்கு எழுவாயாக்குக. ஐகாரங்கள் சாரியை எனினும் அமையும். முன் இரண்டடிகள் உயிர்களோடு முதல்வனுக்கு உள்ள உரிமையைத் தெரிவிக்கின்றன. (346)

**ஆளு மலர்ப்பதந் தந்த கடவுளை**
**நாளும் வழிபட்டு நன்மையுள் நின்றவர்**
**கோளும் வினையும் அறுக்குங் குரிசிலின்**
**வாளு மனத்தொடும் வைத்தொழிந் தேனே. 2994**

க–து: இஃது ஆசிரியர் உலக முகப்பட்டபோதெல்லாம் இறைவனை வழிபட்டும் அவன் கொடுத்த ஞானவாளை மனத்தின் கண் வைத்தும் அச்சமின்றி இருந்தமை கூறப்படுகின்றது.

பொ–ரை: உயிர்களைப் பொதுவாகவும் சிறப்பாகவும் ஆட்கொண்டருளும் தன் திருவடியாகிய திருவருளை விளங்கக் காட்டிய உலகங் கடந்த முதற் பொருளை அன்றாடம் வழிபட்டு, அவன் கூறிய அறத்தின்கண் வழுவாது நின்றவர்க்குக் கோட்சாரம் பற்றியும் முன்னை வினை பற்றியும் வரும் துன்பத் தொடரை அறுத்தற்குக் கருவியாகிய அச்சிறந்தோன் கொடுத்தருளிய ஞானவாளை மனத்தின்கண் வைத்தும் அச்சம் ஒழிந்தேன்.

வி–கு: வழிபட்டு வாளும் மனத்தின்கண் வைத்தும் (அச்சம்) ஒழிந்தேன் என முடிக்க. மனத்தொடு – உருபு மயக்கம். உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. வாள் – பாசத்தை அறுக்கும் ஞானம், அஃதாவது, அவன் செலுத்தச் செல்கின்றோம் என உணர்ந்து அருள்வழி நிற்கும் சாதகம். (347)

**விரும்பில் அவனடி வீர சுவர்க்கம்**
**பொருந்தில் அவனடி புண்ணிய லோகம்**
**திருந்தில் அவனடி தீர்த்தமும் ஆகும்**
**வருந்தி அவனடி வாழ்த்தவல் லார்க்கே. 2995**

க–து: இஃது அன்பர்க்கு முதல்வன் திருவடியே எல்லாப் பேற்றையும் அவர் வேண்டியவாறு கூட்டவல்லது என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: தவத்தான் மெய்வருந்திச் சிவனடியை முறைபபடி வாழ்த்தித் தொழவல்லார்க்கு, வேண்டின் அவன்

அடியே போர், கொடை என்பவற்றில் வாகை சூடியோர் எய்தும் வீரசுவர்க்கமாகும்; அத்திருவடியோடு ஒன்றின், அதுவே அவர்க்குப் புண்ணிய உலகும் ஆகும்; அங்ஙனம் ஒன்றி அவன் அருள்வழி நிற்பின், அதுவே மலமாக கழுவிப் பேரின்பம் ஊட்டும் புனித நீரும் ஆகும்.

வி—கு: சுவர்க்கம் என்பது மங்கலமான தொகுதி, திருக் கூட்டம், நிகழ்ச்சி, நுகர்ச்சி என்பவற்றையும் குறித்தல் கூடும். சு – நல்ல; வர்க்கம் – ஒரு நிகரனவாகிய பொருள்களின் தொகுதி. (348)

**வானக மூடறுத் தானிவ் வுலகினில்**
**தானக மில்லாத் தனியாகும் போதகன்**
**கானக வாழைக் கனிநுகர்ந் துள்ளூறும்**
**பானகச் சோதியைப் பற்றிநின் றேனே.** **2996**

க—து: இஃது ஆசிரியர் இன்பவொளியாகிய முதற் பொருளையே சார்பாகக் கொண்டிருந்தமையை உணர்த்து கின்றது.

பொ—ரை: முதல்வன் அயன் மால் இருவரும் காணாத படி ஆகாயத்தை ஊடறுத்துப் பேரொளிப் பிழம்பாக நின்றவன், இருவினை வயப்பட்டாரே உள்ள இவ்வுலகில் தான் வினைமாசு இன்றி விளங்கிய அறிவினையுடைய ஒப்பற்ற போதக ஆசிரியன். அவன்றன் மலைவாழைக் கனி போன்ற திருவடிப் பேரின்பத்தை நுகர்ந்து, அகத்தேயிருந்து பெருகும் அமுதவொளி யைச் சார்பாகப் பற்றினேன்; அசைவற்று நின்றேன்.

வி—கு: வானகம் ஊடறுத்தல் – எங்கும் தங்கி நின்றும் உயிர்களாற் பற்றப்படாமை. அகம் – வினை, மாசு. பானகம் –

இனிய உண்ணீர், அமுதம், பேரின்ப நுகர்ச்சியைத் தெவிட்டாது, தடையின்றி நுகரச் செய்வது; அதுவே சோதியாகவும் உள்ளது. ஞாயிற்றின் கதிர் ஒளியாக, வெப்பமாக, வேறுபல் கதிராக நின்று உயிர்களுக்கு ஊட்டம் தருவது போலத் திருவருளும் உள்ளது எனக் கொள்க. (349)

**விதியது மேலை அமரர் உறையும்**
**பதியது பாய்புனற் கங்கையும் உண்டு**
**துதியது தொல்வினைப் பற்றறு விக்கும்**
**பதியது வவ்விட்ட தந்தமும் ஆமே. 2997**

க—து: இஃது இறைவனுடைய தன்மைகளைக் கூறு கின்றது.

பொ—ரை: முதற்பொருள் உயிர்களை நடத்தும் விதியினையுடையது; இறவாத முத்தர் உறையும் பதியாகிய மாமாயையை உடையது; பாயும் புனல் வடிவக் கங்கையைத் தன் சடைக்கண் கரந்து வைத்துள்ளது. உரைப்பார் உரைக்கும் துதியெல்லாந் தனக்கே உரியதாகக் கொள்ளும் தன்மையது. துதிப்பவர்தம் பழவினைத் தொடக்கை நீக்கும் அருளையுடையது; முறை செய்து காப்பாற்றும் பதி (இறை)யும் அதுவே; என்னைக் கவர்ந்துகொண்டது; அதுவே எப்பொருட்கும் முடிவிடமும் ஆகும்.

வி—கு: விதி – ஊழ், ஆணையிடு; வவ்வுதல் – கவர்தல்; எப்பொருளையும் வசீகரித்தல் பற்றியே முதல்வன் சிவன், வசீ எனப்படுகின்றனன் என்பது ஓர்க. (350)

**மேலது வானவர் கீழது மாதவர்**
**தானிடர் மானுடர் கீழது மாதனம்**

**கானது கூவிள மாலை கமழ்சடை**
**ஆனது செய்யும்எம் ஆருயிர் தானே.** 2998

க–து: உயிர்க்குயிராம் முதல்வனே யாவர்க்கும் தஞ்சம் என்று உணர்த்துவது இப்பாட்டு.

பொ–ரை: எமக்கு அமையவேண்டிய நன்மைகளைச் செய்துவரும் எம் உயிரனைய முதற்பொருள் வானவர் மேலது; மாதவர்க்குச் சார்பாவது; உயிர்களுக்கு அறிவு பெருகுதற் பொருட்டு தானே இடர் விளைப்பது; மானுடர் வாழும் உலகிற்குக் கீழே உள்ளதும் சிறந்த செல்வமாவதும் தானே; அது வில்வ மாலை கமழும் சடைக்காட்டையுடையது.

வி–கு: ஆர் உயிர் – பிரிதற்கு அரிய உயிர். ஆருயிர் மானுடர் கீழது, கூவிளமாலை கமழ் சடைக்கானது – என முடிக்க.

கீழ் – முன்னையது சார்பு, பின்னையது கீழ் எல்லை; கான் – காடு. ஆனது – நன்மையானது, உறுதி செய்தல் – விளைத்தல், வளர்த்தல். (351)

**சூழுங் கருங்கடல் நஞ்சுண்ட கண்டனை**
**ஏழு மிரண்டிலும் ஈசன் பிறப்பிலி**
**யாழுஞ் சுனையும் அடவியும் அங்குளன்**
**வாழும் எழுத்தைந்து மன்னனு மாமே.** 2999

க–து: இஃது ஈசன் இயல்பு கூறுகின்றது.

பொ–ரை: நிலவுலகைச் சூழ்ந்துள்ள கரிய கடலில் எழுந்த ஆலகால நஞ்சை அடக்கிய கழுத்தை உடையவன் நம்

தலைவன்; மக்கள் முதல் நிலையியற் பொருள் வரையுள்ள உயிர்களின் ஏழு பிறப்பிலும் கட்டுநிலை, வீட்டுநிலை என்னும் இரண்டினும் தானே ஆள்பவன்; தனக்குப் பிறப்பில்லாதவன்; தன் இருக்கையாகிய திருக்கயிலையில் யாழ் இசைப்போரையும், சுனைகளையும், விலங்குகள் திரியும் காட்டையும் உடையன். பேரின்பத்து அழுந்தி வாழ்தற்குச் சாதனமாகிய திருவைந் தெழுத்தாற் குறிக்கப்படுவோனும் நிலைபெற்றோனும் அவன் ஆகும்.

வி–கு: கண்டனை – என்றதில் ஐ சாரியை எனினும் ஆம். ஆங்கு என்றது எற்புழிக்கோடல் பற்றித் திருக்கயிலையை உணர்த்தி நின்றது. ஆழும் சுனை என்றலும் ஒன்று. எழுத்தைந்தா வானும், மன்னனும் ஆம் என்க. (352)

**உலகம தொத்துமண் ஒத்துயர் காற்றை**
**உலர்கதிர் அங்கியொத் தாதிப் பிரானும்**
**நிலவிய மாமுகில் நீரொத்து மீண்டச்**
**செலவொத் தமர்திகைத் தேவர் பிரானே.** 3000

க–து: இது முதல்வன் எண்வகையாய்ப் புணர்ந்து நின்று உலகை நடத்துமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: முதற் பொருளாகிய தலைவன் உயிர்கள், மண், தன் கீழுள்ள பூதங்களின் உயர்ந்துள்ள காற்று, விரியும் கதிர்களையுடைய ஞாயிறுந் திங்களும், அங்கி, ஆகாயத்தில் நிலவும் சிறந்த முகிலின் வழி வரும் நீர் என்பவற்றில் அதுவதுவேயாகக் கலந்து ஒத்து நின்று (அவ்வவற்றைத் தோற்றுவித்து) மீண்டும் அவை ஒடுங்கும்போது அவ்வொடுக்கத் தினும் ஒத்து நிற்கும்; எண்திசைக் காவலர்க்கு முதல்வ னாவன்.

வி–கு: இனம் பற்றி ஆகாயமும் உடன்கொள்க. உலகம் – உயிர். அச்செலவு – அவற்றின் தோற்றம் ஒடுக்கம் நிகழ்தல் என்னும் செயல்கள். ஆதிப்பிரான் ஒத்து அமரும் திகைத்தேவர் பிரான் ஆவன் என்க. எனவே திகைத்தேவர் மாட்டும் அவன் புணர்ந்து கலந்து செலுத்துவன் என்பது பெறப்படும். (353)

**பரிசறிந் தங்குளன் அங்கி அருக்கன்**
**பரிசறிந் தங்குளன் மாருதத் தீசன்**
**பரிசறிந் தங்குளன் மாமதி ஞானப்**
**பரிசறிந் தன்னிலம் பாரிக்கு மாறே. 3001**

க–து: இறைவன் உயிர்களின் அகவிருள் நீக்குதற் பொருட்டு உலகப் படைப்பை மேற்கொண்டான் என்பது உணர்த்துவது இது.

பொ–ரை: அக இருளாற் பற்றப்பட்ட நிலமாகிய உயிரின் அறிவின் தன்மையை அறிந்து அதனை வளர்த்தற் பொருட்டு, ஆள்வோனாகிய முதல்வன், அங்கி, ஞாயிறு, காற்று, சிறந்த மதி என்பவற்றின் இயல்புகள் விளங்கியும் அடங்கியும் பயன்படுமாறு அறிந்து, அப்பொருள்களில் தங்கி நின்று தொழிற் படுத்துவானாய் உளன்.

வி–கு: அல் + நிலம் = அன்னிலம், அகவிருளுக்கு இடமாகிய உயிர். பாரித்தல் – வளர்த்தல். 'பாசமாம் பற்ற றுத்துப் பாரிக்கும் ஆரியனே' என்னும் சிவபுராண அடியில் அவ்வாட்சி காண்க. மாருதம் உபலக்கணமாகலின், ஏனைப் பூதங்களும் உடன்கொள்ளப்படும். பரிசறிதல் – இஃது இங்ஙனம் ஆக்கம் எய்தும் என்றறிந்து தன் அருளாணையானே அங்ஙனம் ஆக்கி நிற்றல்; இதுவேதங்களில் சத்திய சங்கற்பம் எனக் குறிக்கப்படும். (354)

**அந்தங் கடந்தும் அதுவது வாய்நிற்கும்**
**பந்த வுலகினிற் கீழோர் பெரும்பொருள்**
**தந்த வுலகெங்குந் தானே பராபரன்**
**வந்து படைக்கின்ற மாண்பது வாமே.** 3002

க–து: இஃது இறைவன் மாண்பு கூறுகின்றது.

பொ–ரை: எல்லாப் பொருள்களின் முடிவையுங் கடந்தவனாய் இருந்தும், அப்பொருள்களில் அது அதுவாய் நின்று அவற்றைச் செலுத்துவன்; இது விறகை ஆக்குவதும் அழிப்பதுமாகிய தீ, அதனையே இடமாகக் கொள்ளுதல் போலும். பிணிப்பைச் செய்யும் இவ்வுலகில், தன் அருளாணைக் கீழ் அடங்கி நிற்போர்க்குப் பெருவைப்பாக உள்ளவன்; தான் படைத்த உலகெங்குந் தானே முன்னும் பின்னுமாயினன். தன்னியல்பில் நின்ற சிவன் ஒருருவாய் ஈரியல்பினனாய் உலகை அமைத்தருளும் பெருமை அது ஆகும்; ஏனையர் ஒன்றைப் படைக்குங்கால் ஓரிடத்தில் இருந்து கருவிகளாற் பொருள்களைப் படைத்து அப்பொருள் நிற்கவும் தாம் அழிவர்; இவன் அன்னன் அல்லன் என்பது கருத்து; என்றது, தானே இடம், தன் நினைவே கருவி, எப்பொருளும் தன் கண் தோன்றித் தன் கண் மாயும், கடற்கண் உண்டாகும் திரை நுரை அலை போல என்றபடி. மேலும் ஓர்ந்து உணர்ந்து கொள்க. (355)

**முத்தண்ட வீரண்ட மேமுடி யாயினும்**
**அத்தன் உருவம் உலகே ழெனப்படும்**
**அத்தனின் பாதாளம் அளவுள்ள சேவடி**
**மத்தர் அதனை மகிழ்ந்துண ராரே.** 3003

க–து: இஃது இறைவன்றன் உலகவுருவை உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வனுக்கு முத்தர் அண்டம் எனப்படும் ஞான ஆகாயமே முடியாம். ஆயினும், அவன் உரு ஏழுலகு எனவும் படும். அவன்றன் செம்மையான அடிகள் பாதாளம் ஏழினுக்குங் கீழே செல்லும் அளவுள்ளவை. உன்மத்தராகி உலகர் அவ்வுருவை ஓர்ந்துணர்ந்து இன்புற்றார்.

வி–கு: முத்தர் அண்டம் – முத்தண்டமாயிற்று; முத்தர் உணர்வு தங்கும் இடம்; அது மோன பரானந்தம். வீர அண்டம் – ஞான ஆகாயம். வீரம் – ஞானம், துணிவு அல்லது வலியைத் தருவது; அண்டம் – ஆகாயம். முத்தர் அண்டு அ வீர அண்டம் என்றலும் ஒன்று.

**பரையுயிரில் யானெனதென் றறநின்ற தடியாம்**
**பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த்**
**தோன்றலதுமுகமாம்**
**உரையிறந்த சுகமதுவே முடியாகும் என்றங்கு**
**உண்மையினை மிகத்தெளிந்து பொருள்**
**வேறொன்றின்றித்**
**தரைமுதலிற் போகாது நிலையினில் நில் லாது**
**தற்பரையில் நின்றழுந்தா தற்புதத்தி னாகும்**
**தெரிவரிய பரமானந் தத்திற் சேர்தல்**
**சிவனுண்மைத் தெரிசனமாய்ச் செப்பும் நூலே**

என்னும் உண்மை நெறி விளக்கச் செய்யுளும்,

**உலகமே யுருவ மாக யோனிகள் உறுப்ப தாக**
**இலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கரண மாக**
**அலகிலா வுயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி ஐந்து**
**நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன்.**

என நுண் ஐந்தொழில் உணர்த்தும் சிவஞான சித்தித் திருவிருத்

23 தமும் புடைபட வைத்து நோக்கத்தக்கவை.

அத்தனின் சேவடி பாதாளம் அளவுள்ள – என மாற்றி உரைக்க. உள்ள – உள்ளன; மகிழ்ந்துணராரே என்பதை உணர்ந்து மகிழாரே எனச் சொல்நிலை மாறுக. (356)

**ஆதிப் பிரானம் பிரானவ் வகலிடச்**
**சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கும்**
**ஆதிப் பிரான் அண்டத் தப்புறங் கீழவன்**
**ஆதிப் பிரானடு வாகி நின்றானே.** 3004

க–து: இதுவுமது.

பொ–ரை: முன்னவனே நம் தலைவன்; காணப்படும் அகன்ற இடத்திற்கு ஒளிதரும் பேரொளியாய் உள்ளவன்; ஞாயிறு மதி அங்கி என்பவற்றிற்கு ஒளி தருவோன்; ஆதிசத்தி யோடு உடனமர் பெருமான்; அண்டத்தின் மேலும் கீழும் நடுவுமாக யாங்கணும் நிறைந்துள்ளான்.

வி–கு: நடுவாகி நிற்றல் இதயத்தானத்து அமர்தலும் ஆம்; திருத்தில்லையை எண்ணுக. (357)

**அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன்**
**பிண்டங் கடந்த பிறவிச் சிறுமையன்**
**தொண்டர் நடந்த கனைகழல் காண்டொறும்**
**தொண்டர்கள் தூய்நெறி தூங்கிநின் றாரே.** 3005

க–து: இது திருக்கூத்தின் பெருமை உணர்த்துகின்றது.

பொ–ரை: சிவபிரான் அண்டங்களைத் தன்னகங் கொண்டு மேல் ஓங்கி உயர்ந்த பெருமையன்; பிண்டத்திற் பிறத் தலைக் கடந்த மிகு நுண்ணியன்; அடியார் தியானித்து வரும்

அவன் நடஞ் செய்த ஒலிக்கும் வீரக்கழலைக் காணுந்தோறும் அத் தொண்டர்கள் அருள்நிலையைத் தலைப்பட்டுச் சிவபோகத்தில் தங்கிப் பேரின்பம் எய்துவர்.

வி–கு: பெருமையனும் சிறுமையனுமாகிய அவன் நடந்த கழலைக் காண்டோறும் தொண்டர்கள் தூங்கி நின்றார் என முடிக்க. நடத்த என்பது பாடமாதல் கூடும்.

**அண்ண லார்தமக் களித்த மெய்ஞ் ஞானமே**
**யானவம் பலமுந்தம்**
**உண்ணி றைந்தஞா னத்தெழு மானந்த**
**வொருபெருந் தனிக்கூத்தும்**
**கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங்**
**களிப்பொடுங் கடற்காழிப்**
**புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவார்**
**புனிதரா டியபொற்பு.**

**உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை**
**ஒழிவின்றி உருவின்கண்**
**அணையு மைம்பொறி அளவினும் எளிவர**
**அருளினையெனப் போற்றி**
**இணையில் வண்பெருங் கருணையே யேத்திமுன்**
**எடுத்தசொற் பதிகத்திற்**
**புணரு மின்னிசை பாடின ராடினர்**
**பொழிந்தனர் விழிமாரி.**

எனத் திருத்தொண்டர் புராணத்தில் திருஞானசம்பந்தர் திருக் கூத்தாற் பெற்ற அனுபவங் கூறப்பெறுதல் காண்க. (358)

**உலவுசெய் நோக்கம் பெருங்கடல் சூழ**
**நிலமுழு தெல்லாம் நிறைந்தன னீசன்**
**பலமுழு தெல்லாம் படைத்தனன் முன்னே**
**புலமுழு பொன்னிற மாகிநின் றானே.** 3006

க–து: இது முதல்வன் திருமேனி பொன்னிறமாதல் கூறுகின்றது.

பொ–ரை: பல பொருள்களையும் நிலவுவித்தலும் அழித்தலும் செய்யும் முதல்வனது திருநோக்கம் பெருங்கடல் களில் சூழ்வதாக நிலமுழுதும் மற்றெங்கணும் நிறைந்துளன். பலவாகிய எல்லாவற்றையும் முன்னர் முழுவதும் தானே படைத்தனன். நல்லோர் அறிவிற்றங்கி அவரைப் பண்படுத்தும் பொன்னிறம் உடையோன் அவன்.

வி–கு: உலவு – உலாவுதல், உலத்தல்: இரட்டுற மொழிந்து காத்தலும் அழித்தலும் கொள்க; படைத்தல்பின் எடுத் தோதப்பட்டது. புலம் உழு எனப் பிரிக்க. புலம் – அறிவு; உழுதல் – பண்படுத்தல்; நோக்கம் கடல் சூழ நிறைந்தனன் என்க. கடல் – ஆக்கப்பாட்டைத் தருவதோடு அழித்தலும் செய்வதாதல் ஓர்ந் துணர்க; தான் அவ்வப் பொருள்களை இயக்குமாற்றால், அவற்றின் வேறு காணப்படாது செயல் செய்வன் என்பது கருத்து. உணர்வுசெய் நோக்கம் என்னும் பாடத்திற்கு உணர்வைப் பெருக்கும் திருநோக்கம் என உரைக்க. (359)

**பராபர னாகிப்பல் லூழிகள் தோறும்**
**பராபர னாயிவ் வகலிடந் தாங்கித்**
**தராபர னாய்நின்ற தன்மை யுணரார்**
**நிராபர னாகி நிறைந்துநின் றானே.** 3007

க–து: இது முதல்வன் ஆதியும் அந்தமும் ஆனவன் என்பது கூறுகின்றது.

பொ–ரை: முதல்வன் உலகத்தின் முடிவு வரும் காலமாகிய பல ஊழிகள்தோறும் தானே முன்னும் பின்னும்

உள்ளோனாய், மேலான பொருள்களுக்கும் மேலானவானய் இவ் வுலகிற்குச் சார்பாயிருத்தலின் உலகிற்குத் தலைவனாய் நிற்குந் தன்மையை உலகர் உணர்ந்து அறிவதில்லை. அவன் எல்லாம் ஒடுங்கிய காலத்து வலியுள்ள அறம் நிலைபெறற் பொருட்டு அதனை ஆனேறாகக் கொண்டு ஊர்வோனாய அவ்வற வடிவில் எங்கும் நிறைந்து நின்றான்.

நிர் ஆபரன் எனப் பிரிக்க. நிர் – துணிவுப் பொருள் உணர்த்திற்கு. ஆ– ஆன். நிர் அபரன் என்பது நிராபரனென விகாரப்பட்டதெனக் கொண்டு, தானே பின்னவனாய் எஞ்சி நிற்பவன் எனினும் பொருந்தும். (360)

**போற்றும் பெருந்தெய்வந் தானே பிறரில்லை**
**ஊற்றமும் ஓசையும் ஓசை யொடுக்கமும்**
**வேற்றுடல் தானேன் றதுபெருந் தெய்வமாம்**
**காற்றது வீசன் கலந்துநின் றானே.** 3008

க–து: இஃது இறைவன் எல்லாமாய்க் கலந்து நிற்றல் கூறுகின்றது.

பொ–ரை: யாவரானும் ஏத்தப்படும் பெருந்தேவன் சிவபிரானே அன்றிப் பிறர் அல்லர்; யார்க்கும் எவற்றிற்கும் சார்பும், ஓசையால் உணர்வும் இயக்கமும் தருபவனும், ஓசை யொடுங்கும் இடத்திற் காணப்படுவோனும், உயிர்க்கு வேறாகிய உடலைப் படைத்துக் கொடுத்தபின், அது தனதே என்னந் தக்க வனும், காற்றின் அதிதெய்வம் எனப்படும் ஈசனுமாய் எங்குங் கலந்து நின்றான்.

வீசன் – வித்தெழுத்தானவன் என்றலும் ஆம்.

வி–கு: மண்முதல் ஐம்பூதத்திற்கு அதிதெய்வம் முறையே அயன், அரி, அரன், ஈசன், சதாசிவன் என்பதை நினைப் பிப்பது காற்றது ஈசன் என்னுந் தொடர். வீசன் – வித்தாகியோன் என்றலும் ஒன்று.

ஓசை – அறிவை விளக்கும் நாதத்தையும் பொருள்களை மாற்றம் அடையச் செய்யும் அலை வினையும் உணர்த்தி நின்றது. (361)

**திகையனைத் துஞ்சிவ னேயவ னாகின்**
**மிகையனைத் துஞ்சொல்ல வேண்டா மனிதரே**
**புகையனைத் தும்புறம் அங்கியிற் கூடு**
**முகையனைத் துமெங்கள் ஆதிப் பிரானே.** 3009

க–து: இதுவுமது.

பொ–ரை: மக்களே! எத்திசையினும் சிவன் பெரு மையே நிலவுகின்றது. உபாசனையால் ஒருவன் அவனாகின் (அவன் குணங்கள் தன்பால் மேம்படுமாறு ஒன்றி இடனாகி அடங்கின்), வேறு சாதகம் அனைத்தும் மிகையாம்; வேறு கூற வேண்டா. புறத்திற் காணப்படும் புகையனைத்தும் வெளிப்படா துள்ள அங்கியைத் தனக்கு முதலாகக் காண அதன்கண் அடங்கும்; அதுபோல, அரும்பியுள்ள (தோன்றியுள்ள) எல்லாப் பொருளும் எங்கள் முதல்வனையே முதலாக உடையன.

வி–கு: 'எல்லாஞ் சிவனென்ன நின்றாய் போற்றி' என்னுந் திருத்தாண்டகத் தொடர் காண்க. அவன் ஆகின் என்பதற்கு, அச்சிவனே எல்லாஞ் செய்வித்தும் செய்தும் தானேயாய் நிற்பின், மற்றுக் கூறுவன எல்லாம் மிகை என்றுரைப் பினும் அமையும். (362)

**அகன்றான் அகலிடம் ஏழுமொன் றாகி**
**இவன்றா னெனநின் றெளியனு மல்லன்**
**சிவன்றான் பலபல சீவன மாகி**
**நவின்றான் உலகுறு நம்பனு மாமே. 3010**

க–து: இதுவுமது.

பொ–ரை: இடம் அகன்ற உலகேழும் தானே என்னும் படி ஒன்றாகி விரிந்து நிறைந்தான் முதல்வன். இம் முதல்வன் தனக்கொரு துணையின்றித் தான் தனியனாயினும் ஆற்றலிற் குறைந்தவன் அல்லன். எல்லாவற்றையும் தன்கண் ஈர்த்து நிற்கும் இச் சிவன் பலவேறு வகைப்பட்ட உயிர்களிடத்தும் கலந்து அவையேயாய்ப் பயின்றுளன். உயிர்களுக்கு உற்ற அன்பனும் ஆவன்.

வி–கு: நம்பன் – அன்பன். நம்பு – அன்பு. நம்பு மேவு 'நசை யாகும்மே' என்பது தொல்காப்பியச் சூத்திரம். தான் என நின்றும் எளியன் அல்லன் என உம்மையைப் பிரித்துக் கூட்டுக.
(363)

**கலையொரு மூன்றுங் கடந்தப்பால் நின்ற**
**தலைவனை நாடுமின் தத்துவ நாதன்**
**விலையில்லை விண்ணவ ரோடும் உரைப்பன்**
**நரையில்லை யுள்ளுறு முள்ளவன் றானே. 3011**

க–து: இது முதல்வனை அகத்தே நாடும்படி வலியுறுத்து கின்றது.

பொ.ரை: மக்களே! அருணூல், ஆரணம், அல்லது என மூவகைப்படும் கலைகளின் எல்லையைக் கடந்து நிற்போன்

தலைவன். அவனை நாடி அறிமின். அவன் எல்லாத் தத்துவங் களுக்கும் இறைவன்; அவனை நாடுதற்கு விலைகொடுக்க வேண்டா; விலையிற் பெறப்படுவானும் அல்லன். திருச்சிற்றம் பலத்தைக் கண்ட அன்பரோடு அவன் அளவளாவுவோன் ஆவன்; அங்குக் கண்டவர்க்கு நரை, திரை, மூப்பு இல்லையாம். என்றும் உள்ள, அவன் உள்ளே நெஞ்சக் குகையில் உறுவன்.

வி–கு: கலையொரு மூன்று தந்திரம், மந்திரம், உபதேசம் எனினும் ஆம். (364)

**படிகால் பிரமன் செய்பாசம் அறுத்து**
**நெடியான் குறுமைசெய் நேசம் அறுத்துச்**
**செடியார் தவத்தினிற் செய்தொழில் நீக்கி**
**அடியேனை உய்யவைத் தன்புகொண் டானே. 3012**

க–து: இஃது ஆசிரியர்க்கு இறைவன் அருளிய பெருமை உணர்த்துகின்றது.

பொ–ரை: உலகத்தைப் படைத்த அயன் செய்தியால் மூல மலத்தை அறுத்து, மாயோனது உலகை உண்ணச் செய்யும் செய்தியால் உலகின் மேற்செல்லும் அவாவை நீக்கி, ஒளி பொருந்திய சிவபுண்ணியமாகிய மெய்த்தவத்தால் இருவினை யொப்பு நிகழச் செய்து தனக்கு அடிமையாக்கி என்னைப் படி முறையான் உய்வித்து என் அன்பை வளர்த்துத் தனக்கே உரிய தாக்கி அதன் பயனாகப் பேரின்ப நுகர்ச்சியை எனக்குக் கொடுத் தருளினன் முதல்வன்.

வி–கு: செடி – ஒளி; செய் – செய்தி, முதனிலைத் தொழிற்பெயர். இஃது எல்லாவுயிர்க்கும் பொருந்தும். செய் என்னும் பெயரெச்சங்கள் ஏதுப் பெயர் கொண்டு முடிந்தன என

வைத்து, படைத்தற்கேதுவாகிய பாசம் குறுமை செய்தற்கு ஏது வாகிய நேசம் என்றுரைப்பினும் அமையும். நேசம் – மாயை யாகிய மலத்தைக் குறித்தல் அறிக. குறுமை செய்தல் – அறிவைச் சுருக்கி அதுவாய் அழுந்தச் செய்தல். (365)

**ஈசனென் றெட்டுத் திசையு மியங்கின**
**ஓசையி னின்றெழு சத்த முலப்பிலி**
**தேசமொன் றாங்கே செழுங்கண்ட மொன்பதும்**
**வாச மலர்போல் மருவிநின் றானே.** **3013**

க–து: இஃது உலகனைத்தும் சிவன் ஆணையின் நடக்கும் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: எப்பொருளும் ஆக்குவான் ஈசனே என்னும் அடிப்படை உணர்வால் எல்லாத் திசையிலும் உலகம் நடைபெறு கின்றது. நாத தத்துவத்தினின்று தோன்றும் சத்தப் பிரபஞ்சமும் (ஒலியுலகும்), அத்தன்மைத்தே: என்றுங்கெடாத இயல்பின னாகிய அவ்வீசனது ஒளி (தேசம்) ஒன்றே: ஆயினும், அதன் தொழிற்பாட்டின் வேற்றுமை பற்றி ஒன்பதாகப் பிரிந்து இயங்கும் வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சருவபூத தமனி, மனோன்மணி என்னும் சத்தி வேறுபாடுகளும் தானும், மலரும் அதனின் வேறன்றாகிய வாசமும் போலத் தாதான்மியமாய் நின்று, எண்டிசைப் பொருள்களிலும் அத்துவிதமாய்க் கலந்து நின்றான்.

வி–கு: 'உலகெலாமாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி' என்னும் சிவஞான சித்தி காண்க. தாதான்மியம் – ஒன்றன் இருமை, அவயவ அவயவி, குணகுணிபோல, அத்துவிதம் – இரண்டன் ஒருமை, கண்ணொளியும் ஆன்ம அறிவும், பொருள் களின் உருவமும் ஒளியும் போல. விரிவு சிவஞான பாடியத்திற்

கண்டு கொள்க. சத்தமாய் உள்ள உலப்பிலி எனக் கூட்டலும் ஒன்று; சத்தம் – ஞாபக சத்தி. (366)

**இல்லனும் அல்லன் உளனல்லன் எம்மிறை**
**கல்லது நெஞ்சம் பிளந்திடுங் காட்சியன்**
**தொல்லையன் தூயன் துளக்கிலன் தூய்மணி**
**சொல்லருஞ் சோதி தொடர்ந்துநின் றானே.** 3014

க–து: இஃது இறைவன் இயல்பைத் தொகுத்துணர்த்து கின்றது.

பொ–ரை: முதல்வன் உலகர் உணர்விற்கு எட்டா மையின் இல்லன்; ஆயினும், மெய்யுணர்ந்து அவாவற்றார்க்கு விளங்குதலின் உளன்; இவ்வாறாகலின் அவன் இல்லனும் அல்லன். உளனல்லன். கல்போன்ற நெஞ்சத்தில் மறைந்திருந்து, அதனை உருகச் செய்து அன்பே இன்ப ஒளியாக, முத்துப் போல் அதனைப் பிளந்துகொண்டு வெளிப்படும் திருவுருவினன். அவன் பழையோன், மலமாசு நீங்கினவன், அசைவற்றவன், தூயமணி போன்றவன், சொல்லுதற்கு அரிய பேருணர்வு வடிவினன்; அவன் உயிர்களின் உள்ளும் புறம்புமாக அவற்றைத் தொடர்ந்து தோன்றாத் துணையாய் நின்றுளன்.

**உள்ளத் தொடுங்கும் புறத்துளும் நானென்னும்**
**கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும்**
**வள்ளற் பெருமை வழக்கஞ்செய் வார்கள்தம்**
**அள்ளற் கடலை அறுத்துநின் றானே.** 3015

க–து: இது பிறப்பு நிலையில் முதல்வன் உயிர்கட்கு மறைந்து உள்நிற்பினும் மெய்யுணர்ந்தோர் வாய்மொழியான் தெளிந்து வழிபடுவோர்க்கு வெளிப்பட்டுப் பிறவியை அறுக்கும் என்பது உணர்த்துகின்றது.

பொ—ரை: கொன்றைமலர் வாசம் கமழும் சடைமுடிப் பரமன் உயிர்களின் உள்ளத்தில் தான் தோன்றாது மறைந்திருந்து அவற்றைச் செலுத்தும்; அவை புறத்தே நானே என முனைந்து செயல்படவும் விட்டு அச்செயல்களின் பயனை அவற்றிற்கே நுகர்விக்கும். இங்ஙனமாகலின் முதல்வன் உயிர்களுக்குத் தன்னைக் காட்டாத கள்ளத்தலைவனாயிருக்கும்; இனி, இங்ஙனம் அவன் பந்தத்தைத் தருவதும் உயிர்களின் மலநோய் தீர்தற்பொருட்டே யாகலின், அவன பெருங் கொடையாளனே ஆவான். அவன்றன் இப்பெருமையை உணர்ந்து, அவன் நூல் களில் விதித்தபடி ஒழுகி வருவார்க்குப் பின் தன்னையும் அவர் களது இயல்பையும் விளங்கச் செய்து பிறவியாகிய சேற்றுக் கடலை நீந்தும்படி, காரணமாகிய பாசத்தை அறுத்தருள்வன்.

மூன்றாம்அடி ஈற்றுச்சீரை வாணுதல் எனப் பாடங் கொள்வாரும் உளர். (368)

**மாறெதிர் வானவர் தானவர் நாடொறும்**
**கூறுதல் செய்து குரைகழல் நாடுவர்**
**ஊறுவர் உள்ளத் தகத்தும் புறத்துளும்**
**வேறுசெய் தாங்கே விளக்கொளி யாமே.** 3016

க—து: இறைவன் தன் நலங் கருதாது அன்பு செய்வார்க் குத் தன்னை விளக்குவன் என்பது உணர்த்துகின்றது இது.

பொ—ரை: மாறுகொண்டு எதிர்த்து நிற்போராகிய தேவர்களும் அசுரர்களும் தாம்தாமே நலன் பெறவேண்டும் எனக் கருதி இறைவன் பொருள்சேர் புகழ்கூறி அவன்றன் ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடியை நாடி வழிபடுவர். இனி, அஃங்ஙனமன்றி உள்ளத்து அன்பு ஊற்றெடுத்து நிற்கும் அன்பர்தம் அகத்தும் புறத்தும், செம்பைப் பொன்னாக்குமாறு

போல மாசு நீக்கித் தூய்மை செய்து ஒளிவளர் விளக்காய்ச் சுடர்விடுவன் முதல்வன்.

எனவே, முன்னையோர்க்கு வெளிப்படாது நின்று வேண்டியது முடிப்பன் என்பதும் குறிப்பெச்சத்தாற் கொள்ளப் படும். (369)

**விண்ணிலும் வந்த வெளியிலன் மேனியன்**
**கண்ணிலும் வந்த புலனல்லன் காட்சியன்**
**பண்ணினில் வந்த பயனல்லன் பான்மையன்**
**எண்ணிலா னந்தமும் எங்கள் பிரானே.** 3017

க–து: இறைவன் அருளொளி இன்பு உருவினன் என்பது உணர்த்துகின்றது இது.

பொ–ரை: எம் தலைவனாகிய சிவபிரான் உலகமே உருவாக உள்ளவன். ஆதலால் ஆகாயத்தினும் வெற்றிடம் என்பது இல்லாது நிறைந்தவன் தலைப்பட்டுக் காணுதற்குரிய பொருளாயினும் கண் முதற் பொறிகளுக்கு விளங்கும் புலன்கள் அல்லன். அவனியல்பு மக்கள் தம் கற்பனையாற் பண்ணுதலால் வந்த பயன் அன்று. தனக்கே உரிய தனிப் பெரும் தன்மையன் அவன். அளவிட்டு அறிய வாராத பேரின்பமே அவன்.

**உத்தமன் எங்கு முகக்கும் பெருங்கடல்**
**நித்திலச் சோதியன் நீலக் கருமையன்**
**எத்தனை காலமும் எண்ணுவ ரீசனைச்**
**சித்தர் அமரர்கள் தேர்ந்தறி யாரே.** 3018

க–து: இது செருக்கின்றிப் பணிவார்க்கு அருள்பவன் சிவபிரான் என்பது கூறுகின்றது.

பொ–ரை: முதல்வன் தன்னையடைந்தார் வினை தீர்த்து இன்பங்கள் தரும் தலையாயவன்; தாழ்வுடையார் யாண்டும் உள்ளத்தால் முகந்து பயன்பெறவுள்ள ஆனந்தப் பெருங் கடலாக வுளன்; அவன்றிருமேனி முத்தன்ன தெளிபளிங்கின் பேரொளி யும் நீலக்கருமையும் கலந்தால் ஒப்ப அம்மையப்பர் உருவாம். தம் முயற்சியைக் கொண்டு சித்தர்களும் தேவர்களும் அளவில் காலமாக எண்ணியறியினும் அவர்களால் அவனை அறியக் கூடவில்லை. (371)

**நிறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் ஈசன்**
**அறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் இன்பம்**
**மறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் பாவம்**
**புறம்பல காணினும் போற்றகி லாரே.** 3019

க–து: இது வழிபடும் மக்கள் தகுதிக்கும் விருப்பிற்கும் ஏற்றபடி இறைவன் திருமேனி கொள்வன் என்பது உணர்த்து கின்றது.

பொ–ரை: மக்கள் உள்ளத்தைக் கவரும் நிறங்கள் பலவாயினாற்போல அவர்தம் தகுதிக்கும் விருப்பத்திற்கும் ஏற்றபடி முதல்வன் நிறமும் வடிவும் கொள்வன்; அறவினை மக்கள்தம் மனப்போக்கிற்கு ஏற்றபடி பலரால் பலபடி மேற்கொள் ளப்படும்; அதற்குத் தக்கபடி அதன் பயனாகிய இன்ப நுகர்ச்சியும் அளவாலும் சாதனத்தாலும் வேறுபடும்; விதிவழி நில்லாமையும் விலக்கிய ஓம்பாமையுமாகிய மறநினைவு மொழி செயல்களும் மக்கள் தோறும் வேறுபடும்; அவ்வேறுபாட்டிற்கேற்றபடி அதன் பயனாகிய பாவமும் துன்பமும் உருக்கொண்டு அவர்பால் வரும். இதனான், கடவுளது உருவம், வழிபாட்டு முறை முதலிய புறச்செயல்கள் பலவாகக் காணப்படினும், அறிவில் மக்கள் யாதேனும் ஒரு முறை பற்றி இறைவனைப் போற்றமாட்டாமை இரங்குதற்கு உரியது. (372)

வி–கு: நிறம் – நினைவு.

**இங்குநின் றானங்கு நின்றன னெங்குளன்**
**பொங்கிநின் றான்புவ னாபதி புண்ணியன்**
**கங்குல்நின் றான்கதிர் மாமதி ஞாயிறு**
**எங்குநின் றான்மழை போலிறை தானே.** 3020

க–து: இஃது இறைவன் குறைவிலா நிறைவு உணர்த்து கின்றது.

பொ–ரை: இறைவன் உலக முதல்வன்; அணிமை யினும் சேய்மையினும் எவ்விடத்தும் மிகுந்து நின்றுளன்; அறப்பயனாயுள்ளவன்; இரவினும் நிலவுக்கதிர் மதியினும் ஞாயிற்றினும் மேகத்தைப் போல் தண்ணருள் செய்வோனாய் எப்பொருளினும் உளன்.

**உணர்வது வாயுமே யுத்தம மாயும்**
**உணர்வது நுண்ணறி வெம்பெரு மானைப்**
**புணர்வது வாயும் புல்லிய தாயும்**
**உணர்வுட லண்டமு மாகிநின் றானே.** 3021

க–து: இதுவுமது.

பொ–ரை: எம் தலைவன் உயிர்களோடு கலந்து நின்ற பொருளாயும், அவ்வுயிர்கள் விரும்பி நுகரும் புன்மையுள்ள உலகப் பொருள்களாயும், உணர்வுக்கு இடனாகிய உடலாகிய பிண்டமாகவும், அண்டமாகவும் உளன்; தலையான பொரு ளாகியும் உணர்வே வடிவாகியும் நின்ற அவனை உணர்வதே நுண்ணறிவாகும்.

வி–கு: இறைவன் எம்பெருமான் எல்லாமாகி நின்றமை யான், அதனையுணரும் உத்தம நிலையுடைய தாய், களங்கமில் உணர்வாய் அவனை உணர்வதே நுண்ணறிவு ஆகும்; புறப் பொருளை எவ்வளவு கூர்ந்து ஆய்ந்து அறியினும் அது நுண்ணறிவு எனப்படாது என்பது கருத்தாகக் கொள்க.

புணர்வது – கரணம்: உடற்சார்பாய் வந்து கூடும் பொருள்களும் உறவினரும் எனினும் அமையும். புல்லிது – நுகர்ச்சிப்பொருள். (374)

**தன்வலி யாலுல கேழுந் தரித்தவன்**
**தன்வலி யாலே அணுவினுந் தானொய்யன்**
**தன்வலி யான்மலை எட்டினுந் தான்சாரான்**
**தன்வலி யாலே தடங்கட லாமே. 3022**

க–து: இது முதல்வன் சத்தியோடு உடனாகியோன் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் ஏழுலகையும் நிலையிற் கலங் காது அமைத்தவன்; அணுவிற்கு அணுவென்னும் நுண்ணியன்; மலை எட்டும் அவனே எனப்படினும் அவற்றாற் பற்றப்படாது உளன்; அவன் விசாலமான கடல்போல் நின்று திரையும் நுரையும் அலையும் பிறவும் தன் கண் தோன்றி நின்று தன் கண் ஒடுங்கி நிற்றல் போன்று எல்லாப் பொருட்கும் ஆதியும் நடுவும் முடிவு மாகி நிற்போன் இவ்வனைத்தும் அவனுக்கு அவன்றன் அருட் சத்தியால் உள்ளனவாம்.

வி–கு: வலி – சத்தி, அருளாற்றல். (375)

**ஏனோர் பெருமைய னாகிலு மெம்மிறை**
**ஊனே சிறுமையுள் உட்கலந் தங்குளன்**

**வானோ ரறியும் அளவல்லன் மாதேவன்**
**தானே அறியுந் தவத்தின் அளவே.** 3023

க–து: இஃது இறைவன் உளம்புகுந்து உயிர்கள் செய்யுந் தவத்தின் அளவு அறிந்து அறிவிக்கும் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: எமக்கு இறைவனாகிய சிவபிரான ஏனை யாவரும் வணங்கும் பெருமையுடையனாயினும் நிலாவாத புலால் உடம்பாகிய சிறியதன்கண் நிலையில்லாத நெஞ்சத்திற் கலந்து அங்கிருக்கும் தண்ணளியுடையான்; மேலான உறுதி பெறுதற்கு யாவரானும் தொழப்படுந் தன்மையுள்ள பேரொளி யாகிய அப்பெருமான் வானவரும் அறியவொண்ணாத எல்லையில் உள்ளவன்; அவன் தானே உயிர்களின் அறிவுக் கறிவாய் நின்று அவை செய்யுந் தவத்தின் அளவறிந்து அதற்குத் தக்க பயன் தருவன்.

வி–கு: வணங்கும் என்னும் ஒரு சொல் வருவித்து உரைக்க. அறியும் என்னும் வினை அதன் பயன் குறித்து நின்றது. (376)

**பிண்டாலம் வித்தில் எழுந்த பெருமுளை**
**குண்டாலங் காய்த்துக் குதிரை பழுத்தது**
**உண்டனர் உண்டார் உணர்விலா மூடர்கள்**
**பிண்டத்துட் பட்டுப் பிணங்குகின் றார்களே.** 3024

க–து: மக்கட் பிறப்பின் பயன் முதல்வனை வழிபட்டுப் பற்றற்று இறைவன் திருவடிப் பேரின்பந் துய்த்தல் என்பது உணர்த்துகின்றது இப்பாட்டு.

பொ–ரை: உடம்பாகிய சிறிய ஆலம் வித்தில் தோன்றும் சிவ வழிபாடாகிய பெருமைசேர் மூளை ஆழ்ந்த உலக வெறுப்பாகிய காய் காய்த்து, திருவடியின்பமாகிய மாங்கனி யாய்ப் பழுத்தது. அவ்வாற்றால் அதனைப் பெற்று நுகர்ந்த பெரு மக்கள் நுகர்ந்து உய்ந்தனர். அதனை உணரும் ஆற்றலில்லாத அறிவிலிகள் உடம்பிற் கட்டுண்டு அம்முறையால் உறுதி பெற மாட்டாது மாறுபடுகின்றனர்.

வி–கு: பிண்டம் – உடம்பு. அஃது ஈண்டு உள்ளத்தைக் குறித்து நின்றது. பிண்ட ஆலம் – பிண்டமாகிய ஆலம். குண்டு ஆலம் – ஆழ்ந்த வெறுப்பு: ஆலம் – நஞ்சு, வெறுக்கத் தக்கது, வெறுப்பு. குதிரை – (பாய்) மா பிண்டத்துட்படுதல். உடம்பின் வயப்பட்டு இரைதேடி அலமரல். பெருமுளை – உள்ளத்தில் எழும் இறையன்பும் வழிபாடும். (377)

## 22. சருவவியாபி

சருவ வியாபி என்னும் தொடர் எங்கும் எப்பொருட் கண்ணும் நிறைந்திருப்பவன் என்னும் பொருளைத் தரும். இது முதல்வனையே குறிப்பது; ஆயினும், ஆன்மா என்னும் சொல் வியாபகம் என்னும் பொருளைத் தருவது. மேலும் அச்சொல் சீவான்மா பரமான்மா இரண்டற்கும் பொதுவாக உபநிடதங்களில் ஆளப்படுகிறது. வியாபகமாவது 'அவையே தானே ஆதல்' என்னும் இலக்கணம் சிவஞான போதம் இரண்டாம் பாதம் முதலதிகரணத்தாற் பெறப்படுகிறது. முதற்பொருள் அடக்கு நிறைவுள்ளது (வியாபிப்பது); உயிரும் தளையும் அடங்கு நிறைவுள்ளவை (வியாப்பியம்); உயிர் முதற்பொருளை நோக்க வியாப்பியமாயினும், தன்கீழ் உள்ள தத்துவங்களை நோக்க வியாபகம்; ஏனைப் பொருள்களும் தத்தம் எல்லைவரை காரக சத்தியான் வியாபித்தல் உடைய என்றாற்போன்ற நுண் கருத் துக்கள் உணரத்தக்கவை.

அறிவுடைமை (சித்தாதல்) பரமான்மா சீவான்மா இரண்டற்கும் பொதுவாதல் போன்றே, வியாபகமாதலும் இரண்டற்கும் பொதுவே ஆகும். சீவான்மா மூலமலத்தால் தடுக்கப்பட்டு ஏகதேசப்படினும் திருவருளைச் சார்ந்து மலவலியைக் கடந்து நிற்கையில் தன் வியாபகம் முற்றும் விளங்கப்பெறும். ''தமியேன் உளம்புகுத்தல் யானே உலகென்பன் இன்று'' (பாசத்தின் நீங்கித் தனித்துள்ள என்கண் சிவோகம பாவனையால சிவன் புகுந்து நிற்றலின், அச்சார்பு பற்றி, இம்முத்திக் காலதது யானே உலகெலாம் ஆயினேன் என்பேன்) என மெய்கண்டதேவர் கூறுதல் நினைவிற் கொள்ளத்தக்கது. இவ்வதிகாரம் சிவனது நிறைவும், அவனைச் சார்ந்த ஆன்மாவினது நிறைவும் உணர்த்துகின்றது.

**ஏயுஞ் சிவபோகம் ஈதன்றி யோரொளி**
**ஆயும் அறிவையும் ஆயா உபாதியால்**
**ஏய பரிய புரியும் தனதெய்தும்**
**சாயும் தனது வியாபகந் தானே.** 3025

க—து: இஃது ஆன்ம வியாபகம் உணர்த்துகின்றது.

பொ—ரை: அழுந்தியறியும் அறிவொளியையுடைய ஆன்மா (ஓர் ஒளி), தன் இயல்பால் சிவத்தைச் சார்ந்து சிவ போகம் நுகர்தற்கு உரியது. ஆயினும், அது நுணுகி அறியாதபடி செய்யும் மலம் மாயை கன்மம் என்னும் தடையால் தனக்கு அறிவை விளக்கும் வியஞ்சகங்களையும் ஆராயும்; வினைக்கு ஈடாக வந்த பருவுடலையும் தனது இடமாகவும் உருவமாகவும் பொருந்தும். இவ்வாறு தனக்கு உரிய வியாபக இயல்பு கெட்டு நிற்கும்.

வி—கு: ஓர் ஒளி சிவபோகம் ஏயும்; ஆயா உபாதியால் ஈது அன்றி அறிவையும் ஆயும்; பரிய புரியும் தனது (ஆக)

எய்தும்; தனது வியாபகம் சாயும் – எனக் கொண்டு கூட்டி உரைக்க.

ஓர் ஒளி – வினைத்தொகை. நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஓர்தல் – ஈண்டுச் சார்ந்ததன் வண்ணமாய் அழுந்தி அறிதல். ஆயா உபாதி – ஆயாமைக்கும் காரணமாகிய உபாதி. உபாதி – இடையூறு, தடை அது மலம், மாயை, கன்மம் என மூவகைப்படும். இவற்றுள் மலம் – ஆன்ம ஆற்றலை விளங்கவொட்டாது தடுக்கும் மாயை – அதனை ஒரு புடைப் படவைக்கும்; கன்மம் – உலகப் பொருள் நுகர்ச்சியிற் செலுத்தும். ஈது அன்றி – இச்சிவபோகம் துய்த்தலை விட்டு; அன்றுதல் – மாறுபடுதல். புரி – உடல். தனது – ஆறன் உருபு – ஒற்றுமைக் கிழமையினும், பிறிதின் கிழமையினும் வந்து, பெயர்த்தன்மைப் பட்டுத் தன் இயல்பையும், போகம் நுகர் இடத்தையும் குறித்து நின்றன. சாய்தல் கெடுதல். ஒளி போறலின் அறிவை ஒளி என்றார்.

உபாதியால் ஆய்தலும், எய்துதலும், சாய்தலும் ஆம் எனவே, சிவபோகம் ஏய்தல் – உபாதியின் நீங்கிய தனது இயற்கையால் என்பது பெற்றாம்.

**நானறிந் தப்பொருள் நாட இடமில்லை**
**வானறிந் தங்கே வழியுற விம்மிடும்**
**ஊனறிந் துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்**
**தானறிந் தெங்குந் தலைப்பட லாமே.** 3026

க–து: இஃது ஆன்மாத் தன்வியாபக நிலையைத் தலைப்படுமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: யான் என நிற்கும் ஆன்மாத் தன் அறிவால் எல்லாம் கடந்து நிற்கும் முதல் பொருளைத் தேடுவதற்கு

வழியில்லை; பரவியோமம் எனப்படும் அருள்வெளியைத் தலைப்பட்டு அதன் வழியிற் பட்டு நிற்பின், அப்பொருளே விளங்கி வெளிப்படும். அதனைத் தலைப்படுதற்குரிய படிவழி யாவது யாதோ எனின், உனக்குக் குறையைச் செய்யும் தத்துவக் கூட்டங்களை இது, இது எனச் சுட்டியறிந்து கழித்து, உன் உயிர்க் குயிராய் நின்று செலுத்தி வரும் ஒள்ளிய சுடராகிய திருவருளை உணர்விறந்து நின்று உணர்ந்தபின், அதனோடு ஒற்றித்து நின்று எவ்விடத்தும் முதற் பொருளைத் தலைப்படுதல் ஆகும்.

வி–கு: ஊன் – ஊனம், குறைவு; அஃதாவது ஏகதேசப் படுதல்; ஈண்டு அதனை விளைத்து நிற்கும் தத்துவங்களைக் குறித்து நின்றது. அறிந்து – சுட்டியறிந்து நீங்கியபின். உள் – உயிர்.

உயிரின் அறிவு ஒன்றை அறிந்து அது தனக்கு வேறு என ஒருவுதலும், தனக்கு உறவு எனக்கண்டு அழுந்தி அதுவாதலும் என்னும் இரு பயனையும் ஒருங்கே பெறுவது. பொருள்தோறும் இதனைக் கண்டு கொள்ளுதல் எளிது. ஒன்று நேதி, நாஹம் (இஃது அன்று, நான் அல்லேன்) என்னும் வடிவிலும், மற் றொன்று ஸோஹம் (அது நான்) என்னும் வடிவிலும் நிகழும்; ஸோஹம் என அழுந்துதலும், நேதி என ஒருவுதலும் செய்து வரும் இவை முத்தி நிலைக்கே உரியன எனக் கருதற்க! உலக நுகர்ச்சியிலும் இவை உள்ளன எனக் கண்டு தெளிக. இங்ஙனங் கண்டு தெளிந்தார்க்கே சைவ சித்தாந்த உண்மைகள் எளிதின் விளங்கும்.

இனி, இத் திருமந்திரத்தில் 'வான்' என்றது வானை உற்றவர்கள் எனவும், அவர் வழியின் நின்று ஒழுகின் முதற் பொருள் வெளிப்பட்டு விளங்கும் என்றும் உரைப்பாரும் உளர்.

பின் இரண்டு அடிகளுக்கு, 'உடம்பின்கண் உடனின்று அறிவித்து உயிர்ப்பாய் நிற்கும் ஒண் சுடராகிய முதல்வனை அறிந்தபின், யானே உலகெலாம் ஆயினேன் எனும்படி விச்சுவ ரூபியாய் நிற்றல் ஒருவனுக்குக் கைகூடும்' என உரைப்பினும் அமையும்.

இங்ஙனம் எங்குந் தலைப்பட்டார் வாமதேவன் கண்ணன், மெய்கண்டதேவர் முதலாயினார் என்பது அறிக.

இப்பொருட்கு: ஊன் – உடம்பு, அறிந்து – அறிவித்து என உரைக்க. இறைவன் அசபை வடிவில் உயிர்ப்பாய் இருத்தலை,

**என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்(கு)**
**என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே**

என்னும் அப்பர் திருமொழியானும்,

***ஊனங் கத்துயிர்ப் பாய்உல கெல்லாம்***
***ஓங்கா ரத்துரு வாகிநின் றானை***

என்னும் நம்பி ஆரூரர் திருமொழியானும் உணர்க.

**கடலிடை வாழ்கின்ற கௌவை உலகத்(து)**
**உடலிடை வாழ்வுகொண் டுள்ளொளி நாடி**
**உடலிடை வைகின்ற உள்ளுறு தேனைக்**
**கடலின் மலிதிரைக் காணலும் ஆமே.** 3027

க–து: இது துன்ப உலகில் இன்பம் காணுமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: பிறவிக் கடலில் துன்ப அலைகளால் மோதப் பட்டு உடம்பாகிய கலத்தில் செல்லும் உயிர்கள், ஆங்கிருந்த படியே அவ்வுடம்பின் கண்ணே தோன்றாத் துணையாய் வாழ்வு கொண்டு உடனுறுகின்ற அருளொளியை நாடி, அதன் முதலாக ஆங்கு என்றும் உள்ளதாகிய பேரின்பச் சிவனை, கடலில் மேன்மேலும், தோன்றிக் கரையைப் பொருந்துகின்ற அலை களைக் காணுமாறுபோல, இன்ப அலையாகத்தான் பருகவும் படியவும் ஆமாறு கண்டு நுகர்தலும் அமையும்.

வி–கு: கௌவை – துன்பம், ஒலி. கடல் உருவக மாதலின் பிறவிக்கடல் என உரைக்கப்பட்டது. ஏனையவை குறிப்பான் உணரப்படுவன. உள்ளொளி – திருவருள் ஒளி; தேன் – பேரின்பச் சிவன். திரைபோலக் காணலும் ஆம் என்க. (380)

**பெருஞ்சுடர் மூன்றினும் உள்ளொளி யாகித்**
**தெரிந்துட லாய்நிற்கும் தேவர் பிரானும்**
**இருஞ்சுடர் விட்டிட் டிகலிடம் எல்லாம்**
**பரிந்துடன் போகின்ற பல்கோரை ஆமே.** 3028

க–து: இது முதல்வன் வியாபகம் உணர்த்துகின்றது.

பொ–ரை: ஞாயிறு, திங்கள், தீ எனும் பேரொளி மூன்றினும் சோதிக்குட் சோதியாய் விளங்கி அவற்றைத் தன் உருவாய்க் கொண்டு நிற்கும் முதல்வன் ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் மாறுபட்ட இடங்களில் எல்லாம் தன் அருளொளி யைப் பரப்பி, உயிர்கள் தோறும் இரக்கம் கொண்டு உடன் செல்கின்ற பெருகும் சத்தித் தொகுதியாய் அமைவன்.

வி–கு: பெருஞ்சுடர் மூன்று – மும்மூர்த்திகள் எனினும் அமையும். தெரிதல் – விளங்குதல். உடன் போதல் – உடனாய்

நிற்றல். பல்கு ஓரை எனப்பிரித்துப் பெருகா நிற்கும் தன் சத்தியின் தொகுதி என உரைக்க. ஓரை – மகளிர் கூட்டம், இங்குச் சத்திகளின் கூட்டத்தைக் குறித்து நின்றது. ஐஞ்சத்தி, முச்சத்தி, நவசத்தி முதலாகப் பெருகுதலைச் சிவஞான பாடியம் இரண்டாம் பாதம் நான்காம் அதிகரணத்திற் காண்க. உடலாய் நிற்றல் கலப் பினால் அவையேயாதல்; உடன் போதல் – உயிர்க்குயிராய் நின்று செலுத்துதல். இவ்வத்துவிதக் கலப்பு தான் சத்தியோடு இயைந்த தாதான்மியமாய்க் குண குணியாய் நிற்றலால் ஆவது என்பார் பல்கு ஓரை ஆம் என்றார்.

சுடர்விட்டிடுதல் – அங்கிப்புறத் தொளியாய் இலகுதல் முதலிய வெளிப்பாடு. சுடர்விட்டுளன் எங்கள் சோதி – என்னும் திருப்பாசுரம் நினைக்க.

கோரை – கோரைப்புல். புல்லிது, நுண்ணிது எனக் கொண்டு உரைப்பாரும் உளர். (381)

**உறுதியி னுள்வந்த உள்வினைப் பட்டும்**
**சிறுதியின் வீழ்ந்தார் இரணம தாகும்**
**இறுதியின் உள்ளொளி திப்பிய மூர்த்தி**
**பெறுதியின் மேலோர் பெருஞ்சுடர் ஆமே.** 3029

க–து: இஃது இறைவன் அன்பர்க்கும் அறிவர்க்கும் அருள்புரியுமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: தாம் செய்வன தாம் கருதும் பயனை விளைத்தேவிடும் என்னும் மனத்திட்பத்தில், தமக்கு வந்த நுகர் வினையை நுகர்ந்து வந்தும், முடிவில் தன்னை.(முதல்வனை) விரும்பி வழிபட்டார்க்குப் பொன் போன்று அவர் வேண்டுவன வற்றைக் கூட்டுவிப்பன் முதல்வன். அவன் உள்ளிருந்து நினைப்

பிக்க, அந்நினைவைத் தம் நினைவாகக் கருதுவார்க்கு அவர் விரும்பியவாறே செய்யும் உலகங்கடந்த உருவினன். பயன் கருதாது தன் அருள்வழி நிற்கும் மேலோர்க்குப் பேரறிவுப் பிழம்பாய்த் தன்னையே பேறாகக் கொடுப்பன்.

வி–கு: உறுதி – மனத்திட்பம். உள் – முதலாவது, மூன்றாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. உள் இரண்டாவது வினைத்தொகை; உள்ளுதல் – நுகர்தல். நுகரப்படும் வினை என்க. படுதல் – வினைப்பயன் நுகர்ந்து பின்னும் செய்து கொள்ளுதல். இறுதியின் என்பது தாம் செய்த வினை கருதிய பயனை விளைக்காமையின், எனை ஆளும் ஈசன் செயல் என முடிவில் வரும் உணர்வு நிகழ்ச்சியைக் குறித்து நின்றது. வீழ்தல் – விரும்புதல், இரணம் – பொன். ஆகும் – போலும், செய்யும் என்முற்று. சிறுதி – சிறு இடமாகிய புத்தி. திப்பியம் – தெய்வத் தன்மை. பெறுதி – பயன். பெறுதி இல் மேலோர் – மேலோர்க்கு என நான்காவது விகாரத்தால் தொக்கது. உள் ஒளி என்பது உள்ளே ஒளிக்கும் எனப் பொருள்படும்; 'ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே' என்னும் திருவாசகத்தால் அப்பொருள் விளங்கும். (382)

**பற்றி னுள்ளே பரமாய பரஞ்சுடர்**
**முற்றினும் முற்றி முளைக்கின்ற மூன்றொளி**
**நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரும்**
**மற்றவ னாய்நின்ற மாதவன் தானே.** 3030

க–து: இஃது இறைவன் உயர்ந்தோர்க்கு அனுபவப்படு மாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் ஒருவனது அறிவாற் பற்றப்படும் பொருள்களுள் உயர்வற உயர்ந்த பேரறிவுப் பிழம்பாம்; எப்

பொருளினும் யாண்டும் நிறைந்து, ஆங்காங்கு விழைவு, அறிவு, ஆற்றல் என்னும் மூவகைப்படத் திகழும் ஒளி மயமானவன் அவன்; யோகியர்க்குப் புருவ நடுவில் நினைந்த உருவாய் நிலைத்தவன்; மோனிக்கு அவனாய் நின்றருளும் பேரின்ப சத்தியோடு இயைந்தவனும் அவனே.

வி–கு: நினைவாய் நிலைதரும் என்பதற்கு நினைப் பிக்கும் பிரேரகனாய் (செலுத்துவோனாய்) நிற்பவன் எனினும் அமையும். மாதவன் – மா எனப்படும் பரம ஐசுவரிய உருவச் சத்திக்குத் தலைவன். மா என்பதை முதற் குறையாகக் கொண்டு உமாதவன் எனினும் அமையும்; அவனாய் நிற்றல் சிவோஹம் பாவனையால் அவனைத் தானாகச் செய்து நிற்றல். 'சேர்வார் தாமே தானாகச் செயுமவன்' என்னும் திருஞானசம்பந்தர் திரு மொழியைக் கருதுக. (383)

**தேவனும் ஆகும் திசைதிசை பத்துளும்**
**ஏவனும் ஆம்விரி நீருல கேழையும்**
**ஆவனும் ஆம்அமர்ந் தெங்கும் உலகினும்**
**நாவனும் ஆகி நவிற்றுகின் றானே.** 3031

க–து: இதுவும் அது.

பொ–ரை: சிவபிரான் உண்மை ஒளியுடையோனாய் விளங்குவன்; பத்தாகிய எத்திசையினுள்ளும் பொருள்களைச் செலுத்தவோனும் ஆவன். விரிந்த நீராகிய கடலாற் சூழப்பட்ட ஏழாகிய உலகு அனைத்தையும் ஆக்குவோனும் அவன்; எவ் விடத்து எவ்வுயிர்களினும் அவற்றின் வாக்கில் நின்று அவற் றிற்கும் பிறவற்றிற்கும் சவிகற்ப உணர்வை விளைப்போனாயும் உளன்.

வி–கு: தேவன் – தன்னொளி உடையோன்; இனியன். இது சிவபிரானுக்கே உரிய இயற்பெயர் என்பது பெரியோர் களது கருத்து. மகாதேவன் என்னும்போது, மஹத் (பெருமை, தொழப்படுந் தன்மை) என்னும் அடை இனஞ்சுட்டாது தேவனது இயல்பைக் குறிக்கவந்தது என்பர் அவர்; செஞ்ஞாயிறு என்பதிற் போல. தேவ தேவன், மாதேவன் என்று உரைப்பினும் அமையும். ஏவன் – ஏவுவோன். ஏ – ஏவு. செலுத்து. தேவன், ஏவன் என்னும் பெயர்கள், எந்தத் தேவ சவிதாவினது பர்கஸ் (ஒளி, பராசத்தி) உண்டோ அந்த முதன்மையான பொருளைத் தியானிக் கின்றோம்; அவர் எங்கள் அறிவைச் செலுத்தி விளக்குக'' என்னும் பொருளைத் தரும் காயத்திரியை நினைவூட்டுதல் காண்க. ஏவன என்பதை வினாப்பெயராகக் கொண்டு, ஊன், உயிர் முதலிய எல்லாமும் ஆகின்றான் என உரைப்பினும் அமையும். ஆவன் – ஆக்குவோன் எனப் பிறவினைப் பொருள் மேல் நின்றது. நவிற்றுதல் – நவிலச் செய்தல், பயில்வித்தல். பொதுவாக எல்லாவுயிர்களையும் தங்கருத்தை வெளியிடும்படி பயிற்றிச் சீவன் முத்தர் நாவில் நின்று அருமறைகளை அன்று முதல் இன்றுவரை உரைத்து வருகின்றான் என்பது கருத்து.

(384)

**நோக்குங் கருடன் நொடிஏழ் உலகையும்**
**காக்கும் அவனித் தலைவனும் அங்குள**
**நீக்கும் வினையென் நிமலன் பிறப்பிலி**
**போக்கும் வரவும் புணரவல் லானே.** 3032

க–து: இஃது இறைவன் தான் விகாரப்படுதலின்றியே எல்லாம் செய்ய வல்லன் என்பது உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் தன்னால் முன்னே அழித்து (மீளப் படைக்கப்பெற்ற) ஏழ் உலகையும் பிறர் காணாதபடி

சிதாகாசத்தை இடங்கொண்டு நோக்கி வரும் கருடன் போன்ற வன்; பிறர் காணும்படி முறை செய்து காக்கும் உலகத் தலைவ னாகிய அரசனும் அவனே யாவன். அவ்வுலகில் உள்ள வினைப் பயனை நீக்கி அருள் செய்யும் நின்மலனாகிய ஒண்குருவும் அவனே. அவன் தன் இயல்பால் போதல் வருதல் சேர்தல் என்பவை இலனேனும், எப்பொருளையும் அதிட்டித்து நிற்கும் தன் ஆற்றலால் அவற்றை மேற்கொள்ளவும் வல்லன்.

வி-கு: கருடன் – புள் அரசு ஆதலும் சேய்மைக்கண் ஆகாயத்தின் நின்றே நிலத்தில் நிகழ்வனவற்றை நுண்ணிதின் நோக்கவல்லதாதலும் பற்றி, உவம ஆகுபெயராய் முதல்வனைக் குறித்து நின்றது. நொடி – நொடித்து, அழித்து, நொடித்தலும், நோக்கலும் (காத்தலும்) கூறவே படைத்தலும் உடன்கொள்ளப் பட்டது. அங்குளவினை எனக் கூட்டுக; அங்கு உள்ளவற்றின் வினை என்றபடி.

இது முதல்வன் உலகங்கடந்து நின்றும் அதனை அதிட்டித்து நின்று உயிர்களுக்குப் பந்தமும் வீடும் தந்தருளுதல் உணர்த்திற்று. (385)

**செழுஞ்சடை யன்செம் பொனேயொக்கும் மேனி**
**ஒழிந்தன வாயும் ஒருங்குடன் கூடும்**
**கழிந்திலன் எங்கும் பிறப்பிலன் ஈசன்**
**ஒழிந்தில கேழுல கொத்துநின் றானே.** 3033

க-து: இஃது இறைவன் எல்லாமாய் அல்லனாதல் உணர்த்துகின்றது.

பொ-ரை: செழுமையான சடையை உடைய செம் பொன் போன்ற நிறம் உள்ள மேனியனாகிய பிரான் தான்

அல்லாத பசு பாசங்கள் ஆகிக் கலந்து நின்று அவையேயாய் நிற்பன். எங்கும் நீங்காது நிறைபவன் அவன். பிறப்பு இறப்பு இல்லா தவன்; எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவன். மறைந்தும் தோன்றி யும் வரும் உலகேழையும் ஒத்தும் அவற்றின் வேறு ஆகி நின்றான்.

வி–கு: ஒழிதல் – முன்னையது வேறாதல், பின்னையது அழிதல். இலகுதல் – விளங்கிக் காரிய வடிவாய்த் தோன்றுதல். (386)

**உணர்வும் அவனே உயிரும் அவனே**
**புணர்வும் அவனே புலனும் அவனே**
**இணரும் அவன்றன்னை எண்ணலும் ஆகான்**
**துணரின் மலர்க்கந்தம் துன்னிநின் றானே.** 3034

க–து: இதுவும் அது

பொ–ரை: சிவபிரானே உயிராகவும், அதன் உணர்வாகவும் உயிரோடு சேர்க்கப்படும் உடல் கரணமாகவும், அவற்றான் அறிந்து நுகரப்படும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்களாகவும் உளன். இங்ஙனம் எல்லாமாய் உயிரை இணைந்து நிற்கும் அவன் தன்னை அறிந்து நினைக்கவும் ஆகாதபடி உயிரின் அறிவைக் கடந்திருப்பான். கொத்தாக உள்ள மலரின்கண் ஒன்றி நிற்கும் வாசம்போல, அவன் உயிரின்கண் பிரிப்பின்றி இணைந்து இருக்கின்றான்.

வி–கு: இணர்தல் – கூடி நிற்றல். துணர் – கொத்து. (387)

**புலமையின் நாற்றமில் புண்ணியன் எந்தை**
**நலமையின் ஞான வழக்கமும் ஆகும்**

**விலமையில் வைத்துள வேதியர் கூறும்**
**பலமையில் எங்கும் பரந்துநின் றானே.** 3035

க–து: இதுவும் அது.

பொ–ரை: எமக்குத் தந்தையாக உள்ள இறைவன் செயற்கை அறிவின்கண் தோன்றுதல் இல்லாத தூயோன்; நன்மையைக் கடைப்பிடித்தலால் விளங்கும் மெய்யுணர்வில் இயங்குவோனும் ஆவன். தம்மை உயர்நிலையில் வைத்துள்ள வேத மொழியினர் கூறும் பலவகை வித்தைகளிலும் பரவி நின்றான்.

வி–கு: புலமை – கல்வி அறிவு; நாற்றம் – தோற்றம், முளைத்தல். நலமை – நன்மையைக் கடைப்பிடித்தல். வெறும் புலமையில் தோன்றாது நல்லொழுக்கத்தின் பயனாகக் கிடைக்கும் ஞானத்தில் தோன்றுதல் உடையன் என்பது முன் இரண்டு அடியின் பொருள். விலமை – விலைமை. உயர்வு, பலமை – பல்வகை. அவை வித்தைகள் (அக்ஷி வித்தை, தகர வித்தை போன்ற உபாசனா முறைகள்) பரந்து நிற்றல் – பரவி ஊடுருவி நிற்றல். (388)

**விண்ணவ னாயுல கேழுக்கு மேலுளன்**
**மண்ணவ னாய்வலஞ் சூழ்கடல் ஏழுக்கும்**
**தண்ணவ னாயது தன்மையின் நிற்பதோர்**
**கண்ணவ னாகிக் கலந்துநின் றானே.** 3036

க–து: இதுவும் அது.

பொ–ரை: இறைவன் ஏழ் உலகுக்கு மேல் அருள் வெளியில் உளன்; எழுகடல் வலஞ்சூழும் தீவுகளினும் திருத் தலங்கள் தோறும் விளக்கமாய் உளன். தண்ணளியுடையோனாய்

அத்தன்மையிலுள்ள அறிவு வடிவினனாய் உயிர்கள்தோறும் கலந்து நின்றான்.

வி–கு: கண் – அறிவு; தண் – தட்பம். அது தன்மை – அதுவாந்தன்மை. அவ்வப்பொருளேயாய் ஒன்றி நிறகுந் தன்மை. (389)

**நின்றனன் மாலொடு நான்முகன் தானாகி**
**நின்றனன் தான்நிலங் கீழொடு மேலென**
**நின்றனன் தான்நெடு மால்வரை ஏழ்கடல்**
**நின்றனன் தானே வளங்கனி யாயே.** 3037

க–து: இதுவும் அது.

பொ–ரை: சிவபிரான் காப்போனும் படைப்போனும் தானே ஆகி நின்றான்; தானே ஆதார சத்தியாகி உலகின் கீழும் மேலுமாகி நின்றனன்; நீண்ட பெரிய மலைகளாகவும் ஏழு கடல் களாகவும் நின்றான்; அன்பர்க்குப் பேரின்பச் சாறுமிக்க கனியாக உண்ணப்படுவோனுமாய் அவனே இருந்தான்.

வி–கு: மால், நான்முகன் என்பவை அவர் தம் தொழில் குறித்து நின்றன. அவர்களைத் தன் அதிகார சத்தியால் அதிட் டித்து நிற்பன் என்பது கருத்து. (390)

**புவனா பதிமிகு புண்ணியன் எந்தை**
**அவனே உலகில் அடர்பெரும் பாகன்**
**அவனே அரும்பல சீவனும் ஆகும்**
**அவனே இறையென மாலுற்ற வாறே.** 3038

க–து: இதுவும் அது.

பொ–ரை: சிவபிரான் புவனை என்னும் உருவில் உள்ள சத்திக்குத் தலைவன்; பலவகைப்படும் புண்ணியங்களின் வடிவில் அருள்புரிவோன். அவனே உலகில் பிறரை நெருங்கிச் செலுத்தும் பெரிய தலைவன். எண்ணித்தொகை கூறமுடியாத பலவகை உயிர்களாக நிற்போனும் அவனே. உணமை உணா வுடையோர் இவற்றை உணர்ந்து அவனே உலகத் தலைவன் என அவன்கண் அன்பு செலுத்தி வருதல் கடைப்பிடிக்கத் தக்கது.

வி–கு: புவனபதி என்பது புவனாபதி என விகாரப் பட்டது எனினும் அமையும். எந்தை – எம்மால் தொழப்படும் முதல்வன் என்னும் கருத்துப்பட நின்றது. அடர்தல் – நெருங்குதல், அதுவே எனும்படி கலந்து நிற்றல். பாகன் – நடத்து வோன். மால் உற்றவாறு – மெய்யுணர்ந்தோர் என்னும் எழுவாயும் கடைப்பிடித்தற்பாற்று என்னும் பயனிலையும் அவாய் நிலையான் வருவிக்கப்பட்டன. (391)

**உண்ணின் றொளிரும் உலவாப் பிராணனும்**
**விண்ணின் றியங்கும் விரிகதிர்ச் செல்வனும்**
**மண்ணின் றியங்கும் வாயுவு மாய்நிற்கும்**
**கண்ணின் றிலங்கும் கருத்தவன் தானே.** 3039

க–து: இதுவும் அது.

பொ–ரை: முதல்வன் உடம்பினுள் நின்று புறத்தும் அகத்தும் இயங்கும் உயிர்ப்பாயும், ஆகாயத்தில் நின்று தன் கதிர்களை விரித்தும் ஒடுக்கியும் நிலவுலகை நடாத்தும் பகலவ னாயும், நிலவுலகில் நின்று இயங்கும் காற்றாயும், உயிர்கள் கருத்தின்கண் நின்று கருதுவிப்போனாயும் உளன்.

வி–கு: ஒளிர்தல் – உயிரின் இருப்பைத் தெரிவித்து இயங்குதல். கண் – கருத்து. (392)

**எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் அவ்வழிப்**
**பண்ணும் திறனும் படைத்த பரமனைக்**
**கண்ணிற் கவரும் கருத்தில் அதுஇது**
**உண்ணின் றுருக்கியோர் ஆயமும் ஆமே.** 3040

க–து: இது முதல்வனைச் சிந்திதனாக் கண்டு வழிபடு மாறு உணர்த்துகின்றது

பொ–ரை: எண் எனப்படும் நூல்களையும், எழுத்தெனப்படும் கலைகளையும், குழுவாகக் கூடிச் செய்யும் செயல்களையும், அவற்றால் தோன்றும் பண், திறம் (திறத்திறம்) என்பவற்றையும் படைத்து உயிர்களுக்கு அறிவை வளர்க்கும் மேலோனை, கருத்தில் வைத்துணரும் உள்ளத்தில் சேய்மையனாகித் தான் அணுக்கனாய், உள்ளத்தில் நின்று அறியாமையைத் தேய்த்து அன்பை வளர்த்து உணரப்படும் ஊதியமும் ஆவன்.

வி–கு: கண்ணில் – கருதுதலினால்; கருத்து – உள்ளம். அது இது என்பதன்பின் ஆகி என ஒரு சொல் வருவிக்க. அது – சேய்மைக்கண் உள்ள பொருளாகிய தான். இது – அணிமைக்கண் உள்ள பொருள். ஆயம் – ஊதியம்; அருளின்பம் பொழியும் மேகம் எனினும் அமையும்

இனி, எண்ணும் எழுத்து – கணிக்கப்படும் திருவைந்தெழுத்து, பிரணவம் முதலியவை; இனஞ்செயல் – அக்கணிப்போடு இனமாகச் செய்யப்படும் பூசை, தியானம், திருவேடம் பூணுதல் முதலியவை; அவ்வழிப்பண்ணும் திறனும் – அந்நிலையில் துதித்தற்குரிய பண், திறம் முதலிய இசைவகைகள் – எனினும் அமையும். (393)

**இருக்கின்ற எண்டிசை அண்டம் பாதாளம்**
**உருக்கொடு தன்னடு வோங்கவிவ் வண்ணம்**

**கருக்கொண்டே எங்குங் கலந்திருந் தானே**
**திருக்கொன்றை வைத்த செஞ்சடை யானே.** 3041

க–து: இது முதல்வன் உலகப் பொருள்களின் கரு எனப்படும் முதற்காரணம் தன் கண் சார்தலின் அதனைக் காரியப்படுத்துமாறு உணர்த்துகின்றது.

பொ–ரை: திருக்கொன்றையை அடையாள மாலையாக தன் விரிசடையிற் கொண்ட சிவபிரான். எண்டிசையினும் பாதாளத்தினும் இருக்கின்ற அண்டங்கள் தன் சங்கற்பத்தினால் காரியப்படுமாறு அவற்றின் கருவைத் தன்கண் அடங்கக் கொண்டு எப்பொருளினும் கலந்திருந்தான்.

வி–கு: தன் நடு – தன் நெஞ்சம், அஃதாவது திருவருள ஒடுங்குதல் – காரியப்படுதல்.

'இது முதற்கண் சத்தேயாக ஒன்றாகப் பிரிப்பின்றி இருந்தது; அது மக்கள் பொருட்டுப் பலவாக ஆவேனாக எனக் கருதிற்று' என்னும் உபநிடதக் கருத்தை விளக்கியதாயிற்று.

(394)

**பலவுடன் சென்றஅப் பார்முழு தீசன்**
**செலவறி வாரில்லை சேயன் அணியன்**
**அலைவிலன் சங்கரன் ஆதிஎம் மாதி**
**பலவில தாய்நிற்கும் பான்மைவல் லானே.** 3042

க–து: இஃது உலகப் பொருள்களோடு கலந்து நிற்கும் முதல்வன் அப்பொருள்கள்போல மாற்றம் அடைதலும் பலவாதலும் இலன் என்பது உணர்த்துகின்றது.

25

பொ–ரை: மேலே குறித்த உலக முழுதும் தன் காரியம் பலவுடன் மறைந்தன. ஆயினும், அதுபோல, அவற்றை நடத்தும் ஈசனது செலவை அறிந்தார் ஒருவரும் இல்லை. அவன் புறத் தார்க்குச் சேயனாய் வழிபடுவார்க்கு அணியனாய் உளன்; போக்கு வரவு இல்லாதவன்; இன்பஞ் செய்பவன்; எம்மால் ஆதி என்று கொள்ளப்பட்ட அவனே எவற்றிற்கும் முதலாய் உள்ளவன். தான் பலவமாய் அப்பன்மை தன் கண் சாராது ஒருவனென்றே நிற்கும் திறம் வல்லவன் ஆவன்.

வி–கு: ஏகனுமாகி அனேகனுமானவன் என்பது நான்காம் அடியின் கருத்தாம். ''தன் ஆளும் ஆற்றல்களால் எல்லாவற்றையும் அடக்கி ஆளும் உருத்திரன் ஒருவனே இரண்டாமவனாக நிற்பான் அல்லன்'' என்னும் சுருதிப்பொருள் பற்றியது இது. (395)

**அதுவறி வானவன் ஆதிப் புராணன்**
**எதுவறி யாவகை நின்றவன் ஈசன்**
**பொதுவது வான புவனங்கள் எட்டும்**
**இதுவறி வான்நந்தி எங்கள் பிரானே.** 3043

க–து: இது முதல்வன் எல்லாமாயும் அவற்றைக் கடந்து நிற்றல் உணர்த்துகின்றது.

பொ–ரை: முதல்வன் முத்திநிலைக்கண் ஞாதிருவும், ஞானமும் தானேயாய் நிற்பவன்; எல்லாவற்றிற்கும் முதலாக நின்ற பழையோன். தன்னாற் படைக்கப்பட்டு விளங்கும் எப் பொருளும் தன்னை அறியாதபடி கடந்து நின்றவன்; ஆயினும் அவற்றை அடக்கி ஆள்பவன்; உயிர்கள் பலவற்றுக்கும் பொது உறைவிடமான புவனங்களைத் தான் தன் அருளால் எட்டுவன். இவ்வுண்மையினை அறிந்து எனக்கு உணர்த்துவோன் எங்கள் தலைவனாகிய திருநந்திதேவனே ஆவன்.

வி–கு: அது அறிவு ஆனவன் – அதுவும் அறிவும் ஆனவன். அது – உயிர், அறிவு – அதன் அறிவு; ஞேயம் முதல்வன்; அவன என்ன இரண்டையும் தன் கண் அடங்கக் கொள்ளுதல் பற்றி அதுவும் அறிவும் ஆனவன் என்றார். இவை முறையே ஞாதுருவும ஞானமும் ஆர்தல் ஓர்ந்துணர்க. எட்டுதல் – கிட்டுதல்.

ஒன் குரவன் அருளாலன்றி இவ்வுண்மைகள் விளங்கா மையின், அது அறிவான் நந்தி எங்கள் பிரானே என்றனர். (396)

**நீரும் நிலனும் விசும்பங்கி மாருதம்**
**தூரும் உடம்புறும் சோதியு மாய்உளன்**
**பேரும் பராபரன் பிஞ்ஞகன் எம்மிறை**
**ஊரும் சகலன் உலப்பிலி தானே.** 3044

க–து: இதுவும் அது.

பொ–ரை: முதல்வன் ஐம்பூதங்களாகவும், சோறு நீர் முதலியவற்றால் நிரம்பும் உடம்பும், அதன்கண் உயிர்க்கு விளக்கம் தரும் சோதியுமாய் நிற்பன். அவன் பெயர்களைக் கூறின் பராபரன் (மேலானவற்றிற்கும் மேலானவன்), பிஞ்ஞகன் (தலைக்கோலம் உடையவன்) என்பவை ஆகும்; எம் இறை யிருக்கும் இடமும் சகலன் எனப்படும் இனத்தைச் சார்ந்து முத்த னாகிய சுத்தான்மா; தான் என்றும் அழியா இயல்பினன்.

வி–கு: ஊர் என்றது இடம் என்பது படவந்தது; சுத்தான்ம சைதன்னியத்தை உருவாகவும் அச்சைதன்னியத் தின் நிலைக்களமாகிய உம்பை இடமாகவும் கொண்டவன் என்பது கருத்து. 'உடலிடங்கொண்டாய்' என்னும் திருவாசகம் உணர்க.

இதனால், முதல்வன் மக்கட்கு அருளுதற் பொருட்டு எளிவருதல் கூறப்பட்டது. (397)

**மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்**
**மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்**
**மூலன் உரைசெய்த முப்ப துபதேசம்**
**மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்றாமே. 3045**

க-து: இது இந்நூலின் பொருட்பாகுபாடும் செய்யுள் அளவும் கூறுகின்றது.

பொ.-ரை: மூலன் என்னும் பெயருடன் யாம் உரைத்தவை மூவாயிரம் தமிழ்ச் செய்யுட்கள் ஆகும்; அங்ஙனம் உரைத்தவற்றுள் முந்நூறு செய்யுள் மந்திரம் பற்றியவை ஆகும். அவற்றுள் முப்பது செய்யுள் உபதேசம் பற்றியவை ஆகும். யாம் உரைத்த இம்மூன்றும் ஒரே நூலாக அமையும்.

வி-கு: உரைத்த என்பது அன்பெறாத அகர வீற்று வினையால அணையும் பெயர். முதலாவது எழுவாய் வேற்றுமையினும், பின் இரண்டும் ஏழான் வேற்றுமையினும் பொருள் தருவன. பின் வருவன கட்டளவாய் நின்றன.

முந்நூறு மந்திரம் என்பவை நான்காந் தந்திரத்து அந்தாதித் தொடையால் தொடுக்கப்பட்ட மந்திரம் பற்றியன என்றும், முப்பது உபதேசம் என்பவை முதல் தந்திரத்தில் முதற்கண் உள்ள 30 திருமந்திரம் எனவும் கொள்வது மரபு. நான்காந் தந்திரத்தில் இப்போதுள்ளவை 535 திருமந்திரங்கள்; அவற்றிலிருந்து அசபை (30), அருச்சனை (12), நவகுண்டம் (30), பூரணசத்தி (30), ஆதார ஆதேயம் (100) ஆக 202 திருமந்திரங்களைக் கழிக்கின் எஞ்சியுள்ள 333ம் மந்திரம் எனத்

தகும். ஏழு முதல் பதின்மூன்று வரை உள்ள அதிகாரங்களாகிய, நான்காந் தந்திரத்தின் பிற்பகுதியே மந்திரம் 300 (294) ஆகலாம் எனக் கருதுவோரும் உளர்.

## 23. வாழ்த்து

**வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி**
**வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்**
**வாழ்கவே வாழ்கமெய்ஞ் ஞானத் தவன்தாள்**
**வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே.** 3046

க–து: எனக்கு அருள்புரிய வந்த பேரின்ப சத்தியோடு கூடிய பேரின்பக் கடவுளாகிய திருநந்தியின் திருவடி வாழ்க, வாழ்க! ஒண்குரவனாக எழுந்தருளி என்னைப் பிணித்திருந்த மலப் பிணிப்பை அறுத்தருளிய ஞான ஆசிரியன் பதங்கள் வாழ்க, வாழ்க! மெய்ஞ்ஞானமே வடிவாகிய பெருமான்றன் திருத்தாளிணை வாழ்க, வாழ்க! இயல்பாக மலத்தின் நீங்கியுள்ள இயற்கை உணர்வுடைய இறைவன் பாதங்கள் வாழ்க, வாழ்க!

*– ஒன்பதாந் தந்திரம் முற்றிற்று –*

சிவமயம்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

(எண் – பக்க எண்)

## *அண்மையில் வெளிவந்த ஆதீன வெளியீடுகள்*

| நூலின் பெயர் | விலை ரூ. |
|---|---|
| தேவாரம் முதல் திருமுறை (குறிப்புரையுடன்) | 60.00 |
| திருவாசகம் | 20.00 |
| திருமந்திரம் பாயிரம் முதல் மூன்று தந்திரங்கள் | 175.00 |
| திருமந்திரம் 4–ஆம் தந்திரம் (உரையுடன்) | 60.00 |
| திருமந்திரம் 5,6 தந்திரங்கள் (உரையுடன்) | 60.00 |
| திருமந்திரம் 7–ஆம் தந்திரம் (உரையுடன்) | 60.00 |
| திருமந்திரம் 9–ஆம் தந்திரம் (உரையுடன்) | 75.00 |
| சித்தாந்தப் பிரகாசிகை | 10.00 |
| அஷ்டப் பிரகரணம் (5,6) | 15.00 |
| அஷ்டப் பிரகரணம் (7) | 15.00 |
| அஷ்டப் பிரகரணம் (8) | 15.00 |
| சோமேசர் முதுமொழி வெண்பா | 10.00 |
| பார்த்திப பூஜா விதி | 10.00 |
| சித்தாந்தப் படவிளக்கம் மற்றும் சித்தாந்தப் படம் | 65.00 |
| விநாயகர் அகவல் | 10.00 |
| திருநீலக்குடி தலவரலாறு | 5.00 |
| திருமந்திரம் – வைத்தியப்பகுதி | 20.00 |
| திருக்கோழம்பம் தலவரலாறு | 5.00 |
| மகா சரசுவதி (தமிழ் – வடமொழி) | 300.00 |
| கல்யாணசுந்தரர் | 100.00 |
| பிள்ளையார் கதை | 25.00 |
| மகா கால சம்ஹாரர் (தமிழ் – வடமொழி) | 275.00 |
| திருமங்கலக்குடி ஆலய குடமுழுக்கு விழாமலர் | 50.00 |
| விதியை வெல்வது எப்படி? | 15.00 |
| நடராசப் பெருமான் (சிவாகமம் – சிற்பம் – வரலாறு) | 125.00 |
| திருவீழிமிழலை கும்பாபிஷேக மலர் | 25.00 |
| திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா (தமிழ் – ஆங்கிலம்) | 5.00 |
| திருவள்ளுவர் சித்தாந்த சைவர் | 10.00 |
| திருவாவடுதுறை ஆதீன வடமொழி ஓலைச் சுவடிகள் | 100.00 |



அருள்மிகு கோமுக்தீஸ்வரர் திருக்கோயில் திருவாவடுதுறை.